# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிகையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

கல்கி

# பொருளடக்கம்



பட விளக்கம் 95ம் பக்கம் பார்க்க

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

சோபகிருது, வைகாசி 5உ
மே, 19உ 1963

# நன்றி கூறுகிறோம் உமது நல்லாதரவுக்கு!



தரத்தையும் தன்மையையும் பற்றையும்
பெரிதெனக்கருதி, தாய்நாட்டுத்
தயாரிப்பாகிய எமது ரகத்தையே
தேர்ந்தெடுத்தது தங்கள் கரம்.
வற்புறுத்தலோ, கண்டனமோ எந்நிலையிலும்
விரும்பிய ரகத்தை விடாது பெருமையோடும்
துணிவோடும் பிடித்துவருகிறீர்கள்.

தந்திரமான பிரசாரங்களால் மதிமயங்கி-
விடவில்லை தாங்கள். இந் நாட்டில் தயாரிக்
கப்படும் சிகரெட்டுக்கள் சில, வேற்றுநாட்டு
ரகங்களோ என்று தவறாகக் கருதப்படு
கின்றன; அவற்றின் விலை உயர்வாக
இருப்பதுபோல தரமும் உயர்வாக இருந்து
விடுவதில்லை என்பதை உணர்ந்துள்ளீர்கள்.
தரமான சிகரெட்டுக்களை—ஆம், இன்றி
யமையாத அயல்நாட்டு நாணயமாற்றினைக்
காப்பாற்றித் தர உதவும் அசல் இந்திய
சிகரெட்டுக்களை - உற்பத்தி செய்வதற்கான
ஆள்பலம், நிதி, பொருள்வளம் யாவும்
படைத்ததே நம் நாடு என்பதை
நன்கறிந்துள்ளீர்கள்.

நீங்கள் காட்டும் வழியையும், புகை
பிடிப்பதிலே உங்களைப் பின்பற்றிப் பெருகி
வரும் மக்கட் திரளையும் பொறுத்துள்ளது
இவ் இனம் தொழிலின் வருங்காலம்.

அதிலே எமது பங்கை உணர்ந்து, செவ்வனே
தங்களுக்குப் பணிபுரிவதன்மூலம்
தாயகத்தின் தொழில்வளத்தை மேம்படுத்தும்
கடமையிலே எம்மை அர்ப்பணித்துக்
கொள்கின்றோம்.




கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.,
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 61 TAM

Grants' Advg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 42

# நீதித் துறையில் தலையீடு

மாளவியா – ஸிராஜுத்தின் விவகாரத்தில் ஸுப்ரீம் கோர்ட் நீதிபதி ஒருவரைக் கொண்டு பரிசிலனை நடத்தச் சர்க்கார் தீர்மானித்திருப்பது நாட்டின் நீதி நிர்வாகத்தில் மேலும் ஒரு விரும்பத்தகாத தலையீடாகும். நீதிமன்றத்தில் வழக்கைத் தொடுக்காமல், பரிசிலனை என்ற பெயரில் நீதிபதிகளை இதுபோல அரசாங்க சம்பந்தமான விவகாரங்களில் ஈடுபடுத்துவதால் சட்ட பரிபாலனத் துறையின் சுதந்திரமும், நேர்மையும் மிகவும் பாதிக்கப் படுகின்றன. 'சுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதி உறுதியாக இருந்து இத்தகைய அசம்பா விதத்தை அநுமதிப்பதற்கு மறுக்காவிடில் அது வருந்த வேண்டியதாகும்' என்கிறார் ராஜாஜி. நீதிமன்றத்தில் வழக்காடுவதற்கு முன்னால் பூர்வாங்கமாகப் புலன் விசாரணை செய்ய வேண்டும் என்று சர்க்கார் கருதினாலும் இதற்காகக் கமிஷன் ஒன்றை நியமித்துப் பரிசிலனை செய்வதுதான் யுக்தமே அன்றி, நீதி நிர்வாகத்தைச் சேர்ந்தவர்களை இதில் சம்பந்தப்படுத்துவது தவறாகும். பரிசிலனையையும் பகிரங்கமாக நடத்தாமலிருப்பது கண்டனத்துக்குரியது. மந்திரியின் ராஜிநாமாவைப் பிரதமர் ஏற்காத நிலையில், இந்த இரகசியப் பரிசிலனையில் சாட்சிகள் தயங்காமல் சத்தியத்தைச் சொல்வது இயலாத காரியமாகும்.

'சட்டத்தின் முன்னால் யாவரும் சமம்' என்று ஜனநாயக தர்மத்தைப் பற்றி ஓயாமல் பேசி வருகிறோம். என்றாலும் நடைமுறையில் சட்டத்தின் முன்னால் ஆட்சி யாளர்கள் விசேஷச் சலுகை பெறுவதைக் காண்கிறோம். ஜனநாயகத்தின் ஜீவநாடிகள் சட்டங்கள் இயற்றும் சட்டசபையும், சட்டங்களின் பலன் யாருக்கும் ஒருபோலக் கிடைக்கு மாறு காப்புதரும் நீதிமன்றமுமேயாகும். எனவே நீதிமன்றத்தின் பாரபட்சமற்ற செயல் முறைக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடிய அரசாங்க நடவடிக்கைகளுக்கு மக்கள் இடம் தரலாகாது.

நிதி விஷயங்களில் சந்தேகாஸ்பதமான முறையில் நடந்துகொள்ளும் அரசாங்க அதிகாரிகளின் மீது போலீஸ் நடவடிக்கை எடுப்பதே நம் நாட்டுச் சட்டம். குற்றம் செய்த தாகக் கருதப்படும் அதிகாரியை வேலையிலிருந்து தாற்காலிகமாக நீக்கம் செய்து, அவர் மீதுள்ள வழக்கை நீதிமன்றத்தில் விசாரிக்கும் முறையை நாம் கடைப்பிடித்து வருகி றோம். விசாரணையின் முடிவில் அவர் மீது குற்றம் ருசுவாகவில்லை என்று தீர்ப்பானால் அவர் முன்போலவே பதவியில் அமர்த்தப்படுவார். உயர்பதவி அதிகாரிகள் விஷயத் திலும் இந்த நடைமுறை பின்பற்றப்படுகிறது. அவ்வாறிருக்க மந்திரிகள் விஷயத்தில் மட்டும் இந்த நடைமுறைக்கு விலக்கு அளிப்பது ஏன்?

ஸிராஜுத்தின் கம்பெனியிலிருந்து மந்திரி ஸ்ரீ மாளவியா அவர்கள், கட்சி நலனுக்கெனப் பதினாயிரம் ரூபாய் நன்கொடை பெற்றதாக நாடு நகரமெல்லாம் சிரிப் பாய்ச் சிரிக்கிறது. பாராளுமன்றத்திலும் மந்திரி அவர்களின் மீது குற்றம் கூறப்பட்டிருக் கிறது. குற்றம் ருசுவாகிறதா இல்லையா என்பது இப்போது முக்கியமல்ல. சந்தேகத்

துக்கு ஆளான மந்திரியின் விஷயத்தில் ஏன் போலீஸின் வழியாக நீதிமன்றத்தில் பகிரங்க விசாரணை நடத்தக் கூடாது என்பதுதான் கேள்வி.

பிரதமர் தயங்குவதும் குழம்புவதும் இயற்கையே. என்றாலும் அவரது போக்கு சட்டத்தில் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைக்கு உகந்ததல்ல. மந்திரியொருவர் தமது பதவிக் காலத்தில் தனி ஒரு நபருக்காகவோ, அல்லது கட்சிக்காகவோ தமது அதிகாரச் செல்வாக்கைப் பயன்படுத்தி நிதி திரட்டியதாகக் குற்றம் சாட்டப்பட்டால், அது குற்றச் சட்டத்தின் கீழ் வரும் ஒரு விவகாரமாகும். காங்கிரஸ் 'நீதிமான்'கள் கருதுவது போல் அது கம்பெனிச் சட்டத்தின் எல்லைக்கு மட்டும் உட்பட்ட சாதாரண விஷயமல்ல.

கடந்த பதினைந்தாண்டுகளில் ஆட்சியாளர்கள் நீதித் துறையில் கூச்சமின்றிப் புகுந்து செய்துள்ள காரியங்களால் இது போன்ற நடவடிக்கைகள் நாட்டு மக்களுக்குச் சகஜமாகி விட்டன. ராஜாஜி அவர்கள் கூறுவதுபோல், நாட்டின் சட்ட உணர்வே மரத்துப் போயிருக்கிறது. இனியும் இதனை நீடிக்க விடுவது சரியல்ல. உண்மையான சட்டத்தின் ஆட்சியை நிலைக்கச் செய்வதற்குத் தருணம் வந்து விட்டது.

# என்ன சேதி ?

## எதிர்ப்பு ஓயாது!

ஆட்சி மொழி மசோதா பாராளுமன்றத்தில் நிறைவேறி விட்டது என்பதால் எதிர்ப்பு நின்று விடாது. சத்தியம் இறுதியில் வென்றே தீரும் என்பதில் நம்பிக்கை வைத்து காந்தி அடிகள் சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்தியது போல் நம்முடைய நியாயமான உரிமையை நிலைநாட்டிக் கொள்ளப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தத்தான் வேண்டும்.

ஆங்கிலம் நீடிப்பதால் ஹிந்தி பேசுபவர்கள் உள்பட யாருக்கும் எந்தப் பிரதிகூலமும் இல்லை. ஆங்கிலம் நாட்டின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள படிப்பாளிகளை இணைக்கும் பொது மொழிப் பாலமாகும். ஹிந்தியோ இந்தியாவின் சில பகுதிகளில் மட்டுமே வழங்கும் மொழி. ஹிந்தி ஆங்கிலத்தின் இடத்தைப் பெறுவதால் ஹிந்தி பேசுபவர்கள் நிச்சயமாக மற்றவர்களைவிட அநுகூலங்களைப் பெறுவர். எனவே பாரபட்சமின்றி நாட்டு மக்கள் யாவரும் ஒரே போன்ற நலன்களை அநுபவிக்க வேண்டுமெனில், ஆட்சி மொழி மசோதாவை எதிர்க்கும் பணியை நீடித்தேயாக வேண்டும்.




நெருக்கடி நிலைமையைச் சாக்குக் காட்டி எதிர்ப்பாளர்களின் வாயை அடக்கப் பார்ப்பதும், ஆட்சி மொழி விஷயத்தை வைத்துத் தென்னாட்டவர்களைப் பிரித்தாளும் தந்திரமும் பயங்கரமான எதிர் விளைவுகளை உண்டாக்கும். ராஜாஜி கூறியிருப்பது போல் இது தென்னாட்டவர் அனைவருக்கும் பொதுவான ஜீவாதாரப் பிரச்னையாகும். இதில் கட்சி அரசியலுக்கும் கருத்து வேற்றுமைக்கும் இடமே கிடையாது என்பதைத் தென்னாட்டில் ஒவ்வொரு பட்டி தொட்டியிலும் உள்ள மக்கள் நிரூபிக்க வேண்டும்.

## காங்கிரஸின் தில்லுமுல்லுகள்

பொதுத் தேர்தல்களில் காங்கிரஸ்காரர்கள் எவ்வளவு கீழ்த்தரமாக நடந்து கொள்கிறார்கள் என்பது அம்ரோஹாத் தொகுதியில் அவர்கள் செய்து வரும் முறையற்ற செயல்களிலிருந்து வெட்ட வெளிச்சமாகியிருக்கிறது.

வாக்காளர்களில் முப்பத்தைந்து சதவிகிதத்தினர் முஸ்லிம்கள் என்பதால் ஸ்ரீ கிருபளானிக்கு எதிராக மத்திய மந்திரியும், தற்போது ராஜ்ய சபையில் அங்கம் வகிப்பவருமான ஹாஃபீஸ் முகம்மது இப்ராஹிம் அவர்களைக்

## கண் நோய் நீங்குமா ?

காஷ்மீர் எங்கள் பிறப்புரிமை என்றுதான் எனக்கு இன்னமும் தெரிகிறது.

E
OPW
RNFV
XACNQ

அமெரிக்கா

நீங்கள் பாகிஸ்தானுடன் இணக்கம் காண வேண்டும்.

PK

---

## கட்டடம் இடியாது ; கைதான் வலிக்கும் !



காங்கிரஸ் புண்ணியாத்துமாக்கள் நிறுத்தி வைத்தனரல்லவா? இதே தொகுதியில் திரு ரஹுத் மௌலா என்ற முகம்மதியரும் போட்டி யிட்டதால் முஸ்லிம்களின் வாக்குச் சிதறிவிடுமெனக் காங்கிரஸுக்குப் பயம் கண்டது. இதற்காக அவரைப் பல விதங்களில் நிர்ப்பந்தப்படுத்திப் போட்டியிலிருந்து விலகச் செய்திருக்கிறார்கள். இதை யொட்டி திரு ரஹுத் மௌலா அவர்கள் ஓர் அரிய காரியத்தைச் செய்திருக்கிறார். காங்கிரஸ்காரர்களின் யோக்கியதைக் குறைவையும், வகுப்பு வாதத்தை அவர்கள் தூண்டி விடுவதையும் உலகறிய ஓர் அறிக்கை வெளியிட்டு அம்பலப்படுத்தி யிருக்கிறார். அதோடு ஸ்ரீ கிருபளானி அவர்களுக்குத் தமது ஒத்துழைப்பையும் நல்கி, நம்மிடம் சபாஷ் பெறுகிறார்.

### கௌரவம்

'கௌரவம்' என்ற கதை, எழுத்தாளர்களுக்குக் கௌரவத்தைத் தேடித் தந்திருக்கிறது. பொதுவாகத் திரைப் படங்களில் ஏழை எழுத்தாளர்களின் கதைகளை அனுமதி இன்றியும் தக்க சன்மானம் அளிக்காமலும் திரைப் பட முதலாளிகள் உபயோகித்து வருகிறார்கள் என்று குறை கூறப்பட்டு வந்தது. எழுத்தாளர்கள் கோர்ட்டு ஏறி வழக்காடுமளவுக்குத் திராணியோ பண பலமோ அற்றவர்கள். ஆனால் சமீபத்தில் ஸ்ரீமதி ஜயலட்சுமி, கல்கியில் வெளியான தமது 'கௌரவம்' என்ற கதை ஒரு படத்தில் அநுமதியின்றிக் கையாளப்பட்டிருக்கிறது என்று டெல்லி உயர்நீதி மன்றத்தில் வழக்காடினார். இந்த வழக்கின் தீர்ப்பு ஸ்ரீமதி ஜயலட்சுமிக்குச் சாதகமாக அளிக்கப் பட்டிருக்கிறது. படத் தயாரிப்பாளர்கள் கையாளப்பட்ட பகுதிக்கு விலையாக ரூ. 2,500ம், நஷ்ட ஈடாக ரூ. 10,000மும் ஆசிரியைக்கு வழங்க வேண்டும் என உத்தரவிட்டிருக்கிறார்கள். இது எழுத்தாளர் உலகில் பெரும் மன நிறைவை ஏற்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை.

### ஸ்வாதித் திருநாள் விழா

இசைச் செல்வர் ஸ்வாதித் திருநாள் அவர்களின் நூற்றைம்பதாவது பிறந்த தினம் சென்ற 8-ந் தேதியன்று நாடெங்கிலும் கொண்டாடப்பட்டது. கலை நகரும் தமிழகத்தின் தலைநகருமான சென்னை சிறப்பான முறையில் சங்கீத மாமேதைக்கு அஞ்சலி செலுத்தியது. வானொலி நிலையமும் மியூஸிக் அகாடமியும் இணைந்து நடத்திய விழாவில் ஸ்வாதித் திருநாளின் உருவப் படத்தை வானொலி மந்திரி ஸ்ரீ கோபால ரெட்டி அவர்கள் திறந்து வைத்தார்கள். திருவிதாங்கூர் மன்னர் அவரது அன்னை ஆகியோரது சார்பில் படத்தை டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரவர்கள் வழங்க, அகாடமியின் சார்பில் ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் அதனைப் பெற்றுக் கொண்டார். இவ்விழாவுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்கள் ஸ்வாதித் திருநாள் பாடல் போட்டியில் வெற்றி பெற்ற ஹேமாவுக்குப் பரிசு வழங்கினார். ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் ஹரிகதா காலட்சேபமும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இசைக் கச்சேரியும் விழாவை நிறைவு செய்தன.



ஹிந்தி ஆட்சிமொழி
வேண்டாம்.
நேரு அவர்களின்
வாக்குறுதியின்படி
அரசியல் சாஸனத்தைத்
திருத்த வேண்டும்.
இது இந்த
ஊராரின் தீர்மானம்.

இப்படி ஒவ்வோர் ஊரிலும் சின்னஞ் சிறு கிராமத்திலும், நாலு பேர் கூடிப் பேசுகிற பொது இடங்களிலெல்லாம் பளிச்சென்று கொட்டை கொட்டை எழுத்துக்களில் எழுதியோ, அச்சிட்டோ ஒட்ட வேண்டும்.

இறைவனுடைய கல்யாண குணங்களிலே மனம் ஈடுபட்டு அந்தப் பேரின்பத்திலே திளைக்க ஆரம்பித்து விட்டால், உள்ளத்திற்கு வேறு எந்தப் பொருளும் வேண்டியிராது. எல்லா இச்சைகளும் மறந்து, பக்தி என்ற பேரின்ப நாட்டம் ஒன்றே மிஞ்சும். இதுவே அநுபூதி நிலை. இதைப் பாடுகிறார் பொய்கையார் :

**அன்புஆழி யானை**
**அணுகுஎன்னும்**

மற்ற எல்லா நாட்டங்களும் ஒழிந்து போகின்றன. ஒரு பாத்திரத்தில் ஒரு பொருள் நிரம்பி விட்டால் மற்றொன்றுக்கு இடம் இல்லை, அதைப்போல், இதயத்தின் அன்பு திருமாலையே நாடு என்கிறது.

**நா அவன்தன்**
**பண்புஆழித் தோள்பரவி**
**ஏத்து என்னும்**

[பண்பு ஆழித்தோள் — பண்புகளின் கடலாக விளங்குகிற தோள். தோளினுடைய அழகைச் சொல்லும்போது அது சௌந்தரியத்திற்குச் சமுத்திரம் என்கிறார்.]

என்னுடைய நாவானது அழகுக் கடலான அந்தத் தோள்களின் புகழையே பாடித் துதி என்கிறது.

**முன்பு ஊழி**
**காணானைக் காண்என்னும்**
**கண்**

[முன்பு ஊழி காணானை — ஊழிக்கும் முந்தியவனை.]

காலங் கடந்த தத்துவமான அந்தப் பரம்பொருளைக் காண் என்று விரும்பி நிற்கிறது கண்! வேறு பொருள்களில் கண் செல்லவில்லை.

**செவி கேள்என்னும்**
**பூண்ஆரம் பூண்டான் புகழ்**

[பூண் ஆரம் பூண்டான் — வனமாலை அணிந்த மூர்த்தி.]

வனமாலை அணிந்த எம்பெருமானுடைய புகழைக் குளிரக் கேட்க வேண்டும் என்கிறது காது.

பக்தி மேலிட மேலிட, உலக இன்பங்களிலே நாட்டம் கொண்டு நின்ற இந்திரியங்கள் எல்லாம் உலக இச்சையை மறந்து, தெய்வ நாட்டத்திலே இன்பம் காணுகின்றன. இதுவே, பக்தி இன்பமாக மாறும் நிலை; அந்தப் பேரின்ப நிலையைப் பாடுகிறார் ஆழ்வார்.

**அன்பாழி யானை**
**அணுகென்னும் நாஅவன்றன்**
**பண்பாழித் தோள்பரவி**
**ஏத்தென்னும்—முன்பூழி**
**காணானைக் காண்என்னும்**
**கண்; செவி கேள்என்னும்**
**பூணாரம் பூண்டான்**
**புகழ்.**

பக்தி செய்கிறவர்கள் அடையும் பேரின்பமும் அதன் பயனும் என்ன என்பதைப் பாடுகிறார் ஆழ்வார்.

**காப்புஉன்னை உன்னக்**
**கழியும்.**

[உன்னை உன்ன — உன்னைத் தியானித்த மாத்திரத்தில். காப்பு கழியும் — காப்பு என்ற அவசியமே தீர்ந்து போகும்.]

இடர்கள் ஏற்பட்டால் அல்லவா காப்பு என்பதற்கு அவசியம் உண்டு. வாதனைகள் இல்லாது ஒழியும்போது பயம் என்பது ஒழிந்து போகும். ஆனபடியால் காப்பு கேட்பதற்கு அவசியம் இல்லை.

**அருவினைகள்**
**ஆப்புஉன்னை உன்ன**
**அவிழ்ந் தொழியும்**

[அருவினைகள் ஆப்பு — குரூரமான கர்மங்களின் பந்தம்.]

உன்னைத் தியானித்த மாத்திரத்தில் கர்ம பந்தம் அவிழ்ந்து ஒழிந்துபோகும்.

**— மூப்பு உன்னைச்**
**சிந்திப்பார்க்கு இல்லை**

உன்னைச் சிந்திப்பவர்களுக்கு முதுமை, கிழத்தனம் என்பது வராது. அதாவது எப்போதும் யௌவன ஆனந்தத்தோடு இருப்பார்கள்.

**திருமாலே நின்அடியை**
**வந்திப்பார் காண்பர் வழி.**

[வந்தித்தல் — வணங்குதல்.]

உன்னுடைய திருவடியை வணங்குவார்களுக்கு நல்வழி தெரியும். அவர்கள் பரமபதத்துக்கு உரிய மார்க்கத்தைக் காண்பார்கள்.

**காப்புன்னை உன்னக்**
**கழியும் அருவினைகள்**
**ஆப்புன்னை உன்ன**
**அவிழ்ந்தொழியும்-மூப்புன்னைச்**
**சிந்திப்பார்க் கில்லை**
**திருமாலே நின்னடியை**
**வந்திப்பார் காண்பர்**
**வழி.**

இறைவனுடைய அடியை உன்னினோமானால், நம் கால்கள் செல்லும் பாதையைப் பற்றிய கவலை தீர்ந்து போகும்!

# ஆஹா...

**என்னே ஆரோக்கியமளிக்கும் புத்துணர்ச்சி, கோலினாஸின் பாதுகாக்கும் நுரையிலே!**

சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினாஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்...ஏனெனில், நுரைக்கும் தன்மையுள்ள கோலினாஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய் நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினாஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.



**தலைநிமிர்ந்த புன்சிரிப்பு—அது கோலினாஸின் புன்சிரிப்பு**

அல்லது, வீரியமுள்ள குளோரோபிலின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், புதிய சேர்க்கை கோலினாஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம் கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LTD.



# சிறுவர் சிறப்பு மலர்

வாரா வாரம் விருந்து வழங்கினாலும்கூடக் கோடை விடுமுறையைக் குதூகலமாக அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு மகிழ்வூட்ட நாங்களும் ஏதாவது செய்ய வேண்டு மென்று நினைத்தோம். அந்த எண்ணத்தின் பிரதிபலிப்புத்தான் இந்தச் சிறப்பு மலராக உருப்பெற்றிருக்கிறது. விடுமுறை என்றாலே உங்களுக்குத்தான் எத்தனை குதூகலம்! அதோ கீழே இரண்டு குழந்தைகள் எப்படி மனம்விட்டுச் சிரிக்கிறார்கள்! ரஷ்யதேசத்துக் குழந்தைகளான அவர்களை மகிழச்செய்யும் அந்தக் காட்சி என்ன வென்று தெரிந்தால் நீங்களும்கூட அவர்களுடன் சேர்ந்து சிரித்து மகிழுவீர்கள், இல்லையா? அடுத்த பையன் அத்தனை கவனமாக ஆழ்ந்து எதையோ படிக்கிறானே, அது என்ன புத்தகம் தெரியுமா? இந்தியாவைப் பற்றிய புத்தகம்தான் அது. அமெரிக்கச் சிறுவர்களுக்கு இந்தியாவைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதில் எப்போதும் அதிக அக்கறை உண்டு. அடுத்துள்ள ஒரு தங்கச்சி பாங்காகப் படங்களை அமைத்து அழகு பார்க்கிறாளே, அவள் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த பேபி. அதோ அந்தக்கோடியில் இரண்டு குழந்தைகள் நீண்ட காராபூந்திப் பொட்டலம் போன்ற கூடையில் எதையோ ஆராய்ந்து கொண்டிருக்கிறார்களே, அவர்கள் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்தவர்கள். யாரோ அவ்விருவருக்கும் அந்தக் கூடைக்குள் வியப்பூட்டும் பரிசுப் பொருள்களை நிரப்பிக் கொடுத்திருக்கிறார்கள். அதனால் தான் அவர்கள் முகத்தில் அத்தனை மகிழ்ச்சி. நீங்களும்கூட உங்கள் விடுமுறையை இவர்களை யெல்லாம் போலக் குதூகலமாகப் பயனுள்ள முறையில் கழித்துக் கொண்டிருப்பீர்கள், இல்லையா?



## கல்வித்துறை நிபுணர் — நமது உப ஜனாதிபதி!



"இவரைத் தெரியுமா?" என்று கேட்க வேண்டியதே இல்லை. பாரதத்தின் உபஜனாதிபதியை உங்களுக்குத் தெரியாதா என்ன? பாரதச் செல்வர்களான உங்களுக்கு முதலில் வேண்டியது என்ன? கல்வி, இல்லையா? இந்தக் கல்வித் துறையில் பல சீர்திருத்தங்களையும் திட்டங்களையும் கொண்டு வந்து வளப்படுத்திய கல்விக்கு அடிகோலிய கல்வித் துறை நிபுணர் இவர். 1897-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் உத்தரப் பிரதேசத்தில் உள்ள பருகாபாத் ஜில்லாவில் பிறந்தார் ஜாகிர் ஹுஸைன். அலிகாரில் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு ஜெர்மனியில் பட்டப் படிப்புக்குச் சென்றார். வார்தா கல்வித் திட்டம் என்று கேள்விப்பட்டிருப்பீர்களே, அக் கமிட்டியின் தலைவராக இருந்தவர் இவர். டில்லியிலுள்ள 'ஜாமியா மிலியா' என்ற கல்வி ஸ்தாபனம் இன்றைக்குப் புகழுடன் விளங்குவதற்குக் காரணமாக இருந்து உழைத்தவர். அலிகார் சர்வகலாசாலையின் துணைவேந்தராக எட்டாண்டு காலம் பணியாற்றியுள்ளார். பீகார், உத்தரப்பிரதேசம், மத்தியப் பிரதேசம் ஆகிய மாகாணங்களின் கல்வித்துறை சீர்திருத்தக் கமிட்டிகளில் அங்கத்தினராக இருந்தும் பணியாற்றியிருக்கிறார். கல்வித் துறை நிபுணரான இவர் சிறந்த எழுத்தாளரும்கூட. கல்விக்கும் கலைக்கும் இவர் செய்துள்ள பணியைப் பாராட்டி 1954-ம் ஆண்டு பாரத அரசாங்கம் இவருக்குப் 'பத்ம பூஷண்' பட்டத்தை அளித்துக் கௌரவித்தது. சிலகாலம் பீகார் மாகாணத்தின் கவர்னர் பதவியையும் வகித்திருக்கிறார். 1962-ல் இந்திய மக்கள் இவரை உபஜனாதிபதியாக ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தார்கள். 1963 ஜனவரியில் இவருக்குப் 'பாரத ரத்னா' என்ற பட்டம் அளிக்கப்பட்டது. இத்தகைய சிறப்புக்களைப் பெற்ற கல்வித் துறை நிபுணரான திரு ஜாகிர் ஹுஸைன் அவர்கள் சென்னையில் இம்மாதம் 19, 20 தேதிகளில் நடக்கும் குழந்தை எழுத்தாளர் மகாநாட்டை ஆரம்பித்து வைக்கப் போகிறார்கள்.

## துன்பம் துடைக்கப் பிறந்த சங்கத்துக்கு நூறு வயது




உலகில் உள்ள நாடுகள் தங்களுக்குள் என்ன பகைமை, சண்டை, பூசல் வேற்றுமை இருந்தாலும் ஒரே ஒரு ஸ்தாபனத்தின் விதிகளுக்கு மட்டும் கட்டுப்பட்டு நடக்கின்றன. போர்க் களத்தில் குமுறும் பீரங்கிகள் ஒரே ஒரு அடையாளத்துக்குத் தான் தங்கள் அனல் கக்கும் வாயை மூடி மரியாதை காட்டுகின்றன. அதுவே மதம், இனம், மொழி, நிறம் இவைகளை யெல்லாம் கடந்து மனித சமுதாயத்தின் துன்பம் துடைப்பது ஒன்றையே தங்கள் பணியாகக் கருதிச் செயல் புரியும் ஸ்தாபனமாகிய செஞ்சிலுவைச் சங்கம். இந்தச் சங்கம் தோன்றி நூறு ஆண்டுகள் பூர்த்தியாகி விட்டது. இத்தகைய அகில உலக ஸ்தாபனத்தை உருவாக்கியவர் ஸ்விஸ் நாட்டைச் சேர்ந்த ஜீன் ஹென்றி ட்யூனண்ட் என்பவர்.

1859-ம் ஆண்டில் பிரான்ஸ் நாட்டு மூன்றாவது நெப்போலியன் ஆஸ்திரியா மீது தாக்குதல் நடத்திய போது அந்தப் போர்க்களக் காட்சியை ட்யூனண்ட் கண்டார். மரணமுற்ற, படுகாயமடைந்த 40,000க்கும் அதிகமான வீரர்கள் போர்க் களத்திலே புறக்கணிக்கப்பட்டுச் சென்ற காட்சி அவர் இதயத்தை உலுக்கி விட்டது. போர்க்களத்துக்கு அருகில் உள்ள கிராமங்களுக்குச் சென்று இளைஞர்கள் பலரைத் திரட்டி அவர்கள் உதவி கொண்டு, வீரர்களின் நிவாரணத்தில் ஈடுபட்டு வெற்றி கண்டார்.

இதன் பிறகு தம் சொந்த நாடான ஜினீவாவுக்குத் திரும்பிய ட்யூனண்டினால் அந்தக் காட்சியை மறக்க முடியவில்லை. யுத்தத்தில் படுகாயமடைந்தவர்கள் எந்த நாட்டினராயினும் சரி பாரபட்சமெதுவுமின்றி அவர்களுக்கு உதவ, சுயேச்சை அடிப்படையிலான தேசிய சங்கங்கள் தோன்ற வேண்டும் என்று விரும்பினார். அதற்காக முயற்சி எடுத்துக் கொண்டு உழைத்தார். அவரது விடாமுயற்சியின் பயனாக 1863ம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ந் தேதி ஜினீவாவில் பதினாறு நாடுகளையும் ஏழு தரும ஸ்தாபனங்களையும் சேர்ந்த பிரதிநிதிகள் கூடினார்கள். செஞ்சிலுவைச் சங்கத்தின் அடிப்படைத் திட்டங்களும், இந்த ஸ்தாபனத்தின் அடையாளமும் இம்மகாநாட்டில் விவாதித்து முடிவு செய்யப்பட்டன. வெப்புப் பின் புலனில் வெள்ளைச் சிலுவையைக் கொண்டது ஸ்விஸ் நாட்டின் கொடி. ட்யூனண்ட் ஸ்விஸ் நாட்டைச் சேர்ந்தவர். ஆகவே சங்கத்தின் ஸ்தாபகரையும் ஸ்விஸ் நாட்டையும் கௌரவிப்பதற்காக வெள்ளையில் வெப்புச் சிலுவைக் குறியாக இச்சங்கத்தின் அடையாளத்தை அமைத்தார்கள்.

இந்தச் சங்கத்துக்கு நூறு வயதானதைக் கொண்டாட நம் பாரத அரசாங்கம் ஒரு புதிய தபால் தலையை வெளியிட்டுள்ளது. அதையே அருகிலுள்ள படத்தில் காண்கிறீர்கள்.

## பாம்பும் நத்தையும்!

'தென்றல்'

பாம்பு :

மூக்குச் சளிப் பாதையில்
மூட்டை ஒன்றை முதுகிலே
தூக்கிச் சென்றும் நத்தையே
தூரம் செல்ல முடியுமோ ?

நத்தை :

கால்கள் இல்லா நீயுமே
கடுகிப் போகத் தெரிந்திட்டாய்
வாலைப் போன்ற உடலினால்
வளைந்து போக அறிந்திட்டாய்
நேரம் இரவு தன்னிலும்
நெஞ்சம் பயந்து செல்லும்நீ
தூரம் செல்லும் துணிவிலே
தூற்றி என்னைப் பேசினும்
பாதை ஓரம் உன்னையே
பார்த்து விட்ட மனிதர்கள்
காது கிழியக் கத்தியே
கழியைக் கொண்டு தாக்குவர்
இரவு பகல் இரண்டிலும்
எந்தன் மூட்டை தூக்கியே
மரங்கள் காடு தாண்டியும்
மலைக்கும் போக முடியுமே !

## எங்கே வீடு ?

— இன்பவண்ணன் —

ஆமைக்கும் நத்தைக்கும் வீடு ;
அதனதன் மேலுள்ள ஓடு !

தூக்கணாங் குருவிக்குக் கூடு ;
தொங்கிடும் மரத்தின் ஊடு !

நண்டுக்கும் எலிக்கும் வளையாம் ;
நரிக்கும் முயலுக்கும் புதராம் !

ஆட்டுக்கும் மாட்டுக்கும் தொழுவம் ;
ஆனைக்கும் குதிரைக்கும் லாயம் !

கரையான் பாம்புக்குப் புற்று ;
காட்டினில் சிங்கமோ குகையுள் !

உனக்கும் எனக்கும் என்ன ?
உன்னத மாடி வீடு !

## சின்னச் சின்ன மின்மினி

— செல்ல. கணபதி —

சின்னச் சின்ன மின்மினி
சிரிக்கும் அழகு மின்மினி
மின்னி மின்னித் தன்னையே
மினுக்கிக் காட்டும் மின்மினி

தங்கை காதுத் தோட்டிலே
தகத கக்கும் வைரம்போல்
எங்கும் விரிந்த வானிலே
எழிலாய் மின்னும் மின்மினி

பச்சைப் புல்லின் மீதிலே
படர்ந்தி ருக்கும் பனியைப்போல்
உச்சி, நீல வானிலே
ஒளிருகின்ற மின்மினி

விண்ணை அந்த மின்மினி
வீடு என்று நெஞ்சிலே
எண்ணிக் கொண்டு விட்டதோ ?
இன்பப் பவனி வந்ததோ ?





அழ. வள்ளியப்பா

# பாராட்டுப் பெறும் பேருமன்னர்கள்

சின்னக் குழந்தைகள் ரசித்து ராகமிட்டுப் பாடுவதற்கு ஏற்ற எண்ணிறந்த பாடல்களை இயற்றிய பெருமை ஒருவருக்கு உண்டென்றால் அது திரு அழ. வள்ளியப்பாவைத்தான் சேரும். இன்றைக்குக் குழந்தைகளுக்குப் பாடல்கள் புனைவோரின் எண்ணிக்கை பெருகி இருப்பதற்கு ஒரு மூலகாரணமாக விளங்குபவர் வள்ளியப்பா. 'மலரும் உள்ளம்' என்ற இவரது குழந்தைப் பாடல்களின் தொகுதிக்கு மத்திய அரசாங்கத்தினர் பாராட்டிப் பரிசு கொடுத்திருக்கின்றனர். அவரது பாடல்களைப் போலவே பழகுவதற்கும் இனியவர். குழந்தை எழுத்தாளர் சங்கத்தை உருவாக்கிய பெருமை இவருக்கு உண்டு. அழ. வள்ளியப்பாவைத் தெரியாத குழந்தைகள் 'தமிழ் நாட்டில் இருக்க முடியாது. அப்படி இருபது ஆண்டுகளுக்கு மேலாகக் குழந்தைகளுக்காகக் கவிதை, கதை, கட்டுரைகளை எழுதிக் குவித்து வருகிறார்.



மிருகங்கள் மனித பாஷையில் பேசுமா? பேசின, சோம சன்மா எழுதிய 'பஞ்ச தந்திரக் கதைகள்' மூலம், ஈசாப் என்ற கிரேக்க நாட்டு அறிஞரின் கதைகள் மூலமாக, அமெரிக்க ஆசிரியர் சாண்ட்லர் ஹாரிஸ் அவர்களின் படைப்பான 'அங்கிள் ரீமஸ்' என்ற கதைகளின் மூலமாக. இது மட்டும்தானா? தமிழ் நாட்டுக் குழந்தைகளோடு மிருகங்களைப் பேச வைத்து மகிழ்ந்த ஒருவர் இருக்கிறாரே! 'ராஜி' என்ற இரண்டெழுத்துக்குள் ஒளிந்து கொண்டுள்ள உங்களுக்கெல்லாம் தெரிந்த கதாசிரியரைத்தான் சொல்லுகிறேன். காட்டு மிருகங்களை யெல்லாம் உங்களோடு விளையாட விட்டு மகிழ்ந்தவர் ராஜி. கானகத்துச் சூழ்நிலையில் நூற்றுக்குமதிகமான கதைகளை எழுதிக் குவித்தவர் ராஜி. இவர் எழுதிய 'தங்க மாம்பழம்' 'மாயப் பந்து' ஆகிய நெடுங் கதைகளை நீங்கள் மறந்திருக்க முடியாதே. ஐம்பத்து ஏழு வயதைக் கடந்த இவர் இருபத்தைந்து வருஷங்களுக்கு மேல் உங்களுக்காகவே எழுதி வருகிறார். இவரது உண்மைப் பெயர் நடேசன்.

இந்த ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம், இவ்விருவரின் சேவைகளையும் பாராட்டிக் கேடயம் வழங்கிக் கௌரவிக்கப் போகிறது.



'ராஜி'





"அந்தப் பயல் எதற்கு ஏணியை எடுத்துப் போகிறான்?"

"அவன் மேல் படிப்புக்குப் படிக்கப் போகிறானாம்!"

*

"ஏண்டா குழந்தையை அழவிட்டாய்? அவன் தின்னக் கேட்டதை அவனிடம் கொடுப்பதுதானே!"

"கொடுத்து விட்டேம்மா. அதுக்கப்புறம்தான் பெரிசா அழறான்?"

"அவன் என்ன கேட்டான்?"





''அந்தக் குருவி ஜோசியன் 'கரெக்டா'ச் சொன்னுன்! வேலையிலே படிப்படியா மேலே மேலே போவே, அப்புறம் திடீர்னு கீழே வந்துவிடுவேன்னுன். சரியாய்ப் போச்சு!''

*

''பாருங்க சார்! உங்க பையன் என் செருப்பைப் போட்டுக் கொண்டு ஓடுகிருன்!''

''தப்பு, தப்பு! அது என் பையன் அல்ல. அதோ உங்க தலைப்பாகையில் தண்ணீர் ஊற்றுகிருனே அவன்தான் என் பையன்!''





''உங்க பையன் என்னிடம் 'ஆறு' போய் சொல்லி விட்டேன் என்கிருன்!''

''அவன் கிடக்கிருன். என்னப் பயல்தானே அவனுக்கு 'ஆறு'க்கு மேல் எண்ணத் தெரியாது!''

''எட்டும் இரண்டும் பதுனென்று? —சரியாகக் கூட்டிச் சொல்!''

''சாரி, சார்! பெருக்கச் சொன்னேனாக்கும்னு பார்த்தேன் சார்!''



## பழைய துணிக்கு ஒரு புதிய கதை

ஓய்வு பெற்ற ராணுவ சார்ஜண்ட் ஒருவர். வறுமையும் முதுமையும் அவரை வாட்டி வதைத்தன. நகரின் மோசமான பகுதியில் வசித்து வந்தார் இவர். இவருக்கு ஏராளமான நாடோடிக் கதைகளும், தேவதைக் கதைகளும் தெரிந்திருந்தன. ஆனால் இவர் இந்தக் கதைகளை யாருக்கும் வெளியிட விரும்பவில்லை. இந்தக் கிழவர் பழைய சட்டை, சராய்களைச் சேகரித்து அதை ஏழை எளியவர்களுக்கு விற்றுப் பிழைப்பு நடத்தி வந்தார்.

அவரது வியாபாரப் பொருளான பழந் துணிகளைச் சேகரித்துக் கொண்டு ஒரு கதைக்கு ஒரு துணி என்ற ஒப்பந்தத்தில் அவருக்குத் தெரிந்த கதைகளை அறிந்து கொள்ள விரும்பினுர்கள் இரண்டு ஜெர்மானியச் சகோதரர்கள். இந்தச் சகோதரர்களைத்தான் இலக்கிய உலகம் 'கிரிம் சகோதரர்கள்' என்று சுருக்கமாக அழைக்கிறது.



இவர்களின் முயற்சியை அறிந்தபோது நாட்டின் பல பாகங்களிலிருந்தும் ஆதரவு கிடைக்கலாயிற்று. ரொட்டிக் குடியானவர்கள், பிச்சைக்காரர்கள், நாடோடிகள், அநாதை விடுதிகளில் உள்ள முதியோர்கள் ஆகியவர்களிடமிருந்தெல்லாம் அவர்கள் அறிந்த கதைகளைச் சொல்லக் கேட்டு எழுதிக் கொண்டு அவைகளையெல்லாம் ஒப்பு நோக்கி நேர் செய்து செம்மைப்படுத்தி 1812ல் முதல் புத்தகத்தை வெளியிட்டார்கள் கிரிம் சகோதரர்கள். குழந்தைகள் விரும்பிப் படிக்கும் அற்புதமான கதைகளை இலக்கிய உலகில் அழியாத இடம் பெற்றுர்கள்.

இந்தக் கதைகளின் மொழிபெயர்ப்பு இன்றைக்கு உலக மொழிகள் பலவற்றிலு மிருக்கிறது. 'கிரிம்' சகோதரர்களின் தேவதைக் கதைகளில் சிலவற்றை விருந்தில் அவ்வப்போது உங்களுக்கு அளிக்கப் போகிறோம். முதல் கதையாக இந்தச் சிறப்பு மலரில் அடுத்த பக்கத்தில் ''பயமறியாத அரச குமார''னைப் பற்றிய கதை ஒன்று வெளியாகி யிருக்கிறது.

# பயம் அறியாத அரச குமாரன்

ப்ப ரொம்ப வருஷங்களுக்கு முன்னுலே ஒரு ராஜகுமாரன் வசித்து வந்தான். அவன் தைரியசாலி. எதற்கும் பயப்படாதவன். இப்படிப்பட்டவன் அரண்மனையில் உட்கார்ந்து கொண்டிருப்பானு? உலகத்தைச் சுற்றிப் பார்த்து வீரச் செயல்கள் புரிய நினைத்தான். உடனே பெற்றோரிடம் விடைபெற்றுக்கொண்டு கிளம்பியும் விட்டான். கால் போன போக்கில் இரவு பகல் பாராது நடந்து கொண்டே இருந்தான் அரசகுமாரன். மிகவும் களைத்துப் போனபோது, தான் ஒரு பெரிய வீட்டின் முன்னுல் இருப்பதை உணர்ந்தான் அவன். அது ஒரு அரக்கனின் வீடு. அந்த வீட்டின் திண்ணையில் அப்படியே உட்கார்ந்து இளைப்பாறியதும் தன் பார்வையைச் சுற்றுமுற்றும் திருப்பினுன்.

அந்த வீட்டின் முற்றத்தில் அரக்கனின் விளையாட்டுப் பொருள்கள் இறைந்து கிடந்தன. அரக்கனின் விளையாட்டுப் பொருள்கள் என்ருல் எப்படி இருக்கும்? பிரும்மாண்டமான பந்துகள், மனிதனின் உயரத்துக்கு விளையாட்டுக் கம்பங்கள்—இப்படிப் பல. சத்தம் கேட்டு அரக்கன் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். ஒரு சின்னப் பையன் தன் பொருள்களைக் கொண்டு விளையாடி மகிழ்வதைக் கண்டு வியந்து போனுன். உடனே, "பையனே, நீ பெரிய பலசாலியானுல் எனக்காக ஒரு காரியம் செய். அதிசய ஆப்பிள் மரத்திலிருந்து ஒரு பழத்தைப் பறித்து வா" என்ருன்.

"உனக்கு எதற்கு அந்தப் பழம்?" என்று கேட்டான் அரசகுமாரன்.

"எனக்காக அல்ல, அந்தப் பழம். நான் மணக்க விரும்பும் ஒரு பெண் அந்தப் பழத்தைக் கொண்டு வந்தால் தான் ஆயிற்று என்கிருள். இந்த உலகம் முழுதும் சுற்றினேன். அந்த அதிசய மரத்தை என்னுல் காண முடியவில்லை" என்ருன் அரக்கன்.

"பூ! இவ்வளவுதானே! நான் அதைத் தேடிக் கொண்டு வருகிறேன்" என்ருன் இளவரசன் உற்சாகமாக.

மலை, வனம், வனாந்திரம், எல்லாம் கடந்து அந்த அதிசயப் பழமுள்ள அற்புதத் தோட்டத்துக்கு வந்து சேர்ந்தான். அதைக் காவல் காக்கும் மிருகங்களெல்லாம் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தன. இரும்புக் கிராதிகள் ஏறிக் குதித்துத் தோட்டத்தினுள் நுழைந்தான். தோட்டத்தின் நடுவில் அந்த ஆப்பிள் மரம் இருந்தது. அதில் பளபளக்கும் செக்கச் சிவந்த ஆப்பிள் பழங்கள் காய்த்துத் தொங்கிக் கொண்டிருந்தன. மரத்தின்மீது ஏறி அதன் உச்சியில் உள்ள ஒரு பழத்தைப் பறிக்க முயன்றபோது அதன் முன்னே ஒரு கங்கணம் தோன்றியது. பயமே அறியாத அரசகுமாரன் அதனுள் கையை நுழைத்துப் பழத்தைப் பறித்தான். உடனே அந்தக் கங்கணம் சுருங்கி அவன் கைகளில் காப்பாக வந்து இறுக்கிக்கொண்டது. அதே வினாடி ஒரு புதிய சக்தி அவன் உடலெங்கும் விரவிப் பரவுவதை உணர்ந்தான். முன்பே பலசாலியான அவனிடம் இன்னும் அதிகமானபலம் வந்து கூடியது, அந்த மந்திரக் காப்பின் சக்தியினுல்.

காவல் சிங்கங்களில் ஒன்று எழுந்து பாய்ந்தபடி இளவரசனைப் பின் தொடர்ந்தது. கோபத்துடன் அல்ல. நட்புடன்தான். எஜமானனைத் தொடர்ந்து வரும் நாயைப் போல அந்தச் சிங்கம் அரச குமாரனைப் பின் தொடரலாயிற்று.

வாக்களித்தபடி ஆப்பிளை அரக்கனிடம் கொடுத்தான் அரசகுமாரன். அரக்கன் அதைத் தான் மணக்க விரும்பிய பெண்ணிடம் கொடுத்தான். அழகோடு அறிவும் நிரம்பியவள் அந்தப் பெண். அரக்கனின் கையில் அந்த மந்திரக் காப்பு இல்லாததைக் கண்டு, "உன் கரங்களில் காப்பு இல்லை. ஆகவே இந்தப் பழத்தை நீ கொண்டு வரவில்லை" என்ருள்.

"அப்படியொன்றுமில்லை. காப்பை வீட்டில் வைத்திருக்கிறேன், கொண்டு வருகிறேன்" என்று கிளம்பினுன் அரக்கன். இளவரசனிடம் காப்பைத் தரும்படி கேட்டபோது அவன் மறுத்து விட்டான். "ஆப்பிள் எங்கே இருக்கிறதோ அங்கேதானே காப்பும் இருக்கவேண்டும். நீயாகக் கொடுக்காவிட்டால் உன்னுேடு சண்டை போட்டு அதைப் பெற வேண்டி இருக்கும்" என்ருன் அரக்கன்.

சண்டைக்குப் பயந்தவனு என்ன அரசகுமாரன்? இருவரும் போரிட்டார்கள். அரக்கனுல் இளவரசனை வெல்ல முடியவில்லை. ஆகவே, ஒரு தந்திரம் செய்தான். "போரிட்டு இருவரும் களைத்து விட்டோம். இந்த ஓடையில் களைப்புத் தீரக் குளித்துவிட்டு மறுபடி போரிடலாம்" என்ருன் அரக்கன். அரக்கனின் சூதை அறியாத இளவரசன் ஓடைக் கரையில் உடைகளோடு காப்பையும் களைந்து வைத்துவிட்டு நீரில் இறங்கினுன். இதற்காகக் காத்திருந்த அரக்கன் குபீரென்று கங்கணத்தைத் தூக்கிக் கொண்டு ஓடினுன். ஆனுல் அரசகுமாரனின் மெய்க்காவலன்போல இருக்கும் சிங்கம்



அவனைத் தூக்கிச் சென்று அவன் கையிலிருந்து காப்பைப் பிடுங்கிக் கொண்டு வந்து தன் எஜமானனிடம் சேர்ப்பித்து விட்டது.

ஏமாந்த அரக்கன் ஒளிந்திருந்து இளவரசன் உடைகளை அணிந்து கொள்ளும் போது திடீரென்று எதிர்பாராத விதமாகத் தோன்றி அவன் இரு கண்களையும் பறித்து விட்டான். இளவரசன் குருடனானன். செய்வதறியாது திகைப்புடன் இருக்கும் அரச குமாரனிடம் அரக்கன் யாரோ ஓர் அன்னியனைப் போல வந்து வழிகாட்டி உதவி செய்வதாகச் சொல்லி அவன் கையைப் பிடித்து ஒரு மலை உச்சிக்கு அழைத்துச் சென்றான். ஆபத்தான ஒரு பாறையில் நிறுத்திவிட்டு அங்கிருந்து இளவரசன் கீழே விழுவதை எதிர்பார்த்துக் காத்திருந்தான் அரக்கன். ஆனால் விசுவாசமுள்ள சிங்கம் அவன் ஆடையைத் தன் வாயால் கௌவிப் பற்றிப் பத்திரமான இடத்துக்கு அழைத்துச் சென்றது. பிறகு அரக்கனைத் தூக்கிச் சென்று அதே மலையுச்சியிலிருந்து உருட்டித் தள்ளிக் கொன்றது.

கண்ணிழந்த அரசகுமாரனைச் சிங்கம் ஓர் ஓடையின் கரைக்கு அழைத்துச் சென்று ஒரு மரத்தடியில் உட்காரவைத்தது. அது ஒருமந்திர நீரோடை. அதன் நீரைத் தனது முன்னங் கால்களால் வாரி இளவரசனின் முகத்தில் அடித்தது. அந்த நீரின் சக்தியால் இளவரசன் இழந்த பார்வையை மீண்டும் பெற்றான். தனக்குப் பார்வை கொடுத்த சிங்கத்தைக் கட்டித் தழுவிக் கண்ணீர் வடித்துக் கடவுளைப்புகழ்ந்தபடி மேலே நடக்கலானான் இளவரசன்.

ஒரு பாழடைந்த கோட்டை. அதன் தோற்றமே பயங்கரமாக இருந்தது. பல நாள் பிரயாணத்துக்குப் பிறகு அங்கு வந்தான் இளவரசன். அதன் வாயிலில் அழகிய உருவமும் உடலமைப்பும் கொண்ட ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். ஆனால் அவள் உடல் நிலக்கரியைப் போன்று கருமையாக இருந்தது. ''இந்தப் பாழடைந்த கோட்டையில் வாழும் பூதங்களின் பிடியிலிருந்து எனக்கு விடுதலை வாங்கித் தருவீர்களா?'' என்று கண்ணீர் மல்கக் கேட்டாள் அவள்.

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?'' என்றான் இளவரசன்.

''இந்தக் கோட்டைக்குள் மூன்று இரவுகளைக் கழிக்க வேண்டும் நீங்கள். இரவிலே பூதங்கள் பேய்கள் எல்லாம் இங்கு வரும். உங்களைச் சொல்ல முடியாத வகையிலெல்லாம் இம்சிக்கும். அவைகள் என்ன செய்தாலும் நீங்கள் வாயே திறக்கக் கூடாது. அத்துணைக்கு மனத்தில் துணிவும் உடலில் வலுவும் இருந்தாலொழிய என்னை விடுவிக்க முடியாது. உயிரைக் கவர அவைகளுக்கு அதிகாரமில்லை'' என்றாள் அந்தப் பெண்.

''எனக்குப் பயமென்பது என்ன என்றே தெரியாது. ஆண்டவனின் உதவியுடன் உனக்கு விடுதலை வாங்கித் தர முயலுகிறேன்'' என்று கோட்டையின் கூடத்தினுள் நுழைந்தான் இளவரசன். பகல் கழிந்து இரவு வந்தது. நள்ளிரவாயிற்று. பேய்களும் பூதங்களும் அங்கு வந்து கூடலாயின. மனித வாசனையை அறிந்த அவை வெறி கொண்டு தேடலாயின. இளவரசனைக் கண்டதும் அவன் மீது பாய்ந்தன. கைகால்களைப் பிடித்திழுத்துச் சித்திரவதை செய்தன. இளவரசனிடமிருந்து முனகல்கூட வெளிப்படவில்லை. பொழுது புலரும் வேளையில் குற்றுயிரும் குலையுயிருமாக அவனை அப்படியே போட்டு விட்டு அவை மறைந்தன. இளவரசனும் உடலை அசைக்கவே முடியவில்லை. சூரியனின் கிரணங்கள் கோட்டையில் புகும் வேளையில் கருப்பு நிற அழகி ஓடோடி வந்தாள். அவள் கையில் ஒரு சிறு சீசா இருந்தது. அதிலிருந்த மந்திர நீரை அவன் காயங்களில் தடவினாள். மறு விநாடி அவன் உடலில் புதிய தெம்பு புகுந்தது. உறக்கத்திலிருந்து விழிப்பவன் போல எழுந்து உட்கார்ந்தான்.

இரண்டாம் நாளும் மூன்றும் நாளும் இதே போன்ற அவஸ்தைகளுக்கு உள்ளானான். ஆனால் பேசவே இல்லை. அந்த அழகி வந்தாள். மந்திர நீரை அவன் உடலில் தெளித்தாள். அவன் உடலில் ஒட்டிக் கொண்டு ஊசலாடிய உயிர் புத்தொளிபட்டுத் திரும்பியது. அவள் முன்னால் பளிங்குச் சிலை போல அதிகாலையின் அழகுடன் கருமையெல்லாம் நீங்கியவளாக நின்று கொண்டிருந்தாள் அந்தப் பெண்.

அடுத்த விநாடி? என்ன ஆச்சரியம்! பனி விலகிக் காட்சிகள் தெரிவது போலப் பாழடைந்த கோட்டை பளீரென்று பளபளக்கும் கோலாகலமான கோட்டையாயிற்று. அந்தப் பெண் ஓர் அரசகுமாரியாக மாறினாள். வீரர்கள் அணிவகுத்து நின்றார்கள். விதம் விதமான உணவு வகைகளெல்லாம் கொண்டு வந்து பரிமாறப்பட்டன. இளவரசனுக்கும் அந்த அழகிய அரசகுமாரிக்கும் கோலாகலமாகக் கலியாணம் நடந்தது. பயமே அறியாத அரசகுமாரனும் அழகே உருவான அந்த அரசகுமாரியும் நீண்ட காலம் துன்பத்தையே அறியாத இன்ப வாழ்வு வாழ்ந்து வந்தனர்.

[கிரிம் சகோதரர்களின் இக் கதையில் வரும் காட்சியே இவ் விதழின் அட்டையை அலங்கரிக்கிறது.]



## உலகத்தின் கதை 6

# 40,000,000 ஆண்டுகளுக்கு முன்னால்!



எரிமலைகள் குமுறி, நெருப்புக்குழம்பைக் கொப்புளிக்கத் தொடங்கியதாகப் போன வாரம் படித்தோம், இல்லையா? பூமியின் நடு மையத்தில் குமைந்து கொண்டிருந்த உலோகக் குழம்பு, பூமியின் பலவீனமான பகுதிகளில் எல்லாம் பொத்துக் கொண்டு கிளம்பின. உலக மெங்கும் ஆங்காங்கே இப்படி எரிமலைகளாக வெடித்து நெருப்புக் குழம்பைக் கக்கத் தொடங்கின. தணியாமல் இவைகள் பல காலம் குமுறிக் கொண்டிருந்தன. பிறகு மெள்ள மெள்ள இந்த எரிமலைகள் அடங்கலாயின. இந்த எரிமலைகள் உமிழ்ந்த அனல் குழம்புகள் கெட்டிப்பட்டன. பூமி குளிர்ந்தது. இன்றைக்கு நாம் காணுவது போன்ற உலகம் உருவா யிற்று. ஆற்றுப் படுகைகளிலும், வளமான நதிக் கரைகளிலும் எரிமலை யுகத்திலே அழிந்து மறைந்த உயிரினங்கள் மறுபடியும் தோன்றலாயின. மலைச் சரிவு களிலும் பாறைகளின் மீதும் கூட ஜீவராசிகள் வாழ ஆரம்பித்தன. சமவெளிகளைப் புல் பூண்டுகள் மூடி மறைத்தன. வண்ண வண்ணப் பூக்கள் மலர்ந்தன. தேனையும் மகரந்தப் பொடியையும் நாடித் தேனீக்கள் வட்டமிடலாயின. பறவைகளின் இன்னிசையால் கானகம் ரம்மியமாகக் காட்சியளித்தது. இத்தகைய பூமியில் வாழ்ந்த மிருகங்களின் குட்டிகள் தாயின் அன்பையும் ஆதரவையும் எதிர்நோக்கி வளரலாயின. தாங்களாகவே வாழும் பருவம் வரும் வரை தாயின் பாதுகாப்பும் கவனமும் இத்தகைய ஜீவன்களுக்குத் தேவையாக இருந்தன. இவைகளையே மம்மல்கள் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனத்து மிருகங்கள் என்கிறோம். இதையே விஞ்ஞானிகள் முதல் மம்மல்கள் வாழ்ந்த காலம் என்கிறார்கள். இது, சுமார் 40,000,000 வருஷங்களுக்கு முற்பட்டதாகும். இந்தக் காலத்தில் வாழ்ந்த சில பிராணிகளையே இங்கு காண்கிறீர்கள்.



1. ஐரோப்பாவில் இன்று குரங்குகள் கிடையாது. ஆனால் அன்று வாழ்ந்தன. அதன் சந்ததியே இது. 2. இன்றைய லெமூரின் மூதாதையர். 3. இன்றையக் குதிரைகளுக்கு முன்னோடியான 'ஹிப்பாரியான்.' 4. பண்டைக் காலத்திலிருந்து இன்றுவரையும் வாழ்ந்து வரும் மம்மல்களில் ஒன்றான (தெறட்டு நாக்) முள்ளம் பன்றி. 5. இன்றைய 'டாபிர்' என்ற பிராணியைப் போன்ற 'பாலயோதீரியம்' என்ற பிராணி. இவை ஐரோப்பாவில் வாழ்ந்த தாக நம்பப்படுகிறது. 6. இன்றைக்கு நாம் காணும் காட்டுப் பன்றிகள் அன்றைக்கும் இருந் தன. 7. பற்களை உடைய பறக்க இயலாத கடல் பறவைகள் காணப்பட்டன. 8. டோடோ என்ற பறவை நூறு வருஷங்களுக்கு முன்பு வரைகூட இருந்ததாம். 9. புல் பூண்டு, பூக்கள் எல்லாம் இந்தக் காலத்தில் தோன்றின. 10. வட அமெரிக்காவில் இதைப் போன்ற பிராணிகள் வாழ்ந்தன.



# மெருகேற்றும் தொழிலகம்



விமானத்திலிருந்து காணும் கார்போரண்டம் தொழிற்சாலையின் தோற்றம்

சக்கரங்கள் பதித்த சிறு கைவண்டியைத் தள்ளிக் கொண்டே ''சாணை பிடிக்கலையோ'' என்று கத்திக் கொண்டு வீடுதோறும் வரும் சாணைக்காரனை நாம் அறிவோம். மழுங்கிப் போன பெருக் கத்திகளையும், வெட்டுக் கத்திகளையும், காய்கறிகளையும் நறுக்காத அரிவாள்மனைகளையும் அவசரம் அவசரமாகக் கொணர்ந்து அவனிடம் கொடுத்து, சாணை பிடித்துக் கொள்ளுகிறோம். தையல் மிஷினின் மிதியை அழுத்தியதும் சக்கரம் சுற்றுவது போல அவனுடைய சாணைக் கல் சக்கரமும் சுழலும். 'பெருக் கத்தியை அதன் ஓரத்தில் வைத்துத் தீட்டும் போது நெருப்புப் பொறிகள் தெறிக்கும். கத்தி கூர்மையடைவதுடன் பளபள வென்று மெருகேறி மின்னத் தொடங்கும்.

உப்புக் காகிதம் நமக்குப் பழக்கமான ஒரு பொருள். தச்ச வேலை செய்யும் மேஸ்திரிகளுக்கும், மரச் சாமான்களுக்குப் பாலிஷ் போடும் தொழிலாளர்களுக்கும் இது நிரந்தர நண்பன். பழைய வர்ணத்தை அகற்றவும், சுர சுரப்பைப் போக்கவும், மரச் சாமான்களை வழவழப்பாகச் சமன் ஆக்கவும் உப்புக் காகிதம் இன்றியமையாதது. சுர சுரப்பு என்றும் சன்னம் என்றும் நம்பர் வாரியாக வேலைக்குத் தகுந்தபடி உப்புக் காகிதம் உபயோகமாகிறது.

நவீன தொழில் யுகத்தில் உப்புக் காகிதமும் சாணைக் கல்லும் மிகவும் விரிவாக, பல தரப்பட்ட உபயோகங்களுக்குத் தேவைப்படுகின்றன. தேவைகளுக்கும், தொழில்களுக்கும் கருவிகளுக்கும் ஏற்றவாறு, சாணைக் கல்லின் உருவமும், வார்ப்பும், உறுதியும், தன்மையும், அதே போல் உப்புக் காகிதத்தின் தரமும் தன்மையும், உருவமும் உருத் தெரியாமல் மாறி விட்டன. நினைத்துக்கூடப் பார்க்க முடியாதபடி அவ்வளவு விசித்திர வடிவங்களில் இவை தயாரா கின்றன; உபயோகமாகின்றன. 'மொஸெயிக்' தரைக்கு மெருகு கொடுக்க வேண்டுமா? இதோ முக்கோண செங்கல் வடிவத்தில் ஒருவகை

உப்புத் தாள்கள் தயாராகின்றன



சாணைக்கல். ''ஸலூன்''களின் க்ஷவரக் கத்திகளைத் தீட்ட வேண்டுமா? இதோ, கண்ணைக் கவரும் அழகிய வடிவத்தில் கைக்கு அடக்கமாக ஒரு கல். சித்திர வேலைப்பாடுகளா? குச்சி வடிவத்தில் இதோ மற்றொன்று. தொழிற்சாலைகளில் இயந்திர உறுப்புக்களைத் தீட்ட வேண்டுமா? இதோ, அதற்குத் தேவையான உருளை வடிவத்தில், சக்கர வடிவத்தில், இயந்திரத்தோடு இயந்திரமாக இணைந்து செயல்படும் பல வகை சாணைக் கற்கள். தோல் பதனிட வேண்டுமா? அதற்கும் ஒரு பட்டைச் சீலை இருக்கிறது.

இப்படிப் பல்வேறு வகை சாணைக் கற்களையும், உப்புக் காகிதங்களையும் நவீன முறையில் யந்திர சாதனங்களைக் கொண்டு தொழிற்சாலை முறையில் உற்பத்தி செய்யும் தொழிற்களம் சென்னையைச் சுற்றி வேகமாக வளர்ந்து வரும் தொழில் நகரங்களில் ஒன்றாகிய திருவொற்றியூரில் வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகிறது. இதைக் கண்டு சென்னை மாநிலம் பெருமை கொள்ள வேண்டும். ஏனெனில், இன்று விஞ்ஞான ரீதியில் இப்பொருள்களைத் தயாரிக்கும் பெருமை ஆசியாவிலேயே இந்தியாவுக்குத்தான் கிடைத்திருக்கிறது. இந்தியாவிலோ உப்புத் தாள்கள், சாணைக்கற்கள் இரு வகை தயாரிப்புகளையும் ஒரே தொழிற்சாலையில் உற்பத்தி செய்யும் பெருமை சென்னைக்குத்தான் முதன் முதலாகக் கிடைத்துள்ளது.

கார்போரண்டம் தொழிற்சாலை 1955-ம் ஆண்டில்தான் நிறுவப்பட்டது. இவர்களுக்குத் தொழில் நுட்ப உதவி அளித்துள்ளவர்கள் அமெரிக்காவிலுள்ள கார்போரண்டம் கம்பெனி. இங்கிலாந்தில் ஸ்ட்ராப்போர்டிலுள்ள யூனிவேர்ஸல் கிரைண்டிங் வீல் கம்பெனி இக் கம்பெனியில் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றது. இவ்விரண்டு ஸ்தாபனங்களும் உலகப் பிரசித்திபெற்றவை. அவர்கள் தயாரிப்புகள் உலகத்தின் எல்லாப் பாகங்களிலும் உயர்வாகப் போற்றப்படுகின்றன. திருவொற்றியூர் தொழிற்சாலையில் தயாரிக்கப்படும் பொருள்களும் சமமான தரம் உள்ளவை என்பதற்கு இது ஓர் அத்தாட்சி.

பட்டைசீலைகள் தயாரிப்புக்குத் தேவைப்படும் மூலப்பொருள்கள் முக்கியமாக நான்கு—கொரண்டம், கார்னெட் (அல்லது செவ்வு கார்னெட்) எமெரித் துகள்கள், ஃபிளின்ட் (சக்கி முக்கிக் கல்). இவையெல்லாம் போதிய அளவில் நம் நாட்டிலேயே கிடைக்கின்றன. சேலம் மாவட்டத்திலிருந்தும், ராஜஸ்தான் பிரதேசத்திலிருந்தும் இவை கொண்டு வரப்படுகின்றன. இவற்றைத் தவிர உயர் ரகப் பட்டை சீலைகளுக்கும் சாணைக் கற்களுக்கும் 'ஸிலிகன் கார்பைட்' என்ற செயற்கைப் பொருளும் மிகுதியாகத் தேவைப்படுகிறது. வைரத்துக்கு நுட்பான கடினமும் கூர்மையுமுள்ள இப்பொருள் மின்சார சக்தி மூலம் உலையில் தயாரிக்கப்படுகிறது. கண்ணாடி,



(மேலே) மரச்சாமான்கள் சாணைக் கற்களினுல் வழவழப்பாக்கப்படுகின்றன. (நடுவே) கிண்டி தொழிற்பேட்டையில் ''சுருள் ஸ்பிரிங்'' தயாரிப்பில் சாணைக் கற்கள் உபயோகிக்கப்படுகின்றன. (கீழே) ஓர் இணைப்புப் பெல்ட் இரண்டாகப் பிளக்கப்படுகிறது.



1. ஒரு மைல் நீளமுள்ள பட்டைசீலையின் ஒவ்வொரு அங்குலமும் நுண்ணிய பரிசோதனைக்குள்ளாகிறது. 2. மோட்டார் வண்டியின் ''மட்கார்டு'' போன்ற உறுப்புகளை மெருகிட கார்போரண்டம் தயாரிக்கும் ''டிஸ்க்குகள்.''

பிளாஸ்டிக், வார்ப்பு இரும்பு, தேனிரும்பு, தோல், அரக்குச் சாமான்கள் போன்ற பொருள்களை மெருகிட இது அவசியமாகிறது. இது நம் நாட்டில் கிடைப்பதில்லை. நம் நாட்டில் கிடைக்காத முக்கியமான மற்றொரு பொருள் அலுமினியம் ஆக்ஸைட் தூள்கள். இதுவும் வெளிநாடுகளிலிருந்துதான் தருவிக்கப்பட வேண்டும். ஆனால் இவ்விரண்டு பொருள்களும் எஃகு, வார்ப்பு உலோகங்களான தொழிற்சாலை யந்திர சாதனங்களை மெருகேற்றுவதற்கு இன்றியமையாத சாணைக் கற்களைத் தயாரிக்க மிக அவசியமாகத் தேவைப்படுகின்றன. இதை நம் நாட்டிலேயே தயாரிப்பதற்கு வேண்டிய வாய்ப்புக்கள் இருக்கின்றன. பாக்ஸைட் போன்ற மூலப் பொருள்களெல்லாம் கிடைக்கின்றன. உற்பத்தி செய்யும் செய்முறையும் தொழில் நுணுக்க அறிவும்தான் தேவை. இதைப் பூரணமாகப் பெற்றுள்ள கார்போரண்டம் யூனிவர்ஸல் ஸ்தாபனம் இந்த மூலப்பொருளையும் தயாரிக்கப் போகிறது. கேரள அரசாங்கம் எர்ணாகுளத்துக்கருகில் அளித்துள்ள ஐம்பது ஏக்கர் நிலத்தில், இதற்காகவே ஒரு தொழிற்சாலை ஸ்தாபிக்கப்பட்டு வருகிறது. மின்சார சக்தியைக் கொண்டே இயங்க வேண்டிய தயாரிப்பு முறை உடையதால், உற்பத்தி சிக்கலானது. எனினும் விடாமுயற்சியுடன் முனைந்து செயலாற்றும் திறமை படைத்த நிர்வாகஸ்தர்கள் விரைவிலேயே அலுமினியம் ஆக்ஸைட் தூள்கள் கிடைக்க வகை செய்து கொண்டுள்ளார்கள்.



கார்போரண்டம் யூனிவர்ஸலின் கூட்டு நிர்வாக டைரக்டர் திரு எம். வி. அருணாசலம்

1. சாணைக் கற்கள் உலையில் வேக வைத்த பின் மெருகேற்றப்படுகிறது. 2. சாணைக்கல் அளவுகளுக்குத் தகுந்தபடி கச்சிதமாக செதுக்கப்படுகிறது.



இது மகிழ்ச்சிக்குரிய விஷயம். காலப் போக்கில் ஸிலிகன் கார்பைட் கூட இங்கேயே உற்பத்தி செய்து கொள்ளவும் கூடும்.

**கா**ர்போரண்டம் கம்பெனியின் திருவொற்றியூர்த் தொழிலகத்தில் தயாராகும் பொருள்கள் இரு வகை. ஒன்று காகிதத்தின் மீதோ முரட்டுத் துணிகளின் மீதோ அல்லது அம்மாதிரி இதர நார்ப் பொருள்கள் மீதோ பசைகள் தடவி அதன் மேல் சுத்திகரிக்கப்பட்ட எமரி, ஸிலிக்கன் கார்பைட் முதலியவற்றின் கலவையை மின்சக்தி யந்திரங்களின் உதவியால் இலேசாகவும், கனமாகவும், அழுத்தமாகவும் அதனதன் உபயோகத்துக்குத் தக்கவாறு பதித்துத் தயாரிக்கப்படும் "பூச்சுதாகப் பட்டைச் சீலைகள்." (Coated Abrasives) பசை தடவிய காகிதம், துணி மீது கலவைகளைத் தூவிப் பதிப்பது ஒரு முறை. இது யந்திரங்களைக் கொண்டு செய்யப்படுகிறது. மற்றொன்று "எலெக்ட்ரோஸ்டேடிக்" முறை. மின்சார சக்தியின் உதவி கொண்டே இதுவும் நடைபெறுகிறது. பூச்சு முடிந்ததும் பார்த்தால் கூரான பாகங்கள் எல்லாம் மேல் நோக்கியும், தட்டையான பகுதிகள் பசையில் பதிந்துமிருப்பதைக் காணலாம். மற்றொரு வகை ஸிலிகன் கார்பைட் முதலிய பொருள்களினாலான கலவைகளை இரும்பு அச்சுகளில் தட்டையாகவும், வட்டமாகவும் இயந்திர மூலம் அழுத்தி அவற்றை மின்சார அடுப்பில் வேக வைத்துத் தயாரிக்கப்படும் "இணைப்பு வகைச் சாணைக் கற்கள்" (bonded abrasives). எந்த வகைத் தயாரிப்பானாலும் தரம் குறையாமல், கண்காணிப்புடன் தொழில் நடப்பது இங்கே விசேஷம். மூலப் பொருள்கள் தொழிற்சாலையில் நுழையும் போதே பரிசோதனைச் சாலையில் சோதிக்கப்படுகின்றன. பின்னர் அவை சுத்திகரிக்கப்படும்போதும் கலவையாக்கப்படும்போதும் அச்சுகளில் அழுத்தி எடுக்கும்போதும், வேக வைத்த பின்னரும் அவற்றுக்கு மெருகிட்டுச் சீர் செய்யப்படும்போதும் பரிசோதனை செய்யப்படுகின்றன. அச்சுகளில் சிறியனவும், பெரியனவுமான சாணைக் கற்கள் அழுத்துவது வெகு கவனத்துடன் செய்ய வேண்டுமாம். சிறிது அழுத்தமாக யந்திரத்தைச் செலுத்தினும் இணைப்புச் சிதறிவிடுமாம். அழுத்தம் சிறிது குறைவாக இருந்தாலோ குறிப்பிட்ட உருவமே நிலைக்காமல் கலவைகள் பொடியாகவே உதிர்ந்து விடுமாம். இவ்வாறு தயாரிக்கப்பட்ட கச்சா வார்ப்புகள் உலைக் கூடத்தில் 4, 5, 10 நாட்கள் வேகின்றன. பின்னர் எடுக்கப்பட்டு மீண்டும் பரிசோதிக்கப்பட்டதும்தான் தொழிற்கூடத்தை விட்டுக் கிடங்குக்குச் செல்கின்றன. உருவாக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் அதனதன் வடிவம், அளவு, கனம் முதலிய விவரங்களைக் கொண்ட சீட்டுகளுடன் வரிசை வரிசையாகக் காட்சி யளிப்பதைப் பார்த்தால் தொழிற்சாலையில் நடைபெறும் வேலைகள் பல பகுதிகளில் நடைபெற்றாலும் ஒன்றோடொன்று இணைந்து இறுதிப் பொருளைப் பெருமையுடன் அளிப்பதில் ஒரு தனி மனிதனின் கவனத்துடன் செய்யப்படுகின்றன என்பது தெரியும்.

இங்கே சுமார் 700 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். பலர் சென்னையைச் சேர்ந்தவர்கள். பலர் வெளிப் பிரதேசங்களிலிருந்து வந்தவர்கள். எல்லோரும் தொழில் நுட்பங்களையும் இயந்திர நுட்பங்களையும் விரைவில் கற்றுக் கொண்டு சாமர்த்தியசாலிகளாகத் திகழ்கின்றனர். அவர்களுடைய வசதிக்காக நிறுவப்பட்டுள்ள உணவுச்சாலைகள் கூட நவீன முறையில் யந்திரங்களைக் கொண்டு இயங்குபவை. இட்லியும், சாதமும், சாம்பாரும் வெகு விரைவில் தயாரித்தளிக்கும் தன்மை வாய்ந்தவை.

இவ்வளவு நேர்த்தியான முறையில் அமைந்துள்ள தொழிற்சாலைக்கு நிர்வாகப் பொறுப்பு வகிப்பவரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டாமா? புகழ் பெற்ற முருகப்பா அண்டு ஸன்ஸ் ஸ்தாபனம் தோற்றுவித்த தொழில் கூடங்களில் இது ஒன்று என்றுமே அதன் சிறப்புக்குச் சான்று. முருகப்பா ஸ்தாபனங்களுடன் நெருங்கிய தொடர்புள்ள டாக்டர் ஏ. ராமஸ்வாமி முதலியார் இக் கம்பெனிக்குத் தலைவர் என்றால் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. நிர்வாக டைரக்டர் திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார். அவருடன் துணையாக நிற்பவர் தொழிற் நுட்பங்கள் அறிந்த திரு ஏ. எம். எம். அருணாசலம். இவர்களுடைய கண்காணிப்புடன் தினசரி நிர்வாகத்தையும், நடவடிக்கைகளையும் சீரிய முறையில் கவனித்து வருபவர் திரு எம். வி. அருணாசலம். வயதில் சிறியவரானாலும் தொழில் நுட்ப அறிவிலும், நிர்வாகச் சுறுசுறுப்பிலும் உயர்ந்தவர். தொழிற்சாலையைத் திறம்பட நடத்திச் செல்வதில் காலஞ்சென்ற தமது தந்தையார் ஏ. எம். எம். வெள்ளையன் செட்டியாரின் முழு சாமர்த்தியத்தையும் நன்றுகொண்டவர். இவருடைய ஊக்கத்துக்கும் முன்னேற்றத்துக்கும் சின்னமாக விளங்குவதுதான் புதிதாகக் கேரளத்தில் தோற்றுவிக்கப்பட்ட அலுமினியம் ஆக்ஸைட் தொழிற்சாலை.

மகாராஷ்டிரா பிரதேசத்தில் உள்ள துறைமுகத்தின் சமீபத்தில் கிடைக்கும் பாக்ஸைட் மூலப் பொருளை அங்கே ஒரு தொழிற்கூடத்தில் சுத்திகரித்து, அதைக் கேரளத்துக்குக் கொணர்ந்து, மின்சார உலையில் அலுமினியம் ஆக்ஸைடாக மாற்றி, அதைச் சென்னையில் உள்ள தொழிற்கூடத்துக்குக் கொண்டு வந்து உயர்—ரக உறுதி வாய்ந்த விசேஷ வகை சாணைக் கற்கள் தயாரிக்க வேண்டுமானால் எவ்வளவு இணக்கமாகத் திட்டமிடப்பட்டிருக்கும், எவ்வளவு திறமையுடன் இவை முறை தவறாது செய்யப்பட வேண்டியிருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

தொழில் வளர்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்கள் செய்யும் பிரமிக்கத்தக்க செயல்கள் இம்மாதிரிதான் இருக்கும். அவர்களின் முயற்சி மேன் மேலும் சிறக்கட்டும். மற்றத் தொழில்களுக்கு மெருகேற்றும் கார்போரண்டம் யுனிவர்ஸல் தொழிலகம் தானும் மெருகு போட்டுக் கொண்டு பளபளக்கட்டும். —எம். எஸ். சிவஸ்வாமி

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



ன்னதமான காஷ்மீர் பொக்கே
ின் தரம், ஒரு அழகுசாதன டால்க்...
ரு குழந்தைக்கான பவுடர்
இவ்விரண்டையும் அளிக்கிறது.

ாஷ்மீர் பொக்கே டால்க்கின்
ருமையான, பூவிதழ்போன்ற
மென்மையான ஸ்பரிசத்தை
ங்கள் உணரும்பொழுது ஒரு
ச்செண்டிற்குள் இருப்பது போலவே
தான்றும். உடல் முழுவதும் தடவிக்
கொண்டு அதன் ஊற்றுப்பெருக்
கென எழும் புதிய நறுமணத்தில்
திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போல் நயமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!

CB-G-19-TAM.



"என்ன ராஜு மறுபடியும் பள்ளிக் கூடத்துக்கு 'லேட்'டா?"



"என்னமோ, சீதா! ராஜு விஷயமா என்ன செய்யறதுன்னே தெரியல்லே. எப்பவும் களைப்பா இருக்கான். எதிலும் அலட்சியம். பால்கூட குடிக்கிறதில்லே".



"அவனுக்கு உடம்பிலே சக்தி குறைச்சலா யிருக்கலாம், கமலா. தினந்தோறும் ரெண்டு 'கப்' போர்ன் - விடா கொடுத்துப் பார். எங்க டாக்டர் எப்பவும் அதைத்தான் சிபார்சு செய்கிறார்"



சீதா சொன்னபடி செய்தேன். என் செல்வன் ராஜு நாளுக்கு நாள் அதிக சுறுசுறுப்பு அடைந்து வருகிறான் — எல்லாம் போர்ன்-விடா தந்த சக்தி.



"பள்ளிக்கூட பஸ் வர ரொம்ப நேரமிருக்கு, ராஜு. இப்பெல்லாம் நீ ரொம்பச் சீக்கிரமா எழுந்து, உற்சாகமா யிருக்கிறயே!"

# அவன் இவ்வளவு சுறுசுறுப்பாக என்றுமே இருந்ததில்லை!




## BOURN-VITA

சக்திக்கும்
வலிமைக்கும்

தயாரிப்பாளர்கள்:
Cadbury's

ராதா கோவிந்தனுக்கு 'யோகம்' பிறந்தது.

இந்தக் கலியிலும் உண்மையான பக்தியுடன் மனங் குவிந்து பூஜிக்கும் ஓர் அர்ச்சகர் அவனுக்குக் கிடைத்து விட்டார்.

பூவினால் மட்டுமின்றிப் பாவினாலும் கண்ணனைப் பாவிப்பார் கதாதரர். அழகின் மூலம் கடவுளைக் கண்டவர் கதாதரர். அவருடைய பக்தியைக் கவித்துவ பக்தி என்றே சொல்லலாம். இயற்கை எழில்களிலும் இசை எழிலிலும் அவர் வெகு எளிதாக இறையுணர்வைப் பெற்றார். கதாதரரின் இசையில் குரலின் இனிமையுடன், உணர்ச்சியின் இனிமையும் கலந்து கேட்போருடைய செவிகளை மட்டுமின்றிச் சித்தத்தையும் தித்திக்க வைக்கும். அவருடைய சுருதி உலகத் தோற்றத்துக்கெல்லாம் எது ஆதார சுருதியோ அதுவேயாகும். அவருடைய லயம் சகல உலகமும் லயமாகும் மனோலயமாகும். எனவே, அவர் பாடிய கீதமே வேதமாக ஒலித்தது. ஆலயத்துக்கு வரும்போதெல்லாம் ராணி ராஸமணி கதாதர பட்டாசாரியரைப் பாடச் சொல்லிக் கேட்டு ஆனந்திப்பாள்.

கண்ணன் மீது மட்டுமின்றி, காளி மாதாவின் மீதும் கானம் செய்வார் கதாதரர்.

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ஆண்டவன் உடல்மேல் தாண்டவம் புரியும்
காரணம் என்ன என் காளியே ?
மங்களம் பாவும் தங்கிய முகத்தில்
தொங்கிய நாவுடன் தோன்றுவதேன் ?
பைத்தியம் உந்தன் பிறவிக் குணமா ?
வழிவழியாய் வந்த பரம்பரைக் குணமா ?
உன் தந்தை உடல் மேல் தாயும் இது போல்
'தொந்திமி தோம்' என்று ஆடியதுண்டா ?

என்று பவதாரிணியைப் பார்த்து அவர் சர்வ ஸ்வாதீனமாகப் பாடும்போது ராஸமணி இதயம் புளகமடைவாள்.

ஈசுவரனை ருத்திரன் என்று காணும் போது அவனும் முக்குணங்களுக்குள் அகப்படுபவன்தான். உலகை நிஜமாகக் கொண்டு அதனை சம்ஹரிப்பவன்தான். அதற்கும் உயர்வாக, உலகத் தோற்றத்தின் காரணமான மாயைக்கும் இந்த உலகமே பொய் என்று ஆகிற பிரம்ம நிலைக்கும், காளி உருவமாவாள். அவள் விவகாரப் பிரபஞ்சத்துக்கு மேற்பட்டவள் என்பதைக் காட்டத்தான் காலகாலனைக் காலின் கீழிட்டு மிதிக்கிறாள். தீய சக்திகளை வெல்லுபவள் என்பதைக் குறிப்பிடவே அவள் ஆயுதங்கள் தரித்திருப்பதும், கோர வடிவு கொண்டு நாவை நீட்டி, விழிகளை உருட்டுவதும். இந்தத் தத்துவார்த்தமெல்லாம் தமக்காகவே தெரியப் பெற்ற கதாதரர்,

அவள் தத்துவச் சின்னம் என்பதை மறந்து தாய் எனக் கண்டு, சேயாக இருந்து அவளைக் கேலி செய்வது போலப் பாடுவார். கேட்போரின் இதயத்திலெல்லாம் எதிரொலி செய்யப் பாடுவார்.

ஆனால் கேட்போர் நினைவு என்பதே அவருக்கு இருக்காது. தாமும், தாம் வழுத்தும் தெய்வமும்தான் அவர் நினைவில் இருக்கும். ஏன், தம்மையுமே மறந்து அவர் கானம் செய்வதும் உண்டு. பண்மாரியுடன் கண்மாரியும் பொழிய இசையில் கசிவார் அவர்.

கோவிந்தஜிக்கு அவர் பூஜை புரியும் போது எல்லா அர்ச்சகர்களும் செய்வது போல அதை ஒரு தொழிலாகக் கருதிச் செய்ய வில்லை. அதுவே தம் வாழ்க்கை என்று நம்பிச் செய்தார். நம்பினோர் கெடுவதில்லை என்பது நான்கு மறைத் தீர்ப்பல்லவா? எனவே அவர் புரிந்த ஆராதனை ஆத்மாநுபவத்துக்கு அஸ்திவாரமிட்டது.

## ரா. கணபதி



பூஜைத் தொடக்கத்தில் மந்திரம் ஓதி அங்க ந்யாஸம் செய்து உடலின் பகுதிகளைத் தெய்வ சக்திகள் தூய்மைப் படுத்துவதாகப் பாவிப்பது வழக்கம். இவர் வெறுமனே பாவிக்க வில்லை. உண்மையாகவே தம் அங்கங்களில் மந்திர அக்ஷரங்கள் ஒளி வடிவத்துடன் உறைவதைக் கண்டார். மந்திரங்களை ஒளி வடிவில் காண்பவர்களை ரிஷிகள் எனப் படுவர். சிரத்தைதான் என்னவெல்லாம் செய்து விடுகிறது? இருபது வயசு கதாதரர் ரிஷியாகி விட்டார்.

'காயமே கோயிலாக' — மனித உடலைத் தேவாலயமாக — காணும் மார்க்கங்களில் தந்திர சாதனை ஒன்று. மனித உடலத்திலிருந்தாலும் பௌதிகக் கருவிகளால் காண

இயலாத நாடிகளிலும் சக்கரங்களி லும் பிராண சக்தியை இயக்குவதால் ஜீவனும் சிவனும் ஒன்றுவதைக் கூறும் மார்க்கம் இது. முதுகெலும்பின் அடியிலுள்ள மூலாதாரச் சக்கரத்தில் ஜீவபாவத்துக்குக் காரணமாகப் பிராண சக்தி குண்டலினிப் பாம்பாக உறங்கிக் கொண்டிருக்கிறது. இதனை ஸ்வாதிஷ் டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா முதலிய சக்கரங்களின் வழியாக மேலே செலுத்தி சிரஸின் உச்சி யில் உள்ள ஸஹஸ்ராரத்தில் சேர்க்கும் போது ஜீவனும் சிவமும் ஒன்றாகி விடும். இந்தக் குண்டலினியாம் பாம்பினை ஆட்டி அசைவித்து மேலேறச் செய்வதைத்தான் 'ஆடு பாம்பே, விளையாடு பாம்பே!' என்று சித்தர்கள் பாடுகிறார்கள். தந்திர சாதனையின் மூலம் முக்தி நிலை பெறுவது எவ்வளவு கடினம் என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் தெள்ளிய உள் ளம் பெற்ற கதாதரரோ பூஜைக்கு முன் ஒரு பிராணாயாமம் செய்த அளவிலேயே குண்டலினி சக்தி சர சர வென்று சுழுமுனை என்ற ஸுஷும்னா நாடி வழி யாக உச்சிக்குப் பாய்வதை உணர்ந் தார். 'தேவ சக்திகளை அழைக்கவும், தீய சக்திகளை விரட்டவும் மணியை முழங்குகிறேன்' என்று சுலோகம் கூறி அவர் மணி அடிக்கும் போது உண்மையா கவே அந்தச் சக்திகளை உருப்படைத்த அசுரர்களாகவும் தேவர்களாகவும் கண்டார்.

பூஜையைத் தொடங்கி விட்டாலோ கேட்கவே வேண்டாம். பக்தி சமுத் திரத்தில் உறைந்து கதாதரர் பனிமலை யாகக் குளிர்ந்து ஜ்வலிக்கத் தொடங்கி விடுவார். கதாதரனாகிய நாராயணனின் நாமத்தைத் தாங்கியது போலவே, ரூபத்தையும் தாங்கியவராகப் பிரகாசிப் பார். 'விஷ்ணுவுக்குப் பூஜை செய் கிறாரா? விஷ்ணுவே பூஜை செய்கிறாரா?' என்று பக்த ஜனங்கள் வியந்து போவார்களாம்.

'பொருள் என்பது துகள் வடி வாகத்தான் இருக்க வேண்டும்; ஒளி என்பது அலை வடிவில்தான் இருக்க வேண்டும்' என்ற பழைய விஞ்ஞானக் கோட்பாடுகளை நவீன விஞ்ஞானம் தகர்த்து விட்டது. 'பொருளும் அலை வடிவில் இருக்க முடியும்; ஒளியும் துகள் வடிவில் இருக்க முடியும்; இறுதியில் அலை — துகள் என்பதெல்லாமே வேறு வேறல்ல' என்பது புதிய விஞ் ஞானக் கண்டு பிடிப்பு. இந்தக் கருத்தை மனதில் கொண்டு இன்னும் சிறிது மேலே சென்றால், நாம் உருப் படைத்தவை என்று எண்ணுபவை எண்ணமாக, தத்துவமாக இருக்க முடியும்; நாம் எண்ணங்கள் என்றும் தத்துவம் என்றும் நினைப்பவை உருவத் துடன் விளங்கமுடியும் என்பதை ஒப்புக் கொள்ளலாம். பரிசோதனைலயத்தில் விஞ்ஞானி சோதனை நடத்திக் கூறும் முடிவை நம்புவது போல, தங்களையே பரி சோதனைலயமாக்கிக் கொண்டு ஞானிகள் கூறும் முடிவையும் நாம் ஏற்கத்தான் வேண்டும். டாக்டரின் ஸ்டெதாஸ் கோப்புக்கும், எக்ஸ்ரே கருவிக்கும் உட லுக்குள் இருக்கும் எல்லா சூக்ஷ்மங்களும் அகப்பட்டுத்தானாக வேண்டும் என்ற கற்பனை காரணமாகவே யோக சாஸ்திரங் களும், தாந்திரிக நூல்களும் கூறும் மார்க்கங்களில் பலர் அவநம்பிக்கை கொள்கிறார்கள். கதாதரர் நம்பிக் கையே உருவாக இருந்து ஐயமற சாஸ் திரங்களின் முடிபுகளைத் தம்மில் நிரு பித்துக் கொண்டார். ஸ்தூலமானவற் றைத் தத்துவங்களாகவும் கண்டார்; தத்துவங்களை உருவத்திலும் கண்டார்.

ஒரு நாள் அவர் தியானம் புரிந்த போது அவருடைய உடலிலிருந்து உண் மையாகவே கரிய உருவம் படைத்த பாப புருஷன் வெளியேறுவதையும், அவ னைத் தொடர்ந்து தமது உயர்ந்த மனோ பாவங்கள் தேவ ரூபத்தில் செல்வதை யும், தேவன் அசுரனை வெல்லுவதையும் கண்கூடாகப் பார்த்தார் அவர்.

ராமகுமார் நாளுக்குநாள் பலவீன மடைந்து வந்தார். சடங்குகள் அதிக மாகக் கொண்ட பராசக்தி பூஜையை நடத்துவது அவருக்கு அசக்தமாயிற்று. எனவே, அவர் ராதா கோவிந்தனுக்குப் பூஜை செய்வதென்றும், கதாதரர் பவ தாரிணிக்குப் பூஜை செய்வதென்றும் ஏற்பாடாயிற்று.

கடலும் நதியும் நெருங்கி நெருங்கி வந்தன.

சக்தி வழிபாட்டு முறைகளை ராம குமார் கதாதரருக்குக் கற்பித்தார். கேனாராம் பட்டாசாரியர் என்ற பெரி யார் கதாதரருக்குச் சக்தி மந்திரத்தை உபதேசித்தார்.

கதாதரரின் செவியில் அந்தப் பரம பவித்திரமான சப்தம் சிந்தியவுடன் அவ ருக்குள் அமிருததாரை பாய்வது போல் இருந்தது. பாய்ந்து வந்த அமுத தாரை அவருடைய இதய குகையிலே தோய்ந்து நிரம்பி நின்றது. பல்லாயிரம் கோடி ஆண்டுகள் சிந்தனையில் இருந்து நீங்கிய ஓர் ஆனந்த நினைவு, அடைத்து வைத்த நீர் திறந்தவுடன் பீறிட்டுக் கொண்டு பிரவகிப்பது போல் மீண்டும் கதாதர ருள் பெருக்கெடுத்தது. பாவ சமாதி அடைந்துவிட்டார் கதாதரர். இந்த

# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கருநிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சியளித்து, ஞாபகசக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்யமாக வாழ்வீர்கள்

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

## SHRI RAMTIRTH YOGASHRAM

DADAR, BOMBAY - 14

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ் - 3

---

தலை நோவு, இடுப்புவாதம், மார்புச்சளி ஆகிய வற்றை சீக்கிரமாகக் குணம் பெறச்செய்வதற்கு




# நோபின்

கல்கெமிகோவின் நோவு நிவாரண மருந்து

சொறிசிரங்குகள், பருக்கள், கொப்புளங்கள், கட்டிகள், புண்கள், காயங்கள் முதலியவற்றிற்கு

# மார்க்வென்டம்

நீம் க்ரீம்




“மார்கோ” சோப்பு உற்பத்தியாளரான கல்கெமிகோவின் தயாரிப்புகள்

CF-ETH-6

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

**புதியது**

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு
விருப்பமானது. ஏனெனில்
அது எந்தக் குடும்பத்திற்கும்
ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுட
னிருக்க நான் ப்ரோடெக்ஸையே
விரும்புகிறேன்"

"எனது மிருதுவான
சருமத்தைப் பாதுகாப்பதால்
அம்மா ப்ரோடெக்ஸையே
விரும்புகிறாள்"




ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.

## ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-O-7-TAM.

அசாதாரணமான பக்தியைக் கண்ட கேனராம் அவரை உளமாற வாழ்த்தி மகிழ்ந்தார்.

ராமகுமார் கல்கத்தாவுக்கு வடக்கேயுள்ள சியாமநகர் முலாஜோர் என்ற இடத்துக்கு ஏதோ காரியமாகச் சென்றார். கமார்புகூரிலிருந்து வெளியூர் சென்றபோது தந்தை க்ஷுதிராம் உடல் நலிவுற்று உயிர் நீத்தது போலவே, ராமகுமாருக்கும் சென்ற விடத்தில் திடீரென்று தேக நிலை க்ஷீணித்தது. அநாயாசமாக அம்பிகையின் திருவடி நீழலை அடைந்து விட்டார் அவர்.

கமார்புகூரில் வயோதிகத்தில் வாடிக் கொண்டிருந்த சந்திரமணியும், தக்ஷிணேசுவரத்தில் அண்ணனை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த கதாதரரும் செய்தியைக் கேட்டு அதிர்ந்து போனார்கள்.

'சாவு என்றால் என்னவென்று யோசித்த ராஜகுமாரன் சித்தார்த்தன் கௌதம புத்தரானார். இதே போல் கதாதரரின் ஆத்ம வளர்ச்சிக்கும் அண்ணனின் மரணம் எவ்வளவு உதவி செய்திருக்குமோ, யார் சொல்ல முடியும்?' என்று வினவுகிறார் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சரிதாம்ருதத்தைத் தரும் சாரதாநந்தாஜி மஹராஜ்.

காலன் கைப் பாசத்தை மீறக் காளி அன்றி வேறு கதியில்லை என்று கதாதரர் எண்ணியிருக்கலாம். இகவுலக வாழ்க்கை எவ்வளவு அநித்தியம் என்பதைக் கண்டு நித்திய சத்தியமான சர்வேசுவரியை முழுமனதுடன் நாடியிருக்கலாம். துன்பங்கள் மட்டுமின்றி, இன்பங்கள் என்று நாம் எண்ணுபவையும் உண்மையில் நம்மை பவக் கடலுக்குள் இழுக்கும் தூண்டிற் புழுவே என உணர்ந்து பவதாரிணியை அணுகியிருக்கலாம்.

ஆனால் கதாதரர் தேவியிடம் ஈடுபட்டதற்குப் புறக் காரணங்களை ஏன் தேட வேண்டும்? மேட்டிலிருந்து நீர் பள்ளத்துக்குப் பாய்வதற்கும், தீயில் மெழுகு உருகுவதற்கும், நிலவைக் கண்டதும் கடல் பொங்குவதற்கும், சூரியனைக் கண்டதும் தாமரை மலர்வதற்கும், அன்னையைக் காணவேண்டுமெனக் குழந்தை துடிப்பதற்கும் புறக் காரணம் தேவையா என்ன?

கதாதரர் தமது மனம், மொழி, மெய் எல்லாவற்றையும் தேவிக்கே அர்ப்பணித்து அற்புத பூஜை புரியலானார். கண்ணீரில் குரல் சிக்கிக் குழற, தொண்டை வலிக்க வலிக்க அவர் ராமபிரஸாத், கமலாகாந்தர் ஆகியோரின் துதிப் பாடல்களைத் தேவிக்கு முன் பாடுவார். பூஜையும், பாடலும் போக மீதி நேரத்திலும் அவர் யாருடனும் பேசுவதில்லை. பிரமை பிடித்தவர் போலவே மனோராஜ்யத்திலிருந்தார். ஹிருதயருக்கு இது பெரும் வேதனை அளித்தது. எவ்வளவு முயன்றும் அவரால் கதாதரரைத் தம்மிடம் திருப்பிக் கொள்ள முடியவில்லை.

இதெல்லாம் போகட்டுமென்றால், நள்ளிரவில் கதாதரர் தோப்புக்குள் எங்கோ தூர தூரச் சென்று கொண்டிருப்பது எதற்கு. என்பது ஹிருதயருக்குப் புதிராக இருந்தது. பஞ்சவடி என்பதாக ஐந்து வகைத் தருக்கள் கொண்ட அந்தத் தோப்பு மயானத்துக்கருகே இருந்தது. பகல் போதில்கூட அணுகப் பயங்கரமாக இருந்த அந்த இடத்தில் கதாதரருக்கு நடு நிசியில் என்ன வேலையிருக்கும்?

பல முறை கதாதரர் அறியாமலே அவரை ஹிருதயர் பின்பற்றினார். எனினும் இடுகாட்டை நெருங்கப் பயந்து திரும்பி விடுவார். ஒரு நாள் முழுத் தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு கடைசி வரை 'சின்ன மாமா'வைப் பின்தொடர்ந்தார்.

கதாதரர் புதர்களையும், குழிகளையும், குட்டைகளையும், நெருக்கமான மரங்களையும் கடந்து பஞ்சவடி சேர்ந்தார். மயான பூமியிலிருந்து அவரை மீட்க வேண்டும் என்று எண்ணி அவரைப் பயமுறுத்துவதற்காக ஹிருதயர் மறைவிடத்திலிருந்து கற்களை விட்டெறிந்தார். ஆனால் கதாதரரோ லட்சியமே செய்யவில்லை. மேரு பர்வதத்தைப் பருக்கைக் கற்களால் அசைக்க முடியுமா என்ன?

நெல்லி மரம் ஒன்றின் அடியை அடைந்தார் கதாதரர்.

இதென்ன கூத்து? அவர் ஏன் தமது ஆடைகளைக் களைந்து கொள்கிறார்?

சின்ன மாமாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? ஏன், அவர் பூணூலையும்கூடக் கழற்றி விட்டார்!

ஏதோ பெரிய பாரம் நீங்கினாற்போல அமைதியுடன் ஆமலக மரத்தடியே அமர்ந்து தியானம் புரிகிறாரே!

ஆகா, அண்ட சராசரங்கள் அத்தனையும் புரண்டு வந்து மோதினாலும் கவலையில்லை என்ற எத்தகைய சாந்தத்துடன் அவர் தியானம் புரிகிறார்?

"மாமா, அதென்ன உங்கள் உடையையும், உபவீதத்தையும்கூட எடுத்து விட்டுத் தியானம் செய்கிறீர்களே!" என்று மறு நாள் பகல் தம்மை அடக்க

மாட்டாமல் கதாதரரைக் கேட்டு விட்டார் ஹிருதயர்.

''கட்டுக்களை எல்லாம் விலக்க வேண்டியதுதானே! நிர்வாணம் என்று நீ கேலி செய்யலாம். அதுவே மகாநிர்வாணத்துக்கு உதவியாயிருக்கிறது'' என்றார் கதாதரர்.

நாம் எல்லோரும் ஏதோ அகவாழ்வில் அழுந்திய ஆத்ம ஞானிகள் போல, 'புறத் தோற்றத்தில் என்ன இருக்கிறது சடங்கில் என்ன இருக்கிறது?' என்றெல்லாம் நீட்டி முழங்குகிறோம். இப்படிப் பேசிப் பேசியே அகம்-புறம் இரண்டையும் சுத்தமாக்கிக் கொள்ளாமல் காலம் தள்ளுகிறோம். உள்ளத்திலேயே வாழ்ந்த உத்தம கதாதரரோ புறவிஷயங்களையும் பெரிதாக மதித்து, ஒதுக்க வேண்டியதை ஒதுக்கி, ஏற்க வேண்டியதை ஏற்று வாழ்ந்தார். ஸ்தூலமான பௌதிகப் பொருள்களைக் கொள்ளுவதும் தள்ளுவதும்கூட ஆத்ம தத்துவங்களை அநுபவிக்க உதவும் என்று அவர் நம்பினார். 'பொன்னும் மண்ணும் ஒன்று' என்பதை உய்த்துணர வேண்டும் என்பதற்காக உண்மையிலேயே ஒரு கையில் மண்ணையும், மற்றொரு கையில் நாணயங்களையும் வைத்துக் கொண்டு, 'இது இரண்டும் ஒன்றே' என்று கூறியபடி கங்கா பிரவாகத்தில் இரண்டையும் விட்டெறிவார். நாளாவட்டத்தில் அவர் கண்ணுக்குப் பொன் மண்ணாகவே தெரிந்தது. பணத்தைத் தவறிப் போய்த் தீண்டினாலும் அவர் உடம்பு வாஸ்தவமாகவே பற்றி எரிந்தது. இது உண்மைதானா என்று பிற்காலத்தில் பரமஹம்ஸரின் படுக்கை கீழ் பணத்தை ஒளித்து வைத்துச் சோதித்துப் பார்த்து நிச்சயம் பெற்றார் நரேந்திரர்.

இன்னும் பல விதங்களிலும், 'வெளித் தோற்றம்தானே!' என்று நாம் அலட்சியப் படுத்துபவற்றையும் உள்ளுக்கு உயர்வுதர உபாயமாகக் கண்டார் கதாதரர்.

தக்ஷிணேசுவரமே தமது இருப்பிடம் என்று கதாதரர் உறுதி கொள்ளுமளவுக்குக் காளி அவரைத் தன்னுடன் பிணைத்துக் கொள்ளலானாள். இந்தச் சமயத்திலிருந்து அவர் அன்னைக்கு நிவேதனமான பிரசாதத்தையும் உட்கொள்ளத் தொடங்கினார். வாயால் விடை சொல்லித் தீர்க்க முடியாத ஆசார - அநாசாரப் பாகுபாடுகளை உள்ளமே மொழியற்ற விடையில் தீர்த்து விட்டது.

'ஏதோ ஒரு காலத்தில் பூஜை செய்வது; பின்னர் அதை மறப்பது' என்பது கதாதரருக்கு இயலாத காரியமாக இருந்தது. பூஜாபலனைப் பெற வேண்டும் என்ற துடிப்பு அவரது உடலின் ஒவ்வோர் அணுவிலும், உள்ளத்தில் எழும் ஒவ்வோர் எண்ணத்தின் கருவிலும் முட்டிமோதிக் கொண்டிருந்தது.

பூஜா பலன் என்ன?

அன்னை பவதாரிணியை விக்கிரகமாக அன்றி உடலும் உயிரும் படைத்தவளாகத் தரிசிப்பதுதான்.

தெய்வ தரிசனம் பெற வேண்டும் என்ற ஆசை தெய்வ தரிசனம் பெற்றே தீர வேண்டும் என்ற ஆர்வமாயிற்று.

ஏதேதோ காரியங்களுக்காகக் கடவுளை வேண்டிக் கொள்ளும் கோடிக்கணக்கான உலக மாந்தரிடையே கடவுளைக் காண வேண்டும் என்பதற்காகவே கடவுளை வேண்டிக் கொண்டார் கதாதரர்.

உள்ளுருகி பக்தி புரிந்தால் தேவியின் தரிசனம் கிடைக்கும் என்று பூரணமாக நம்பி அனவரதமும் அன்னைக்காக ஏங்கி அழத் தொடங்கினார்.

''அம்மா, நீ ஏன் எனக்குத் தரிசனம் தர மாட்டேன் என்கிறாய்? உன்னைத் தவிர எனக்குப் பொன்னோ, பொருளோ, பதவியோ புகழோ, பந்து மித்திரரோ எதுவும் வேண்டாம். நீ ஒருத்தியே வேண்டும் என்று குழந்தை நான் தவிக்கிறேன். ஏன் நீ என் முன் வருகிறாயில்லை?'' என்று விசித்துக் கொண்டே அன்னை பவதாரிணியைக் கேட்பார்.

கண்ணிலிருந்து சிதறும் நிரவ மலர்கள் அவரது மார்பில் சரங்களாகக் கோத்துக் கொள்ளும். இதயம் பாறையாகக் கனக்கும். தொண்டைத் தசை நார்கள் குமுறிக் குமுறித் தவிக்கும். அடிவயிற்றிலிருந்து கேவல்கள் புறப்பட்டு அவரது சிரஸ் வரையில் ஊடுருவிப் பிளக்கும்.

'ஏன், நான் அவளைத் தரிசிப்பதால் அவளுக்கு என்ன நஷ்டமாம்? அம்மாவாக இருந்து கொண்டு இப்படி ஏன் என்னை அழ வைக்கிறாள்?' என்று சிந்தாகுலமாவார்.

பள்ளியில் ஒரு வகுப்பிலிருந்து இன்னொரு வகுப்புக்கு உயர்த்துவதற்கு நாம் பரீட்சை வைக்கிறோம். சிறிய வேலை ஒன்று கொடுப்பதற்கு முன் அபேட்சகரைப் பரீட்சித்துப் பார்க்கிறோம். அப்படியானால், மண்ணிலிருந்து விண்ணுக்கு உயர்த்தி ஆத்ம சாம்ராஜ்யம் அளிப்பதற்கு ஆண்டவன் எவ்வளவு பரீட்சைகள் வைக்க வேண்டும்? அவற்றில் ஒன்றாகத்தான் பக்தனின் விசுவாசத்தைப் படம் போட்டுச் சோதித்துக் கொண்டிருந்தாள் தேவி.

கதாதரர் அலுத்துப் போகவில்லே; மாருக, அவரது உணர்ச்சி மேலும் மேலும் தீவிரமாகிக் கொண்டு வந்தது. பூஜை நேரம் நீண்டுகொண்டே போயிற்று. பூஜைக்கமரும் போது தலையில் மலரைத் தூவிக் கொண்டு தேவியைத் தியானிப்பவர் அப்படியே அமர்ந்திருப்பார். விநாடிகள் நிமிஷங்களாகும். நிமிஷங்கள் மணிகளாகும். மேலே பூஜையைத் தொடர வேண்டும் என்ற நினைப்பே இன்றிக் கல்லில் செதுக்கிய சிலே போல அவர் அமர்ந்திருப்பார்.

வெளிப் பார்வைக்குத்தான் சிலே. உள்ளே மலே மலேயாக அலேகள் ஆரவாரம் செய்யும். கல்லில் வடித்த சிலேயாகிய தேவி காளியைச் சுற்றிச் சுற்றி அவை மோதும். அந்தச் சிலேயை இளக்கி—தாய்மை எவ்வளவு இளக்கமானதோ அப்படி இளக்கி—அதனில் உயிரைக் காண வேண்டுமென்று அந்த அலேகள் ஆக்ரோசமாக அடித்து வீசும்.

ஒருவாறு வெளி உணர்வு வந்தபின் பூஜை தொடரும். ஆனல் இவரிடம் அபிஷேகத்துக்கு இத்தனே நேரம், அர்ச்சனேக்கு இத்தனே நேரம், நிவேதனத்துக்கு இத்தனே நேரம் என்றெல்லாம் வரையறையை யாரும் எதிர்பார்க்க முடியாது. தேவிக்கு நிவேதனத்தைக் காட்டி விட்டு அவள் உண்டதாகப் பாவனே செய்வதோடு அவர் நிற்கமாட்டார்.

''நீ இதை உண்டால்தான் ஆச்சு'' என்று மல்லுக் கொடுப்பார். மல்லுக் கொடுத்து மாளாமல் பொறுமலுக்கு ஆளாவார். ''தாயே, எல்லாம் ஆறி விரைத்துப் போகிறதே, சட்டென்று வந்து இதை உண்டு அருள் புரியேன்'' என்று தீனமாகக் கதறுவார்; கமறுவார்; இதயம் கழன்று போய்க் கண்ணீரில் வெடிப்பார்.

ஆம், உண்மையிலேயே அவரது இதயத்தில் நூறு நூறு பீரங்கிகள் வெடிப்பது போலத்தான் இருக்கும். அந்தத் தாபத்தில் தகித்த கண்ணீர்த் துளிகள் அக்கினித் திராவகமாக அவர் கன்னங்களில் புரண்டு விழுந்து எரிக்கும்.

ஒருவாறு பூஜையெல்லாம் முடிந்த பின் கானம் செய்யத் தொடங்குவார். மந்தமாருதமாக அவரது உள்ளத்தைக் கோதி, வருடி, நீவிக் கொடுக்கும் பட்டிமையாகத் தொடங்கும் பாட்டு நேரமாக ஆகச் சண்டமாருதமாகும். ஊழிக் காலத்தில் வெள்ளம் பெருகுவது போல் இசையானது நுங்கும் நுரையுமாகச் சுழியிட்டுக் கொண்டு அந்தச் சுழிப்பில் பாடுபவரையே சொருகிக் கொண்டு போகும். மாலே ஆரத்திக்குப் போதாகும் வரையில் ரணமுண்ட குரலில் பாடிக் கசிந்து கொண்டே யிருப்பார் கதாதரர். ஆரத்திப் பொழுது வந்து விட்டது என்பதை அவருக்கு உணர்த்துவதற்குள் கோயில் சேவகர்களுக்குப் போதும் போதும் என்ருகிவிடும். இரவு வழிபாடான பின்னும் அவருக்கு அமைதி கிடையாது. கடுகாட்டருகே அமர்ந்து, கடுகாட்டுக்கே ருத்ர பூமி என்று பெயரளித்த பசுபதியின் சதியாகிய பரமேசுவரியை நினைந்து, பசித்த குழந்தை தாயை எண்ணி எப்படி வறண்ட தொண்டையுடன் கதறுமோ, அப்படிப் பசித்த உள்ளம் வெடிப்பு வெடிப்பாகப் பிளந்து கொள்ளப் பவானிக்காகக் கூவுவார்.

அன்ன ஆகாரமின்றி இளேத்த உடலும், அழுதழுது சிவந்த கண்களுமாகத் தவிக்கும் பட்டாசாரியரின் போக்கு யாருக்குமே புரியவில்லே.

அவருக்குமே புரிய வில்லே.

''தேவி, நான் இவ்வாறு மனசு வெந்து மடிந்தும் நீ தரிசனம் தராதது எதனுல் என்று எனக்குப் புரியவேயில்லே. இப்படியே அவதிப் பட்டுக் கொண்டிருக்க என்னுல் முடியாது'' என்று ஒரு நாள் இரவு தேவியின் சந்நிதியில் மொழிந்த கதாதரரின் கண்கள் அருகிலிருந்த ஏதோ ஒன்றின் மீது பட்டதும் நிலேத்து நின்றன. உடனே அந்தச் சிவந்த கண்களில் ஒரு நிம்மதியும், திருப்தியும், அமைதியும் நிறைந்தன.

கத்தி! கோர காளியின் சந்நிதியில் தொங்குகிற கத்தி!

'காளி என் துயரைத் தீர்க்கவில்லேயென்ருல் இந்தக் கத்தி தீர்க்கட்டும்.'

''பவதாரிணி! உன்னேக் காணுமல் என்னுல் உயிர் வாழ முடியாது. இதோ என் உயிரை உன் காலடியிலேயே விடுகிறேன். உனக்கு நான் அளித்த மற்ற நிவேதனங்களே நீ ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் இந்த நிவேதனத்தையாவது நீ ஏற்றுக் கொள்'' என்று ஆத்மாவின் அந்தரங்கத்திலிருந்து குழைந்து பேசிய கதாதரர் வெறி பிடித்தாற் போலக் கத்தியை உருவ ஓடினுர்.

அதிசயம் நிகழ்ந்து விட்டது!

ஓடிய பாதம் ஸ்தம்பித்தது.

இத்துணேக் காலம் தத்தளித்த இதயமும் ஸ்தம்பித்தது.

அதென்ன? ஆலயத்தில் மின்சார வெள்ளம் பாய்கிறதா?

இல்லே, இது உடலேயும் உள்ளத்தையும் மரத்துப் போகச் செய்யும் மின்சாரம் இல்லே.

உடலேயும் உள்ளத்தையும் மலர்த்தும் இன்சாரம் அது!

ஆம், அதிசயம் நிகழ்ந்தே விட்டது!

இனிமையின் சாரமாகிய அம்பிகை அவர் முன் நின்ருள்! (தொடரும்)


என்னா, துரையவர்களே, இந்த வண்டிக்குள் திடு திடுப்பென யாரோ சத்தம் வருகிறதே!
இது பேபி டாக்ஸி யாச்சே. அப்படித்தான் வரும்ங்க!


உன் வேலை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. இல்லேன்னா சம்பள உயர்வு கொடுக்காமல் உனக்கு மட்டும் கொடுத்தால் நீ மனச் சங்கடப்படுவாயே என்று நான் பார்க்கிறேன்...
பரவாயில்லை! இந்தத் தடவை கொடுங்கள். சங்கடத்தை நான் ஒரு மாதிரியாகச் சகிச்சுக்கிறேன்!


ஒருவரிடம் இந்தப் பழைய காரை வாங்கி விட்டேன். அதைத் தள்ளுவது கஷ்டமாக இருக்கிறதென்று அவரிடம் சொன்னேன். மனுஷன் ரொம்பப் புத்திசாலி! உடனே இப்படி ஒரு ஏற்பாடு செய்து தந்து விட்டார்!
சாமா


சார், ஒரு ரெட்டணைக் காசு இருந்தால் கொடுங்க. என் மனைவி ஆஸ்பத்திரியில் இருக்கிறாள்.


சரி, இந்தா ரெட்டணை! எதுக்குக் கொடுக்கிறேன் தெரியுமா? இனிமேல் இது மாதிரிப் பொய் சொல்லாமலிருக்கத்தான்.


சார், என் மனைவி ஆஸ்பத்திரியிலிருக்கிறாள். பணம் கொடுங்களேன், பேசாமப் போறீங்களே?


அந்த மந்திரி நான் பொய் சொல்லக் கூடாது என்பதற்காக ரெட்டணை கொடுத்தார். அவரைப் போல நீங்களும் நடந்து கொள்ளக் கூடாதா?



# கண்ணகி

சுமார் இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வெளியாகிப் பிரமாதமாக ஓடி வெற்றி விழாக் கொண்டாடிய படம் ஜுபிடரின் ''கண்ணகி''.

ஒரு படத்தில் சின்னப்பா நடிக்கிறார் என்றால் அது நீளமான படமாகத்தான் இருக்கு மென்று நிர்மாணித்துக்கொள்ளலாம். வருத் விஷயத்திலோ கேட்கவே வேண்டாம். அவர் நடித்த படத்தில் பார்க்க வேண்டிய குத்துச் சண்டைகளையும், மல் யுத்தப் பிடிகளையும் தியேட்டர் வாசலில் டிக்கெட் விற்கும் இடங்களிலேயே பார்த்து மகிழலாம். உற்சாகமாகக் குதித்து, அட்டகாசமாகச் சிரித்து, அழுத்தமாகத் தமிழ் வசனங்களைப் பேசி, அற்புதமாகப் பாடி நடித்தவர் பி. யு. சின்னப்பா.

திரைப் படத்தில்தான் இப்படி அட்டகாசம்செய்வார் என்பதில்லையாம்; யாராவது அவரிடம் தவறாக நடந்து கொண்டால் ஒரே ரகளை தானும். ஸ்டுடியோவைச் சுற்றி அவரைத் துரத்திக் கொண்டு ஓடுவாராம். முன்கூட்டியே டைரக்டர் அவர்களிடம் மட்டும், ''ஸார்! நான் இன்னிக்கு கலாட்டாப் பண்ணப்போகிறேன். நீங்க இதிலே ஒன்றும் சம்பந்தப்பட்டுக் கொடாதீங்க!''- என்று கூறி விடுவாராம். ''மனுஷன் தோளைச் கண்டினல் 'இன் இன்' என்று வெண்கல ஓசை எழும்'' என்றார் ஸ்ரீ ஆர். எஸ். மணி.

''சோகக் கட்டங்களில் சின்னப்பாவை நடிக்க வைப்பது ரொம்பக் கஷ்டம் என் பார்களே?'' என்றேன்.

''அதைச் சின்னப்பாவே ஒப்புக் கொள்வார்'' என்றார் மணி. ''அதற்கு ஒரு நல்ல ஏற்பாடு செய்திருந்தேன். 'உங்களை நன்றாக நடிக்க வைக்கிறேன். ஆனால் அதற்காக நான் என்ன செய்தாலும் நீங்கள் கோபிக்கக் கூடாது; வருத்தப்படணும்!' என்று நிபந்தனை விதித்து விட்டு, சின்னப்பா சற்றும் எதிர் பாராத சமயத்தில் அவர் காலில் ஊசியினால் நன்றாகக் குத்தி விடுவேன்! சோக நடிப்பு தத்ரூபமாக அமைந்து விடும். எல்லாம் ஊசியின் வேலை. ஆனால் நான் இப்படியெல்லாம் சொல்லுவதை வைத்துக் கொண்டு சின்னப்பா மிகவும் மோசமான மனிதர் என்று நினைத்துவிடப் போகிறீர்கள். தம்மிடம் தவறாக நடந்து கொள்ளுபவர்களிடத்தில் தான் கலாட்டா செய்வாரே தவிர, மற்றப்படி டைரக்டராகிய என்னிடமும் சரி சகநடிக நடிகையர்களிடமும் சரி, மிகவும் அன்பாகவும் இங்கிதமாகவும் பழகுவார். 'செட்'டில் நுழையும் போதே கண்ணியமாக வருவார். அவருடைய பாட்டுக்கும், நடிப்புக்கும் தனி மதிப்பு இருந்தது. ''கண்ணகி'' படத்தின் வெற்றிக்கு, பி. யு. சின்னப்பாவைத்தான் முக்கிய காரணமாகக் கூற வேண்டும்.

''அறிக்கு ஆக்கம் அளித்த இந்நாடு பற்றி எரியட்டும்! எரிந்து அழியட்டும்! அழிந்து ஒழியட்டும்!''

இளங்கோவடிகளின் கண்ணகி கூறிய மொழிகளால் அன்று மதுரையம்பதி பற்றி எரிந்தது போலவே இளங்கோவன் எழுதிய மேற்சொன்ன வசனத்தைக் கண்ணாம்பா திரைப்படத்தில் உணர்ச்சியுடன் பேச மீண்டும் ஒரு முறை மதுரை எரிய ஆரம்பித்து விட்டது! நல்ல வேளையாகத் தீ நெடுந் தூரம் பரவு முன்னர் தீயணைக்கும் படையினர் ஸ்தலத்துக்கு விரைந்து வந்து சேர்ந்து மதுரை மாநகரைக் காப்பாற்றினார்கள்!

இது ஏதோ வேடிக்கையாகச் சொல்கிற வார்த்தைகள் அல்ல! நிஜமாகவே நடந்தது தான், நம்புங்கள். மதுரையில் கண்ணகி படம் ஓடிய சமயத்தில் மக்களிடையே ஏதோ மனப் புகைச்சல் இருந்து கொண்டிருந்த காரணத்தால் கண்ணாம்பா பேசிய வீர வாசகம் விபரீத விளைவுகளை உண்டாக்கியது!

''ஒரு முழுப் பக்கத்துக்கு ஒரு வரிதான் எழுதுவார் இளங்கோ; ஆனால் அந்த ஒரு வரியில் எத்தனை வேகம்! எத்தனை துடிப்பு!'' என்று கண்ணகியை டைரக்ட் செய்த ஆர். எஸ். மணி அவர்கள் கூறியதை மேலே குறிப்பிட்ட சம்பவம் மெய்ப்பித்து விட்டது. அதே நிகழ்ச்சி கண்ணாம்பாவின் நடிப்புத் திறனையும், டைரக்ஷனின் சிறப்பையும், எல்லாவற்றுக்கும் மேலாகச் சிலப்பதிகாரக் காப்பியத்தின் உயர்வையும் எடுத்துக்காட்டுவதாய் அமைந்தது.

மறக்க முடியாத திரைப்படங்கள்



பாவம், அவர் இன்னும் இருந்து பல நல்ல படங்களில் நடித்திருக்க வேண்டும். அதற்கு இல்லாமற் போய் விட்டது...'' என்று நெகிழ்ந்த குரலில் கூறி டைரக்டர் மணி சற்று நிறுத்தினார்.

நான் பிரமித்து அமர்ந்திருக்கையில் ஆர். எஸ். மணி தொடர்ந்தார்: 'கண்ணகி' தான் நான் டைரக்ட் செய்த முதல் படம். எனக்கு அந்த வாய்ப்புக் கிட்டிய விதமே மிகவும் சுவாரஸ்யமானது. எம். கே. தியாகராஜ பாகவதர் தயாரித்து நடித்த ''திருநீலகண்டர்'' தான் என்னை சினிமா டைரக்டராக்கியது.''

''நீங்களா ''திருநீலகண்டரை'' டைரக்ட் செய்தீர்கள்?'' என்று மிகுந்த வியப்போடு கேட்டேன்.

''இல்லை, இல்லை. அந்தப் படம் தயாரித்து முடித்ததும் கணக்குப் பார்த்ததில் படத்தின் நீளம் முப்பத்தாறாயிரம் அடி என்று தெரிய வந்தது. படத்தை 'எடிட்' பண்ணும் பொறுப்பு என்னிடமும், இன்னொரு கோஷ்டியிடமும் ஒப்புவிக்கப்பட்டது. யார் சிறப்பாகச் செய்கிறார்களோ பார்க்கலாம் என்ற எண்ணம் பாகவதருக்கு. மிகவும் சிரமப்பட்டுத் 'திருநீலகண்ட'ரைச் சரிபாதியாகக் குறைத்துப் பதினெட்டாயிரத்துக்குக் கொண்டு வந்தேன். படம் மிகவும் விறுவிறுப்பாக நன்றாக இருந்தது. அதைப் பார்த்த பிறகுதான் ஜூபிடர் சோமு அவர்கள் என்னிடம் ''கண்ணகி''யை டைரக்ட் செய்யும் பொறுப்பு முழுவதையும் ஒப்புவித்தார்.

''யூ. ஆர். ஜீவரத்தினம் கவுந்தியடிகளாக வந்து மிக அழகாகப் பாடி, அருமையாக நடிக்க, என். எஸ். கிருஷ்ணன், மதுரம் ஹாஸ்ய விருந்தை அள்ளி வழங்கச் சிறப்பாகத் தயாரான இப்படத்தின் 'ஷூட்டிங்' நடந்துகொண்டிருந்த காலத்தில் ஊரெங்கும் விளக்கணைப்புச் செய்யப்பட்டிருந்தது. மாலை ஆறு மணிக்கு மேல் ஊரடங்குச் சட்டம் அமுலில் இருந்தது. அதனால் பகலிலேயே படப் பிடிப்பை முடித்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஒரு புறம். படப்பிடிப்பைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு நடிக, நடிகையர்களைக் காஞ்சீபுரத்துக்கும் செங்கற்பட்டுக்கும் கொண்டு சேர்க்க வேண்டிய பொறுப்பு இன்னொரு புறம். யுத்த நெருக்கடியின் காரணமாக நடிக, நடிகையர்கள் சென்னை நகரத்தை விட்டு, வெளியேறி, சுற்றுப்புற ஊர்களில் குடியேறி விட்டனர். சென்னை நகரமே சூனியமாய்க் கிடந்த காலம். மாலை ஆறு மணிக்கு மேல் எந்த மோட்டார் காரும் நகர எல்லையைத் தாண்டிப் போக முடியாது. இந்தச் சிரமங்களெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும் என்று பார்த்தால், இன்னொரு பெரிய சிரமம் இருந்தது. அதுதான் இளங்கோவனிடமிருந்து திரைக் கதைக்கான வசனங்களை எல்லாம் எழுதி வாங்குவது!

''எப்படியோ ஒருவாறு இடையூறுகளையெல்லாம் தாண்டிப் படத்தை முடித்துவிட்டோம்! கண்ணாம்பாவின் திறமையைப் பற்றிக் குறிப்பிட மறந்து விட்டேனே. ஆந்திர நாட்டைச் சேர்ந்தவராயினும் தமிழைத் தெளிவாக உணர்ச்சியோடு உச்சரித்து, நன்றாக நடித்துப் படத்துக்குப் பெருமை தேடித் தந்ததோடு தமக்கும் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டார்'' என்றார் ஸ்ரீ ஆர். எஸ். மணி.

''படம் ஓடிய ஊர்களுக்கெல்லாம் சென்று நான் யார் என்று காட்டிக் கொள்ளாமல் சாதாரண மக்களோடு டிக்கட் வாங்கிக் கொண்டு பார்த்து வந்தேன். மதுரையில் படம் முடிந்து ஜனங்கள் தியேட்டரை விட்டு வெளியே வருகிற வேளையில் அந்தச் சாலைக்குள்ளேயே நுழைய முடியாது! அவ்வளவு கூட்டம்!'' என்று பெருமிதத்துடன் கூறினார்.

அவரிடம் விடை பெறுகையில், ''நல்ல கருத்துள்ள படமாக, மக்களுக்கும் சமூகத்துக்கும் ஏதாவது ஒரு விதத்தில் விழிப்பை ஊட்டும் படமாகத் தயாரிக்க வேண்டும் என்பதுதான் என் குறிக்கோள்'' என்று கூறி முத்தாய்ப்பு வைத்தார்.

'இவரைப் போலவே ஒவ்வொரு டைரக்டரும், தயாரிப்பாளரும் விரும்பக் கூடாதா?' என்று எண்ணியபடியே வணக்கம் கூறிக் கொண்டு கிளம்பினேன்.

— விஜயம்





# குறைவற்ற செல்வம்

ரா.வீ.

'ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்' என்று யாரேனும் சொன்னால், நமது நாட்டு வைத்தியர்களில் சிலர் கோபப்பட மாட்டார்கள்; நமது அறியாமையைக் கண்டு நகைப்பார்கள்.

''அட பைத்தியமே! ஓரிருவர் இறந்துவிட்டாலுமே இந்த வைத்தியருக்குக் கைராசி இல்லை என்று நிர்மாணித்துவிட மாட்டார்களா? அப்புறம் அவர் தொழில் எப்படி நடக்கும்? நம் நாட்டில் மூலிகைகள் ஏராளம். அவற்றில் ஆயிரத்தைக் கற்று அவற்றின் உபயோகத்தையும் ஒருவன் நன்கு உணர்ந்திருந்தானானால் அவனை அரை வைத்தியன் என்று சொல்லலாம். அவன் முழுசாகத் தேர்ந்தவன் என்று சொல்லிவிட முடியாது. 'ஆயிரம் வேரைக் கற்றவன் அரை வைத்தியன்' என்னும் பழமொழியைத்தான் இப்படித் திரித்துவிட்டிருக்கவேண்டும்!'' என்பார்கள்.

இதைக் கேட்டுக் கொண்டு நாம் சும்மா இருப்போமா? இன்னுமொரு கதையைக் கூறுவோம்.

''ஒரே ஒரு ஊரில் ஒரு டாக்டர் இருந்தார். அந்த ஊரில் திடீரென்று நிமோனியா ஜுரம் படையெடுத்தது. வைத்தியப் புத்தகத்தைப் புரட்டி வைத்தியம் செய்தார். பதினான்கு பேர் அவுட். பதினைந்தாவதாக ஓர் ஆள் வந்தார். 'டாக்டர் சார்! என் நோய் குணமாகுமா?' என்று கேட்டார்.

''கட்டாயம் குணமாகும். நான் செய்யும் சிகிச்சை முறைப்படி பதினைந்தில் ஒரு கேஸ் கட்டாயம் பிழைத்துக்கொள்ளும். இதுவரை பதினான்கு தீர்ந்துவிட்டது. நீ பதினைந்தாவது ஆள். கட்டாயம் பிழைத்துக்கொண்டுதானே ஆக வேண்டும்?'' என்றார். தமது கூற்றுக்கு ஆதாரமாகத் தாம் படித்த புத்தகத்தையும் எடுத்துப் போட்டு ஆதாரம் காட்டினார்.

இப்படி டாக்டர்களைக் கேலி செய்கிற மாதிரியான ஹாஸ்யத் துணுக்குகள் எத்தனையோ வழக்கில் இருந்து வருகின்றன. 'ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்தது. ஆனால் நோயாளி இறந்துவிட்டான்' என்ற திவ்யமான வாக்கும் உலவி வருகிறது.

இவையெல்லாம் ஒரு காலத்தில் பொருத்தமானவையாகக் கூட இருந்திருக்கலாம். ஆனால் நடைபெறுகிற 1963ம் வருஷத்தில் விஞ்ஞானம் ராக்கெட் வேகத்திலே முன்னேறுகிற காலத்தில் டாக்டர்களைப் பற்றி இவ்வாறு வேடிக்கையாகக் கூட நினைக்க இடமில்லை.

சஸ்திர சிகிச்சை என்றதுமே நமது தலையெழுத்தை எண்ணி மனம் வருந்துகிற நாட்கள் மாறி சஸ்திர சிகிச்சை செய்ய டாக்டர் ஒப்புக்கொண்டார் என்றதுமே நமது நல்லதிர்ஷ்டத்தை எண்ணி மகிழ வேண்டிய காலத்தில் இருக்கிறோம் நாம். மருத்துவத் துறையில் அத்தகைய வியக்கத் தக்க முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இரண்டாவது உலக யுத்தத்தின் இறுதியில் டாக்டர்களே கனவில்கூட நினைத்துப் பார்த்திருக்க முடியாத சிக்கலான சஸ்திர சிகிச்சைகளை இன்று செய்கிறார்கள். இதோ சில உதாரணங்கள்: ருமாடிக் ஜுரத்தினால் இருதயம் பழுதடைந்து போகும் சிலருக்கு. அவ்வாறு துயருற்றிருப்பவர்களுக்கு இருதய ஆபரேஷன் செய்கிறார்கள். நாற்பத்திரண்டு டிகிரி பாரன்ஹீட்டுக்கு நோயாளியின் உடலைக் குளிர்விக்கிறார்கள். சுமார் ஒரு மணி நேரத்துக்கு நோயாளியின் இதயத் துடிப்பை நிறுத்தி வைக்கிறார்கள். அச்சமயத்தில் 'இருதயம் — நுரையீரல் இயந்திரத்'தின் உதவியுடன் நோயாளி சுவாசிக்கிறான்; ரத்த ஓட்டமும் தடைப்படுவதில்லை!





'ஒரு நோயாளியின் மூத்திரக்காய்கள் (Kidneys) இரண்டும் வீணாகி விடுகின்றன. 'இன்னும் எட்டு வாரங்கள் அவன் வாழலாம், அவ்வளவுதான்' என்று டாக்டர்கள் அனுமானிக்கிறார்கள். அச்சமயத்தில் நல்ல மனம் படைத்த ஒருவன் அவர்களிடம் வருகிறான். "நோயாளியைக் காப்பாற்றுங்கள். என் 'கிட்னி'கள் இரண்டில் ஒன்றை அவனுக்குத் தானம் செய்கிறேன்" என்கிறான்.

உடனே இரண்டு ஆபரேஷன்கள் பக்கத்துப் பக்கத்து அறைகளில் ஒரே சமயத்தில் நடைபெறுகின்றன. தானமளிப்பவரிடமிருந்து ஒரு 'கிட்னி' அகற்றப்படுகிற அதே நேரத்தில் நோயாளியின் பழுதுபட்ட 'கிட்னி'கள் இரண்டினுள் ஒன்றும் வெட்டி எடுக்கப்படுகிறது. நன்கொடையாகத் தரப்பட்ட 'கிட்னி'யை அதே இடத்தில் வைக்காமல் வயிற்றின் அடிப் பாகத்தில் மூத்திரப் பைக்கு அருகில் வைத்து ரத்த நாளங்களையும் இதர இணைப்புக் குழாய்களையும் தைத்துச் சரிப்படுத்துகிறார்கள். பல வாரங்கள் கழித்து நோயாளிக்கு மீண்டும் ஓர் ஆபரேஷன் நடைபெறும். அப்போது பழுதுபட்டிருக்கும் மற்றொரு 'கிட்னி'யையும் களைந்து விடுவார்கள். ஆக, தானம் கொடுத்தவனும் நன்கொடை பெற்றவனும் நன்கு இயங்கும் ஒரு 'கிட்னி'யுடன் இனி காலத்தை ஓட்டுவார்கள்.

பார்கின்ஸன் நோய் எனப்படும் வியாதியால் பீடிக்கப்பட்டவர்களின் கை கால்கள் சதா நடுங்கிக் கொண்டேயிருக்கும். இந்தச் சங்கடமான நிலையிலிருந்து விடுதலை அளிக்க டாக்டர்கள் மூளையில் ஆபரேஷன் செய்கிறார்கள். மண்டை ஓட்டிலே ஓர் ஓட்டை செய்துவிட்டு, மூளையினூடே 0.08 அங்குலம் குறுக்களவே உள்ள ஓர் மெல்லிய குழலைச் செலுத்துகிறார்கள். தலாமஸ் என்னும் மூளைப் பகுதியில் நோயாளிக்குத் தொந்தரவு தரும் குறிப்பிட்ட இடத்தினைச் சென்றடைகிறது அந்த ஊசி போன்ற குழல். நைட்ரஜன் வாயுவைக் குளிர்வித்துத் திரவமாக்கி அந்தக் குழல் வழியே செலுத்துகிறார்கள். இதன் காரணமாய் மூளையில் பழுதுபட்டிருக்கும் அந்தச் சிறு துண்டுப் பகுதி மட்டும் அழிகிறது. நாளடைவில் நோயாளி பூரணகுணமடைந்து மற்ற எல்லோரையும் போல் சாதாரணமாக நடக்கிறான்.

இப்படி வைத்தியத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களைப் பற்றிக் கதை கதையாக எவ்வளவோ கூறிக் கொண்டே போகலாம். உடலின் நோயுற்ற பகுதி எதுவானாலும் சரி, அஞ்சாமல் தயங்காமல் சஸ்திர சிகிச்சை செய்யத் தயாராய் உள்ளார்கள். ஆனால் மேல் நாடுகளில் இருப்பது போல் நம் நாட்டில் இத்தகைய நிபுணர்கள் நிறைய இல்லை என்பது உண்மை. நரம்புச் சிகிச்சைக்கு ஒரு ராமமூர்த்தியும், இருதயச் சிகிச்சைக்கு ஒரு ரத்தினவேலு சுப்பிரமணியமும், இப்படி வகைக்கு ஒருவர் அல்லது இருவர் வீதம்தான் நம் நினைவுக்கு வருகின்றனர்.

நமது தேசத்தைப் பொறுத்த மட்டில் இன்னும் முன்னேற்றத்துக்கு எவ்வளவோ இடம் இருக்கிறது. எத்தனையோ நிபுணர்களுக்கு இங்கே வேலையும் இருக்கிறது. அவர்கள் தோன்றுவார்கள். நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செல்வத்தை மக்களுக்கு அளிக்கவும் செய்வார்கள். வெளிநாட்டு அறிஞர்களிடம் பயிற்சி பெற்று நமது இளம் டாக்டர்கள் அரிய சாதனைகளைச் செய்யத்தான் போகிறார்கள். அதற்கான சூழ்நிலை நல்ல முறையிலே இன்று உருவாகி வருகிறது.

'உலகம் அனைத்தும் ஒரு குடும்பம்' என்னும் பொருள் பட 'வசுதைவ குடும்பகம்' என்றார்கள் நம் முன்னோர்கள். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்றார் நந்தமிழ் நாட்டுக் கவிஞர். வெண்டல் வில்கி என்னும் அமெரிக்கப் பிரமுகரும் 'ஒரே உலகம்' என்று எழுதினர்.

இந்தக் கொள்கையைப் பின்பற்றி அமெரிக்கா உலகத்தின் முன்னேற்றத்துக்குப் பல

வகைகளில் உதவ முன் வந்துள்ளது. சிறப்பாக நமது பாரத நாட்டை எல்லா வகைகளிலும் செழிக்கச் செய்ய முயன்று வருகிறது. விஞ்ஞானம் முன்னேறி வரும் இந்த நாளிலே விஞ்ஞான ரீதியாக நமது நாட்டுக்குச் சுகாதார விஷயத்திலும் உதவ விரும்பி, அந்தத் துறையிலே வல்லுநர்களை நமக்குத் தந்து பயிற்சி அளிக்கும் பணியை ஏற்றிருக்கிறது.

திருவனந்தபுரம் ஆஸ்பத்திரியில் அக்கர் என்னும் அமெரிக்க மாது, வைத்திய ரிக்கார்டுகளை எப்படி வைத்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிச் சிறந்த யோசனைகளைக் கூறி, நம் நாட்டுப் பொருளாதாரத்துக்கேற்பச் சிக்கனமாகக் கடைப்பிடிக்க உதவி வருகிறார்.

இதனால் மருத்துவக் கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்கும் நோய் பற்றி ஆராய்ச்சி செய்பவர்களுக்கும் பெரிதும் பயன் உண்டு. அதோடு, சிகிச்சை பெற்ற நோயாளிகளே, மீண்டும் ஏதாவது நோய்ப்பட்டு வந்தால் அடியிலிருந்து அவர்களைப் பரிசோதித்துப் பார்த்துக் காலத்தை வீணாக்கி, அவர்களது நோயை முற்ற விட்டு, அப்புறம் சிகிச்சையைத் தொடங்குவதிலிருந்தும் தப்பலாம். முன்பு அளிக்கப்பட்ட சிகிச்சை முறை, ஏற்பட்ட பலன் ஆகியவற்றைக் கண்டு விரைவில் குணப்படுத்த முயலலாம். ஆனால் வைத்திய ரிக்கார்டுகள் மீது, வேறு சில அரசாங்க அலுவலகங்களில் உள்ள பைல்களைப் போலத் தூசியும் துப்பட்டையும் சேர விட்டு, அதையே நோய்க்கு இருப்பிடமாக்காமல், கவனித்துக் கொள்ளவும் வேண்டுமல்லவா?

திருவனந்தபுரம் மருத்துவக் கல்லூரிக்கு ஹாவர்டு கல்லூரியின் மருத்துவப் பகுதிப் பேராசிரியர் டாக்டர் யங் என்பவரின் அநுபவ பூர்வமான பணி கிடைத்துள்ளது.

டாக்டர் யங் என்னும் பெயர் கொண்ட இம் முதியவர் செவி பற்றிய ஆராய்ச்சியில் பேரறிஞர். 'எண் சாண் உடம்புக்குச் சிரசே பிரதானம். அதிலும் கண்ணே பிரதானம்' என்பார்கள். ஆனால் டாக்டர் யங், செவிதான் பிரதானம் என்று கண்டுபிடித்து வைத்திருக்கிறார். பின் தூங்கி முன்னெழும் பத்தினி நல்லாளின் இனத்தைச் சேர்ந்தது இந்தக் காது. மனிதன் தூங்கத் தொடங்கினால் முதலில் கண் மூடிவிடும். ஆனால் காது அவ்வளவு சீக்கிரமாக உறங்காது. குழந்தைகள் தாலாட்டைக் கேட்ட வண்ணமே உறங்குவதிலிருந்து இது விளங்கவில்லையா?

தூக்கம் கலைந்து எழுந்திருக்கும்பொழுதும் இந்தக் காதுதான் முன் எழுகிறது. ஒலி கேட்டு விழிக்கிறது. அப்புறம் கண் திறக்கிறது. அருவமான ஆண்டவனைக் காணும் வாய்ப்புக் கண்ணுக்குக் கிடைப்பதில்லை. ஓங்கார ரூபியான அவனது நாதத்தை உள்ளுக்குள்ளே பருகும் திறன் இந்தக் காதுக்கு இருக்கிறது.

இதையெல்லாம் சொல்லாமல் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் பேராசிரியர் 'யங்' அவர்களுக்கு இருக்கிறது. அவரது அநுபவத்தையும் அறிவையும் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு திருவனந்தபுரம் மருத்துவக் கல்லூரிக்குக் கிடைத்திருக்கிறது.

அமெரிக்காவின் உதவி கொண்டு ஹைதராபாத்தில் நடைபெறும் நர்ஸ் பயிற்சிப் பள்ளி நாட்டுக்கு ஓர் எடுத்துக் காட்டாக நடைபெற்று வருகிறது. இவர்கள் நோயாளிகளுக்குப் பணி புரிவதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் அவர்களது வீடுகளுக்குச் சென்று ஆறுதல் அளித்துச் சுகாதாரத்தைப் போதிக்கும் பொறுப்பையும் ஏற்று நடத்துகிறார்கள்.

தாயினும் சாலப் பரிந்து சின்னஞ் சிறு குழந்தைகளுக்கு இவர்கள் புரியும் பணி, அவர்களுடன் கலந்து விளையாடி அவர்களை மகிழ வைத்து வளர்க்கும் ஆற்றல் - ஆகியவை சொல்லத் தரமன்று.

ஹைதராபாத் ஆஸ்பத்திரியில் நாளொன்றுக்கு மூவாயிரம் ஊசிகளுக்கு மேல் நோயாளிகளுக்குப் போடப்படுகிறது. இத்தனை நோயாளிகளைச் சமாளிப்பது எளிதான காரியமா? ஒவ்வொரு தடவையும் ஊசியைக் காய்ச்சிச் சுத்தப்படுத்தித்தான் நோயாளிகளுக்குப் போடுவார்களா? போட்ட ஊசியையே திரும்பத் திரும்பப் போட்டுவிடுவார்களா என்ற கவலை உண்டாவது இயல்பு. போட்ட ஊசியையே போட்டால், ஒருவருக்கு இருக்கும் நோய் இன்னொருவருக்கு ஒட்டிக் கொள்ளலாமே!

அந்த ஆஸ்பத்திரியில் உள்ள ஊசிகளைச் சுத்தப்படுத்தும் (Sterilization) அறைக்கு அனுமதி பெற்றுச் சென்றால் இந்தக் கவலை தீர்ந்துவிடும். மருந்து பாய்ச்சும் குழலிலிருந்து ஊசி முதலிய யாவும் நவீன சாதனங்களின் உதவி கொண்டு சுத்தப்படுத்தப்பட்ட பின்பே உபயோகிக்கப்படுகின்றன என்பதைக் காண்போம். அடிபட்டுக் கட்டுப் போட்டுக் கொள்ள வருகிறவர்கள், சிறு ஆப்பரேஷன் செய்யப்பட வேண்டியவர்கள் ஆகியவர்களுக்கான கருவிகளையும் சுத்தப்படுத்திப் பெட்டி பெட்டியாக வைத்திருக்கிறார்கள். 'பஞ்சு முதற்கொண்டு தேவையான பொருள்கள் யாவும் அதற்குள்ளேயே இருக்கின்றன. குறிப்பிட்ட டாக்டர் குறிப்பிட்ட நோயாளிக்கு ஏதும் தவறு நேராத வண்ணம் சிகிச்சை அளித்தாரா என்பதை அந்தப் பெட்டியில் உள்ள பொருள்களே கூறும் ஆற்றல் பெற்றிருக்கின்றன. அதாவது குறிப்பிட்ட சிகிச்சை முறைக்குக் குறிப்பிட்ட பொருள்களை உபயோகிக்க வேண்டும் என்று வைத்திருக்கிறார்கள் அப்பெட்டியில். அதில் ஒரு பொருளை உபயோகிக்கவில்லையென்றாலும் டாக்டர் தவறி விட்டார் என்று தெரிந்து விடுகிறது. டாக்டர் தம் கையைத் துடைத்துக் கொள்வதற்கான கைக்குட்டை வரை சுத்திகரிக்கப்பட்டு அதற்குள்ளேயே வைக்கப்பட்டிருப்பதுதான் காரணம்.

நோய் வராமல் தடுக்கவும், அப்படி வந்துவிட்டால் நவீன விஞ்ஞான ரீதியில் குணப்படுத்தவும் இந்திய நாட்டுக்கு அமெரிக்க நாட்டின் உதவி கிட்டியிருப்பது பாராட்டத்தக்கதுதான்! இந்தத் தொடர்பு மேலும் மேலும் வளர்ந்தே ஆக வேண்டும். ஏனெனில் விண்வெளிப் பயணம் போன்ற எத்தனையோ விதங்களில் விஞ்ஞான அற்புதங்கள் நிகழ்ந்தாலும், அவையெல்லாம் ஒரு மனித உயிரை விஞ்ஞான ரீதியாகக் காப்பாற்றுகிற அன்புப் பணிக்கு ஈடாகாது.

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




**பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்**
**17 சென்டுகளின் அற்புதமான கலவை!**

PT·G·&·TAM·

# எதிரொலி

"லலிதா! லலிதா!" — உள்ளிருந்து அம்மா கூப்பிடும் குரல் லலிதாவின் செவிகளில் நாராசம்போல் பாய்ந்தது. இந்த அம்மாவே எப்போதும் இப்படித்தான்! தொண தொணவென்று கூப்பிட்டுக் கொண்டேயிருப்பாள். சேர்ந்தாற் போல் நாலு பக்கம் படிக்கவிட்டால்தானே! உள்ளே அப்படி என்னதான் காரியம் இருக்குமோ, தெரியவில்லை. எப்போது பார்த்தாலும் "லலிதா, லலிதா!" கூப்பிட்டும்! ஆயிரம் தடவை கூப்பிட்டாலும் சரி, இன்னும் அரைமணி நேரத்துக்கு இங்கிருந்து அவள் நகரப் போவதில்லை.

எவ்வளவு ஆசை ஆசையாக அவள் சிநேகிதி பத்மாவிடம் கெஞ்சாத வண்ணம் கெஞ்சி அந்தப் புத்தகத்தை வாங்கி வந்திருக்கிறாள்! அம்மா நடுவில் கூப்பிட்டுத் தொந்தரவு கொடுக்கப் போகிறாளே என்று தான் புத்தகத்தை வாங்கி வந்த கையோடு அதைப் படிக்க உட்கார்ந்து விடவில்லை அவள். மனம் லயித்து ஒவ்வொரு வரியையும் சுவைத்துப் படிக்க வேண்டிய புத்தகமல்லவா அது! உடனேயே படித்து விடவேண்டுமென்று அவள் மனம் எவ்வளவு அடித்தது! ஆனால் அவ்வளவு துடிப்பையும் அடக்கிக் கொண்டு புத்தகத்தைத் தன் பெட்டியில் பத்திரமாக வைத்துப் பூட்டி விட்டு உள்ளே சென்றாளே, எதற்காக? அம்மாவுக்குத் தேவையான ஒவ்வொரு வேலையையும் கவனித்துக் கவனித்துச் செய்தாளே, எதற்காக?

அம்மாகூடக் கேட்கவில்லையா? "ஏதடி லலிதா! இன்று மழைதான் கொட்டப் போகிறது! நான் வாயசைக்காமலே ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துச் செய்கிறாயே! இவ்வளவு கரிசனம், திடீரென்று உனக்கு எப்படி வந்தது?"

அவ்வளவு கரிசனமும் எதற்காக என்று சொல்லிவிட முடியுமா அம்மாவிடம்? கபிலன் எழுதிய அந்தக் கதைப் புத்தகத்தை அமைதியாக, தொந்தரவில்லாமல், சுவைத்துச் சுவைத்துப் படிப்பதற்காகத்தான் இவ்வளவு முன்னேற்பாடுகள் நடக்கின்றன என்று அம்மாவுக்குத் தெரிந்தால் சும்மா விட்டிருப்பாளா? சீறி விழுந்திருக்க மாட்டாளா? அதென்னமோ கபிலன் என்ற பெயரைக் கேட்டாலே அம்மாவுக்குப் பிடிப்பதில்லை.

"கதை எழுதுகிறானாம் கதை! பத்திரிகைகளில் இன்ன கதைதான் வருவதென்று விவஸ்தை இல்லாமல் போய்விட்டதே! இந்த மாதிரிக் கதைகளையெல்லாம் படித்தால் குழந்தைகள் உருப்பட்டாற் போலத்தான்!" அம்மா இவ்விதம் எவ்வளவு தரம் கூறியிருக்கிறாள்! ஆங்காரம் தாங்காமல் ஒருநாள் கபிலனின் கதை பிரசுரமாகியிருந்த பத்திரிகையைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தவளாயிற்றே!

"இதோ பார்! இம்மாதிரிக் கதைகள் நிறைந்த பத்திரிகைகள் இந்த வீட்டில் நுழைந்தால் தெரியும் சேதி!" என்று அன்று கூச்சல் போட்டாளே அதிலிருந்தே அம்மாவின் மனசைப் புரிந்து கொள்ளலாமே!

சுத்தக் கர்நாடகம் இந்த அம்மா. காதல் என்ற வார்த்தையைக் கேட்டாலே அம்மாவின் முகம் கடுகடுவென்று ஆகிவிடும். காதல் கதையைக் கண்டாலோ அவள் கோபம் எரிமலையாக வெடித்துவிடும். பத்திரிகைகளில் காதல் கதையைப் போடாமல் சந்நியாசிக் கதைகளாகவா போடுவார்கள்? அம்மாவுக்காகப் பத்திரிகை நடத்தினால் மறுநாளே பத்திரிகை ஆபீசை மூட வேண்டியதுதான்!

மறுபடியும் அம்மா சற்று எரிச்சலுட

லேயே உரக்கக் கூப்பிடுவது கேட்டது: ''லலிதா! லலிதா! இங்கே வாயேன்!''

ஊஹூம்! பதிலே சொல்லப் போவதில்லை. முதல் அத்தியாயத்தை மட்டுமாவது முடிக்கும் வரை இங்கிருந்து எழுந்திருக்கப் போவதில்லை. கட்டில் தலையணையில் இப்படி ஒய்யாரமாகச் சாய்ந்துகொண்டு கபிலன் கற்பனை செய்திருக்கும்



## உமா சந்திரன்

பாத்திரங்களோடு ஒன்றி விடுவதில் எவ்வளவு இன்பம் இருக்கிறதென்று அம்மாவுக்கு என்ன தெரியும்?

கபிலனின் கதைகள் என்றால் லலிதாவுக்கு உயிர். எந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் கபிலனுடைய கதை வந்திருக்கிறதா என்றுதான் முதலில் பார்ப்பாள். எல்லோரும்தான் காதல் பிரச்னைகளை வைத்துக்கொண்டு கதைகள் எழுதுகிறார்கள். ஆனால் அதே பிரச்னைகளைக் கபிலன் கையாளும் பாணியே அலாதி. ஆண் பெண் உறவின் அடிப்படையில் சமூகத்தில் மலிந்து கிடக்கும் ஊழல்களை மூடி மறைக்காமல் எவ்வளவு ஆவேசம் பொங்க எழுதுகிறார்! உணர்ச்சிச் சூறாவளியல்லவா ஒவ்வொரு கதையும்! கபிலனின் கதைகள் அவளை மட்டும் தானா பைத்தியமாக அடித்துக் கொண்டிருந்தன?

கல்லூரியில் அவளுடன் படிக்கும் பெண்களில் கபிலனின் கதைக்கு உள்ளத்தைப் பறி கொடுக்காத பெண்ணே இல்லையென்று சொல்லி விடலாமே! முக்கியமாக சாந்தியையும் பத்மாவையும் குறிப்பிட வேண்டும். அதிலும் சாந்தி இருக்கிறாளே, எளிதில் உணர்ச்சி வசப்பட்டு விடக்கூடிய உள்ளம் அவளுடையது. கபிலனுடைய கதையென்றால் உயிரைக்கூடக் கொடுக்கத் தயாராயிருப்பாள்!

இந்தப் புத்தகம் இப்போது புதிதாக வந்திருக்கிறது. கபிலன் எழுதிய முழு நாவல். இந்த நாவல் வெளிவந்திருக்கிறதென்று பத்மா அவளிடம் கூறியபோது அதை விலை கொடுத்து வாங்கித் தன்னிடமே வைத்துக் கொள்ள வேண்டுமென்று லலிதா எவ்வளவு ஆசைப்பட்டாள்! ஆனால் விலை ஐந்து ரூபாயாயிற்றே! அவ்வளவு பணம் அவளிடம் ஏது? அம்மாவிடம் கேட்டால் கொடுப்பாளா? அந்த விஷயத்தில் பத்மா அதிர்ஷ்டசாலி. அவள் வீட்டில் அவளுக்கு எதற்கும் சுதந்திரம் உண்டு. என்ன வாங்க வேண்டுமென்றாலும் பணம் கிடைத்துவிடும். புத்தகம் வாங்க வேண்டுமென்றாலோ மறு பேச்சே கிடையாது. அவள் வாங்கும் புத்தகம் எப்படிப்பட்டதென்று யாருக்காவது கவலையிருந்தால்தானே? பத்மாவின் அம்மாவுக்குத் தமிழ் நன்றாகப் படிக்கத் தெரியாது. தகப்பனாருக்கோ வியாபார வேலைகளைக் கவனிப்பதற்கே பொழுது சரியாக இருக்கும். வீட்டில் வழங்கும் பாஷை கன்னடம்தான். எனவே தமிழ்ப் புத்தகங்கள் விஷயத்தில் பத்மா வைத்தது தான் சட்டம். கபிலனின் நாவல் வெளிவந்த மறுநாளே அதை வாங்கி விட்

டாள். திரும்பத் திரும்பப் பார்த்து அலுத்துப் போன பிறகுதான் லலிதாவுக்கு இரவல் கொடுத்திருக்கிறாள். அவ்வளவு அரும் பாடு பட்டு வாங்கி வந்த பொக்கிஷத்தை நிம்மதியாக ரசிக்க விடுகிறாளா இந்த அம்மா? நொடிக்கொரு தடவை ''லலிதா! லலிதா!'' —கூப்பிடட்டுமே! என்னவானாலும் சரி, ஏனென்று கேட்கப் போவதில்லை.

''ஏண்டி லலிதா, கூப்பிடக் கூப்பிட என்ன செய்து கொண்டிருக்கிறாய் இங்கே? நான் கூப்பிடுவது உன் காதில் விழவில்லையா? மற்ற நாட்களில்தான் கல்லூரி, கல்லூரி என்று உயிரை விட்டுக் கொண்டு அம்மாவுக்கு உதவியாக ஒரு விரலைக் கூட அசைக்காமல் சுற்றிக் கொண்டிருக்கிறாய்! விடுமுறையில் கூடவா அப்படியே இருக்க வேண்டும்?'' என்று விஸ்தாரமாகப் புகார்ப் புராணத்தை ஆரம்பித்த அம்மா சட்டென்று நிறுத்தினாள். லலிதா ஏதோ புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு அதை மறைக்க முயல்வது அவள் கண்களில் பட்டது.

''அதென்னடி புத்தகம்? சரியான புத்தகமாயிருந்தால் ஏன் மறைக்க வேண்டும்? அந்தப் புத்தகத்தை இப்படிக் கொடு, பார்க்கலாம்!'' என்று கூறிய அம்மா சட்டென்று பாய்ந்து லலிதாவின் கையிலிருந்து அந்தப் புத்தகத்தைப் பிடுங்கி விட்டாள்.

தலைப்புப் பக்கத்தில் ஆசிரியரின் பெயர் 'கபிலன்' என்று போட்டிருப்பதைப் பார்த்ததுமே அவள் விழிகளில் அனல் பறந்தது.

''ஏண்டி இந்தக் கபிலனுடைய கதைகளைப் படிக்கக்கூடாதென்று உன்னை எவ்வளவு தூரம் கண்டித்திருக்கிறேன்? இந்தப் புத்தகம் எப்படியடி உன்னிடம் வந்தது?''

''சொல்கிறேனே. எனக்கென்ன பயமா? பத்மாவிடம் கேட்டு வாங்கி வந்தேன்.''

''அந்தப் பத்மாவின் வீட்டில் கேள்வி முறை கிடையாதா? அவளை அடக்க ஆள் கிடையாதா?''

''எதற்காக அடக்க வேண்டும்? அவள் என்ன தப்புச் செய்தாள்?''

''வயது வந்த பெண் இந்த மாதிரி ஒரு காதல் கதைப் புத்தகத்தைப் படிப்பதை விடவேறு என்ன தப்புச் செய்ய வேண்டும்? இதெல்லாம் வாங்குவதற்கு அவள் வீட்டில் எப்படிப் பணம் கொடுக்கிறார்கள் என்று கேட்கிறேன். இதே ரீதியில் போனால் இன்னும் எப்படியெல்லாம் நடந்து கொள்வாளோ...? இந்த நிமிஷமே இதற்குச் சரியான முடிவு கட்டுகிறேன் பார்!'' என்று ஆவேசமாகக் கூறியவாறு சென்றாள் அம்மா.

''அம்மா! புத்தகத்தை என்ன செய்யப் போகிறாய்?''

''என்ன செய்யப் போகிறேனா? அடுப்பில் போட்டுப் பொசுக்கப் போகிறேன். இந்தக் கபிலன் எழுதும் புத்தகம் எது நம் வீட்டுக்குள் வந்தாலும் இதே கதிதான்'' என்று கூச்சலிட்டுக் கொண்டே சமையல் கட்டை நோக்கி விரைந்தாள் அம்புஜம்.

''வேண்டாம் அம்மா! இப்போதே பத்மாவிடம் அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வந்துவிடுகிறேன் அம்மா!'' என்று பரிதாபமாகக் கெஞ்சியவாறு லலிதா தாயாரைத் தொடர்ந்து ஓடி அவள் கையைப் பிடித்துக் கொண்டாள். வேகத்தில் புத்தகம் அவள் கையிலிருந்து நழுவி அப்பால் போய் விழுந்தது. அப்போது தான் உள்ளே வந்துகொண்டிருந்த ராமநாதன் தம் காலடியில் ஒரு புத்தகம் வந்து விழுவதைக் கண்டதும் குனிந்து அதைத் தம் கையில் எடுத்துக் கொண்டார்.

''அந்தப் புத்தகத்தை என்னிடம் கொடுங்கள். இப்போதே அடுப்பில் போட வேண்டும்!'' என்று கத்தினாள் அம்புஜம்.

''அம்மாவிடம் கொடுக்காதீர்கள் அப்பா! நான் பத்மாவிடமிருந்து இரவல் வாங்கி வந்த புத்தகம். அம்மா சொல்கிறபடி செய்துவிட்டால் பத்மாவுக்கு நான் என்ன பதில் சொல்வது அப்பா!'' என்று லலிதா தீனமாகக் கதறும்போது அவள் கண்களில் கண்ணீர் பொங்கியது. ஆனால் ராமநாதனின் முகத்தில் சிறிதளவும் அனுதாபம் தோன்றவில்லை.

''லலிதா, இந்தப் புத்தகத்தை யெல்லாம் ஏன் வீட்டுக்குக் கொண்டு வருகிறாய்?'' என்று கேட்டார் கடுமையாக.

''இந்த மாதிரி கதைகளைப் படிப்பதன் பலன்தான் கண்டபடி எதிர்த்துப் பேச ஆரம்பித்திருக்கிறாள்.''

''லலிதா, கொஞ்சமாவது பொறுப்பு இருந்தால் இப்படிப் பேசுவாயா? உனக்கு நல்லது கெட்டது எது என்பதைப் பற்றி எங்களுக்குத் தெரிந்ததை விட உனக்கு அதிகமாகத் தெரிந்துவிட்டதென்று எண்ணமா?'' என்றார் ராமநாதன்.

லலிதாவின் மனத்தில் மறுபடியும் துணிச்சல் தலைதூக்கியது. ''நான் என்ன பச்சைக் குழந்தையா, நல்லது கெட்டது புரியாதிருப்பதற்கு?'' என்று கேட்டாள்.

''நல்லது கெட்டது புரிந்து கொண்டிருந்தால், இந்தக் கபிலன் எழுதும் ஆபாசக் கதைகளைப் பற்றி நீ இவ்வளவு பைத்தியமாயிருப்பாயா?''

''அப்பா, கபிலனைப் பற்றி இவ்வளவு பழித்துப் பேசுகிறீர்களே, அவர் எழுதிய கதைகளை நீங்கள் படித்திருக்கிறீர்களா?'' என்று கேட்டாள் லலிதா.

ராமநாதன் கேலியாகச் சிரித்தார். ''கபிலனைப் பற்றி எல்லாம் தெரிந்தது போல் பேசுகிறாயே! நீ அறிந்ததைவிட அதிகமாக எனக்கு அவனைப் பற்றித் தெரியும். பணத்தைத் தவிர வேறு லட்சியம் அவனுக்குக் கிடையாது. சமூகம் எக்கேடு கெட்டுப் போனாலும் அவனுக்குக் கவலையில்லை!'' என்றார்.

''நீங்கள் வேண்டுமென்றே சொல்கிறீர்கள்!''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்! காரணம் எதுவாக இருந்தாலும் சரி, என் பெண் இந்தக் கதையைப் படிப்பதற்கு நான் ஒருநாளும் சம்மதிக்க மாட்டேன்'' என்று கூறிய ராமநாதன் புத்தகத்தைத் தம் மேஜை டிராயரில் வைத்துப் பூட்டினார்.

''புத்தகம் பத்மாவுடையது அப்பா!''

''பரவாயில்லை. உன் சிநேகிதி பத்மாவின் வீட்டு விலாசம் எனக்குத் தெரியும். சீக்கிரமே இதை அவளிடம் சேர்த்துவிட ஏற்பாடு செய்கிறேன்'' என்றார் ராமநாதன்.

அன்று முழுதும் லலிதா ஏதோ பறி கொடுத்தவள் போல் வீட்டில் அங்கும்

# 'ஹேஸலின்' டால்க்

**மழமழப்பான வெல்வெட் போன்ற பவுடர்!** நீலம்-வெள்ளை-மற்றும் பொன்னிறமான, 'ஹேஸலின்' டப்பாவை எடுத்துக்கொள்ளுங்கள். அதிலுள்ள மழமழப்பான வெல்வெட் போன்ற வெள்ளைப் பவுடரை உங்கள் சருமத்தின் மேல் தூவிக்கொள்ளுங்கள். ஆகா, எத்தனை சொகுசான பராமரிப்பு உங்களுக்கு! என்ன குளுமை! என்ன புதுமை! எத்தனை நறுமணம்! எல்லாம் 'ஹேஸலின்' டால்கின் அருள். வியந்து பாராட்ட வேண்டிய பொருள்!

**ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு**



BWY-9 TAM

இங்கும் அலைந்து கொண்டிருந்தாள். எதிலுமே மனம் லயிக்கவில்லை. சலிப்புக்கு மாற்றுத் தேடிச் சாயங்காலமாகப் பத்மாவின் வீட்டுக்குச் சென்றாள்.

சோகமே உருவாக அப்போதுதான் வெளியிலிருந்து வந்து விட்டு வாசலில் இறங்கிய பத்மாவைப் பார்த்ததும் அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''என்ன பத்மா? ஏன் ஒருமாதிரி இருக்கிறாய்?'' என்று பரபரப்புடன் விசாரித்தாள்.

''உனக்குச் சமாசாரம் தெரியாதா? வசந்தி இறந்து விட்டாள்.''

''என்ன சொல்கிறாய் பத்மா?''

''கபிலனுடைய கதையென்றால் உயிரை விடத் தயாராயிருப்பாளென்று பேசிக் கொள்வோமல்லவா? இப்போது கபிலனுடைய கதையேதான் அவள் உயிரைச் சூறையாடிவிட்டது.''

''எனக்கு ஒன்றும் புரியவில்லையே பத்மா!''

''இந்தக் கடிதத்தைப் படித்துப் பார், புரியும்'' என்று ஒரு கடிதத்தை அவள் கையில் கொடுத்தாள் பத்மா.

பத்மாவுக்கு வசந்தி எழுதியிருந்த கடைசிக் கடிதம் அது. கடந்த ஆறு மாத காலமாக எதிர் வீட்டு வாலிபனுக்கும் தனக்குமிடையே வளர்ந்து வந்த காதல் எப்படி மாற்ற முடியாத ஏமாற்றமாக முடிந்து விட்டதென்று விவரித்திருந்தாள். கடிதத்தில் கடைசி வரிகள் நெஞ்சைப் பிளந்தன.

''கபிலனுடைய கதைகளையே என் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக் கொண்டதற்கு நான் கண்ட பலன் இதுதான் பத்மா. இப்போது எனக்கு வேறு வழியில்லை. கபிலனுடைய புதிய நாவலில் வர்ணித்திருப்பது போல் அவருடைய லட்சியக் கதாநாயகி சென்ற வழியிலேயே சென்றுவிடத் தீர்மானித்து விட்டேன். காதலில் ஏமாற்றமடைந்த பெண்ணுக்கு வாழ்க்கையே கிடையாது என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். இந்தக் கடிதத்தை நீ படிக்கும்போது என் உயிர் என் உடலை விட்டுப் பிரிந்திருக்கும்.''

''உண்மையிலேயே அப்படிச் செய்து விட்டாளா?''

''இப்போது அவள் வீட்டிலிருந்துதான் வருகிறேன். கபிலனுடைய புதிய நாவலில் அவருடைய லட்சியக் கதாநாயகி செய்தது போலவே அதிகப்படியாகத் தூக்க மருந்தை விழுங்கி...'' அதற்கு மேல் கூறமுடியாமல் பத்மாவின் விம்மல் அவள் குரலைத் தடை செய்தது. ஒருவாறு சமாளித்துக் கொண்டதும் அவளது சோகம் சீற்றமாக வெடித்தது.

''கபிலனை நினைத்தால் எனக்கு எவ்வளவு ஆத்திரம் வருகிறது தெரியுமா? அவர் எழுதிய கதைகள் அவ்வளவையும் நெருப்பில் போட்டுப் பொசுக்கினாலொழிய என் ஆத்திரம் தீராது!'' என்று விம்மலிடையே கதறினாள் பத்மா. அவளுடைய கதறலின் எதிரொலி லலிதாவின் நெஞ்சிலும் எழுந்தது. அம்மா அன்று காலை காட்டிய ஆத்திரத்துக்கும் பத்மாவின் கதறலுக்கும் எவ்வளவு ஒற்றுமை! விளைவை அறிந்த பின் எழுந்த குமுறல் பத்மாவுடையது. ஆனால் அம்மா...?

கனக்கும் நெஞ்சுடன் லலிதா வீடு திரும்பியபோது நன்றாக இருட்டி விட்டிருந்தது.

''அடே! தங்கமா...? எங்கே கண்ணிலேயே காணுமே! எங்கேடி இருக்கே இப்போ?''

''தாம்பரத்திலே !!''

முன்புறத்து அறையில் மேஜை யெதிரே உட்கார்ந்தபடியே மேஜை மீது குப்புறக் கவிழ்ந்திருந்தார் ராமநாதன். படித்தவாறே தூங்கி விட்டாரா?

மேஜை மேல் ஒரு கடிதம் பிரித்தாற் போல் கிடந்தது. கையெழுத்தைப் பார்த்ததும் லலிதா திடுக்கிட்டாள். வசந்தியின் கையெழுத்து. ஆவலை அடக்க முடியாமல் கடிதத்தைப் படித்தாள் லலிதா. ''கதாசிரியர் கபிலன் அவர்களுக்கு.....'' பத்மாவுக்கு எழுதியிருப்பதைப் போலவே கபிலன் பெயருக்கு வசந்தி அந்தக் கடிதத்தை வரைந்திருந்தாள். விஷயத்தில் மாற்றமில்லை; தொனியில் மாற்றமிருந்தது. தன் முடிவுக்குக் கபிலனே பொறுப்பாளி என்று குற்றம் சாட்டும் விதத்தில் கடிதத்தை முடித்திருந்தாள் வசந்தி. ஆனால் அந்தக் கடிதம் அப்பாவிடம் எப்படி வந்தது?

லலிதாவின் வியப்பு நிறைந்த விழிகள் கடிதத்தினருகே கிடந்த உறையின் மீது பதிந்தன. 'புரட்சிப் பதிப்பகம் மேல் பார்த்துக் கபிலனுக்கு அனுப்புவது' என்று அமைந்திருந்த முகவரியைப் பதிப்பகத்தார் ராமநாதனுடைய பெயராகத் திருத்தி அவருடைய ஆபீஸ் விலாசத்துக்கு அனுப்பியிருந்தார்கள்.

அப்படியானால்... அப்படியானால்... அந்த நினைவையே தாங்க முடியாமல் லலிதாவின் நெஞ்சிலிருந்து விம்மல் வெடித்து வந்தது.

சந்தடி கேட்டு ராமநாதன் மேஜை மேல் கவிழ்ந்திருந்த தலையை நிமிர்த்தி லலிதாவைத் தீனமாகப் பார்த்தார். அவர் கண்களில் நீர் நிறைந்திருந்தது.

''அப்பா, நீங்கள்... நீங்கள்...?''

''ஆம் லலிதா, நான்... நான்...'' அதற்கு மேல் வார்த்தை எழாமல் மீண்டும் மேஜை மேல் தலையைக் கவிழ்த்துக்கொண்டார் ராமநாதன்.

# இவற்றில் சரியான ஹமாம் சித்திரம் எது?



சுலபமான இந்த **ஹமாம்** போட்டி மாபெரும் ரொக்கப் பரிசுகளாக அளிக்கப்போகும் தொகை,

# ரூ. 25,000

**நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இவ்வளவே!**

மேலே இலக்கமிடப்பட்ட ஹமாம் படங்கள் உள்ளன. யாவுமே ஒன்றுபோல் தோன்றலாம். ஆனால் இவற்றுள் ஒன்றுதான் சரியானது. வெள்ளைத் தாள் ஒன்றில் முத்து முத்தான எழுத்துக்களில் நீங்கள் எழுதவேண்டியவை :

(அ) சரியான ஹமாம் படத்தின் எண்.

(ஆ) 10 வார்த்தைகளுக்குள் அடங்கும்படியாக ஒரு விளம்பர வாக்கியம் (ஸ்லோகன்) கீழேயுள்ள மொழிகள் ஏதேனும் ஒன்றில் உங்கள் வாக்கியம் அமையலாம்:
ஆங்கிலம், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

(இ) உங்கள் பெயரும் முழு விலாசமும்.

**ஒவ்வொரு மொழிக்குமான பரிசுகள்:**

ஒவ்வொரு மொழிக்கும் 3 முக்கிய பரிசுகளும், 20 பரிவுப் பரிசுகளும் உண்டு.

**முதல் பரிசு ரூ. 2000/- இரண்டாவது பரிசு ரூ. 1000/- மூன்றாவது பரிசு ரூ. 500/-** மற்றும் ஒவ்வொன்றும் ரூ. 50/- பெறும் 20 பரிவுப் பரிசுகள்.

(பெரிய சைஸ்) ஹமாம் மேலுறைகள் இரண்டுடன் உங்கள் கூப்பன்களை அனுப்பவேண்டிய விலாசம்: ஹமாம் கன்டெஸ்ட் C/o டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், ஆர்மி & நேவி பில்டிங், மகாத்மா காந்தி ரோட், பம்பாய்-1. ஒருவரே எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொரு கூப்பனுடனும் (பெரிய சைஸ்) ஹமாம் மேலுறைகள் இரண்டு அனுப்பியாகவேண்டும். சரியான ஹமாம் படத் தேர்வு, மற்றும் தனித்தனியே ஒவ்வொரு மொழியிலும் வரும் விளம்பர வாக்கியங்களின் சுயத் தன்மை ஆகியவற்றைக்கொண்டே போட்டிக் கூப்பன்கள் பரிசீலிக்கப்படும்.

**போட்டியின் முடிவு தேதி: 15, ஜூலை, 1963.**

ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் சரியான விடை எழுதினால், பரிசுத் தொகை சமமாகப் பங்கிடப்படும். நீதிபதிகளின் தீர்ப்பே முடிவானது. தீர்ப்பு சம்பந்தமாக கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளப்படமாட்டாது.

பரிசு பெற்றவர்களின் பெயர்கள் 15, செப்டம்பர், 1963 பத்திரிகைகளில் அறிவிக்கப்படும்.

கவனிக்க: டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, அதன் வினியோகஸ்தர்கள் அல்லது விளம்பர ஏஜெண்டுகளான போமாஸ் லிமிடெட் ஆகியவற்றின் ஊழியர்களுக்கோ அவர்களின் உறவினர்களுக்கோ இப்போட்டியில் கலந்துகொள்ள உரிமை கிடையாது.

**மறவாதீர் — ஒவ்வொரு மொழிக்கும் தனித்தனியே பரிசுகள் உண்டு!**

அத்தியாயம் - பதினைந்து

## ஆதோத்ய வீணை அழுதது!

குடதிசை வானில் தங்கப் பாளம் உருகிக் கொண்டிருக்க, குணதிசை வானில் நீலவண்ணப் பெருவெள்ளம் பாய்ந்து கொண்டிருந்தது. தென்திசைத் தூரியத்தில் முத்துப் பொதிகள் அம்பாரமிட்டுக் குவிய, வடதிசை வான் பரப்பில் கரிய பாறைகள் உருண்டு கொண்டிருந்தன.

சுரும்புகள் சுருதி கூட்டிச் சுகானந்த கீதம் பாடும் இந்த மனோனந்த மாலை வேளையில் எங்கிருந்தோ பறந்து வந்த பொன்வண்டு ஒன்று, பாண்டியரின் 'புகழாபரணம்' அரண்மனையைச் சார்ந்த அழகிய சோலையினுள் இசைக் கோலமிட்டுக் கொண்டே புகுந்தது.

குரா, கோங்கம், கசருந்தி, வேங்கை, வெண்கடம்பு, சுரபுன்னை, மஞ்சடி, மகிழம், மருதம், சேடல், சண்பகம், பாதிரி முதலான கோட்டுப் பூக்கள் குலுங்கும் மரங்கள் ஒரு பக்கம்; குருக்கத்தி, செம்முல்லை, வெண்முல்லை, முகண்டை, அதிரல், வெள்ளைக் கூதாளம், வெட்பாலை முதலான சிறு பூக்களைச் சுமந்த செடிகள் மற்றொரு பக்கம்; பகன்றை, பிடவம், மயிலை முதலான வண்ணப் பூக்கள் சொரியும் கொடிகள் இன்னொரு பக்கம்—என்று இவ்வாறு பாங்குடன் செழித்து வளர்ந்து எழிலும் மணமும் கொழித்துக் கொண்டிருந்த அந்தச்



# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

சோலையைக் கண்டு உற்சாகம் தலைக்கேறிய பொன்வண்டு, நல்லதொரு மலரணையில் படுத்துச் சுகம் காண நாட்டம் கொண்டு பரவசப் போதையுடன் அங்குமிங்குமாகப் பறந்து வர ஆரம்பித்தது.

'முல்லை மலரா, அது வேண்டாம்; முனை சிவந்த செண்பகமா, அதுவும் வேண்டாம்; செவ்வந்தி மலரா, வேண்டாம், வேண்டாம்; செங்கழுநீர்ப் புஷ்பமா, உடல் உறுத்தும்; மாதுளை மலரா, எங்கே, எங்கே? அதில் மனத்தை யள்ளும் மணம் உண்டு, தேனும் உண்டு! மெத்தென்ற மென்மையுண்டு, அழகும் உண்டு! மென்னுடலைச் சாய்ப்பதிலே கொள்ளை இன்பம்!......நீலோற்பலம் எங்கே?... நீலோற்பலம் எங்கே?....அதோ, அழகு சொரிய அலர்ந்து நிற்கும் இரு நீலோற்பல மலர்கள்!' — வேகமாகப் பறந்து வந்தபொன்வண்டு அவ்விரு மலர்களையும் வேட்கையுடன் நெருங்கியது.

அடுத்த கணம் — ''ஹா! வண்டு! வண்டு!'' என்று தன் நீலோற்பல நேத்திரங்களைப் படபடவென இமைத்துக் கரங்களால் பொத்திக் கொண்டு



கிரீச்சிட்டாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

கலகலவென்ற சிரிப்பொலி!

அரண்டு மிரண்டு கண்களைப் பொத்திக் கொண்டு எழுந்து நின்ற இளங்கோப்பிச்சி இந்தச் சிரிப்பொலி கேட்டு மேலும் நடுங்கியவளாய்ப் பின்னால் திரும்பினாள். இவ்வளவு நேரம் அவள் சிந்தனையில் ஆழ்ந்து அமர்ந்திருந்த சிறியதொரு தடாகக் கரையை நோக்கிச் சிரித்த முகத்துடன் தயங்கித் தயங்கி வந்து கொண்டிருந்தான் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மன்.

வியப்பும் திகைப்புமாகக் கண்களை மலர்த்தி அவனை ஏறிட்டு நோக்கினாள் இளங்கோப்பிச்சி. கோடை வெயிலில் வாடித் துவண்ட பசலைக் கொடியென இளைத்துக் களைத்திருந்த அவள் அந்த ஒரே கணத்தில் வர்ஷருது கண்ட செங்கதலிக் குருத்துப் போல் மகிழ்ச்சித் தளதளப்புடன் நிமிர்ந்தாள்.

''மாவீரப் பழையாறைச் சோழரின் மகளா ஒரு சின்னஞ்சிறு பொன்வண்டைப் பார்த்து இப்படிப் பயந்து நடுங்குவது? என்னால் இதை நம்பவே முடியவில்லையே?'' என்று குறும்புப் புன்னகையுடன் கேட்டுக் கொண்டே அவளருகில் வந்து நின்றான் கோவிந்தவர்மன்.

கைதி நெ. 1. : ஏம்பா! உன்னை எதுக்காக உள்ளே தள்ளினாங்க?

கைதி நெ.2.: நூறு ரூபாய் நோட்டு அச்சடிச்சேன், மாட்டிக்கிட்டேன்.

கைதி நெ.1. : அதெல்லாம் செய்ய ரொம்பச் சாமர்த்தியம் வேணும். சுலபமா நடக்குமா?



கைதி நெ.2. : அட முட்டாள்! நான் எத்தனை கெட்டிக்காரத்தனமா அச்சடிச்சேன், தெரியுமா? ஒரே ஒரு தப்புத்தான் நேர்ந்து போச்சு. நான் மாதிரிக்கு எடுத்துக் கொண்ட நோட்டே கள்ள நோட்டுங்கிறதைக் கவனிக்காமல் போயிட்டேன். இல்லேன்னு எவன் அதைக் கண்டுபிடிச்சிருக்க முடியும்?

நீலோற்பல மலர்களென நினைத்து வந்து ஏமாந்த பொன்வண்டு, அங்கே திடீரென்று எழுந்த அலறல் ஒலியால் மிரட்சியுற்றுப் பறந்தோடுவதைக் கண்டு நாணித் தலைகுனிந்த இளங்கோப்பிச்சி, தன் எதிரே நிற்கும் கோவிந்தவர்மனை ஆசை பொங்கக் கடைக்கண்ணால் நோக்கினாள். அடுத்தகணமே அவள் முகம் வெளுத்துச் சிறுத்தது. தனக்கு அறிமுகமில்லாத ஓர் அந்நியனைப் பார்த்து விட்டது போன்ற வெறுப்பு உணர்ச்சி மேலிட்டவளாய் முகத்தைச் சுளித்துப் பூவுடலைக் கூனிக் குறுக்கிக் கொண்டு விருட்டென்று ஓடிப் போய் ஒரு செவ்வந்தி மலர்ச் செடியருகில் ஒடுங்கிப் போய் நின்றாள்.

'என்ன மோசமான நெஞ்சம் எனக்கு! இந்தப் பொல்லாத மனிதரைப் பார்த்துக் கொஞ்சங்கூடத் தன்மான உணர்ச்சியின்றிப் புளகிதமடைய முற்படுகிறதே அது! அன்றொரு நாள் அந்த ஆலம்பாக்கம் இல்லத்தில் ஆயிரமாயிரம் இன்பக் கனவுகளோடு காத்திருந்த என்னைத் திரும்பியும் பார்க்காமல் அத்தனை வெறுப்பும் முறைப்புமாக அலட்சியப்படுத்தி விட்டுப் போனாரே, அதை இதற்குள் மறந்து விட்டதா என்ன? அதுதான் மறந்து போனாலும், அன்று மாலை பாண்டிய மன்னரின் முன்னிலையில் என் காதுபட எனது அருமைத் தந்தையை இழித்துப் பழித்துப் பேசியதுமல்லாமல் என்னையும் எரித்து விடுவதுபோல் வெறித்து நோக்கி முகத்தைத் திருப்பிக் கொண்டாரே, அதையாவது நினைத்துப் பார்க்க வேண்டாமா? இவ்வளவையும் மறந்து விட்டு இந்த இருதயமில்லாத மனிதரை இப்போது இத்தனை ஆவலுடன் பார்த்து மகிழ எப்படித் துணிந்தன என் கண்கள்? கண்கள்தாம் தவறிழைத்தன என்றால், மானாபிமானமிக்க வீர சோழிய குலத்தின் இரத்தத்தில் ஊறி வளர்ந்த என் நெஞ்சம் கூடவா அந்தத் தவற்றைச் செய்வது?'

தன்னைத் தானே நொந்து கடிந்து கொள்கிறவள்போல் தன் நெஞ்சத்தை ஒரு கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டு விம்பும் வெறுப்புமாக விறைத்து நின்றாள் இளங்கோப்பிச்சி.

''சோழ இளவரசியாருக்கு என் மேல் அளவற்ற கோபம் என்று நினைக்கிறேன்; அப்படித்தானே?'' — இள நகைக் கலவையிட்ட குரலில் தயக்கத்துடன் கேட்டுக்கொண்டே அவளருகில் நெருங்கி வந்த கோவிந்தவர்மன் திடுக்குற்று ஓரடி பின்னால் நகர்ந்தான்.

கோபக் கனல் பறக்க வெடுக்கென்று திரும்பி அவனை விழித்து நோக்கிய இளங்கோப்பிச்சி அங்கிருந்து சடாரெனப் பாய்ந்து போய் ஒரு மாதுளஞ் செடியண்டை மறைந்து நின்றாள்.

அவன் மனம் அதிர்ந்தது. வெட்கத்தால் தலை தானாகவே கவிழ்ந்தது. அங்கு நிற்கவே அச்சப்படுகிறவன் போல் மெல்ல மெல்லப் பின்னோக்கி நகர்ந்தான். அவளை என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவது என்றே அவனுக்குத் தோன்றவில்லை. அவள் எவ்வளவுக்கெவ்வளவு கனிவும் குழைவும் கொண்டவளோ அவ்வளவுக்கவ்வளவு வீம்பும் பிடிவாதமும் நிறைந்தவள் என்பதை அவன் நன்கு அறிவான். ஆயினும் அவளுடைய கோப தாபங்களைப் போக்குவதற்கான வழி முறைகளையும் அவன் அறிந்தே வைத்திருந்தான். ஒரு கேலிப் பேச்சு, ஒரு கொஞ்சும் மொழி, ஓர் அசட்டுச் சிரிப்பு, ஒரு பொய்யான வேதனைப் பெருமூச்சு, பலவந்தமான ஓர் அணைப்பு, ஒரு மென்மையான வருடல் — இவற்றைக் கொண்டு அவளுடைய கோபம், குமுறல், வெடுக்கு, சிடுக்கு, வீம்பு, பிடிவாதம் எல்லாவற்றையும் நொடிப் பொழுதில் போக்கி விடுவான். ஆனால், இன்றோ? அந்த ஊடல் போக்கு முறை உபாயங்களைக் கையாண்டு அவளைச் சமாதானப்படுத்தி விடலாம் என்ற துணிவும் நம்பிக்கையும் துப்புரவாக அற்றுப் போன நிலையில், அவளிடம் நெருங்கவோ அவளை

# RUNNING WATER







*get it with*

**Myers**

or




PUMPS

**WATER SUPPLY SPECIALISTS PVT LTD.**

Dept. No. 55
330 Thambu Chetty St.
MADRAS 1

# tik-20

# டிக்-20

## மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது



கெய்கி டயஸினான்



டாடா-பைஸன் தயாரிப்பு

---

## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெய் அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- உதிரி பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணெய் அடுப்பு

கலையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள்:

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12

நெருக்கு நேர் பார்த்துப் பேசவோகூட அவன் அஞ்சிப் பின்னடைந்தான். புதிய ஊர், புதிய இடம், புதிய சூழல் என்பதால் இப்படித் தைரியமிழந்து நிற்கிறானா? அல்லது அவனிடம் அவன் நடந்து கொண்ட முறை முற்றிலும் தவறானது என்பதை உணர்ந்து, அந்தக் குற்ற உணர்ச்சியின் மனத் தாழ்ச்சியால் குமைந்து நிற்கிறானா? இவ்விரண்டு காரணங்களும் சரிதான் என்றாலும், இதைவிட இன்னொரு முக்கிய காரணமே அவனை அவளிடம் அத்தனை எளிதாக நெருங்க விடாமல் இழுத்துப் பிரித்து நிறுத்தியது.

ஆமாம்; அவனுடைய நெஞ்சில் இடம் பிடித்துத் தன் உயிர்க் காதலியாக வரித்துக் கொள்வதற்கு முன்னும், அந்தப் பேறு கிடைத்தபின்னும் அவளைப் பற்றி அவன் தெரிந்து வைத்திருந்ததெல்லாம் — அவள் ஓர் அற்புத அழகி, இனிய சுபாவம் கொண்டவள், பூவினும் மெல்லிய இதயம் படைத்தவள், இசைக் கலையில் வல்லவள், தமிழ் இலக்கியத்தில் தேர்ந்தவள், சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்று உள்ளவள், எளிமையை விரும்புகிறவள், இரக்க நெஞ்சம் பெற்றவள், அநீதி கண்டு பொறுக்காதவள், அன்புக்காக எதையும் தியாகம் செய்பவள், துன்பங்களை அனுபவிக்கத் தயங்காதவள், உணர்ச்சி வயப்பட்டு எந்தக் காரியத்தையும் துணிந்து ஆற்ற முற்படுகிறவள் என்பவையேதாம். ஆனால், அன்று பாண்டியப் பேரரசர் நெடுமாறர் முன்னிலையில் ஒரு நீண்ட பேச்சுப் பேசினாளே, அதைக் கேட்ட பின்தான் அவள் அரசியல் துறையிலும் எத்தனை ஆழ்ந்த அறிவு பெற்றவளாய் இருக்கிறாள் என்னும் உண்மை அவனுக்குப் புலனாயிற்று. அரசியல் பேரறிஞர்களான மாமன்னர் நெடுமாறரும், மதியமைச்சர் குலச்சிறையாருங்கூட அவளுடைய அந்த அறிவார்ந்த பேச்சைக் கேட்டுப் பிரமித்து விட்டார்களே! அன்று முதலே அவளைப் பற்றி அவன் மனத்தில் ஒருவித அச்சமும் வியப்பும் குடிபுகுந்து கொண்டன. அதனால், இத்தனை காலமாக அவனுக்குச் சமநிலையிலே நின்று அவனுடன் எளிதாகவும் சகஜமாகவும் நெருங்கி உறவாடி வந்தவள் இப்போது திடீரென்று அவனுக்கு எட்டாத உயரத்தில் போய் உட்கார்ந்து கொண்டு அவனைக் குனிந்து நோக்குவது போன்ற ஒரு விசித்திரத் தாழ்மை உணர்ச்சியைத் தனக்குள்ளே அவன் வளர்த்துக் கொள்ளலானான். அவளைப் பற்றிய எண்ணமே அவனுக்கு ஒரு பக்தியாகவும் புனிதக் கனவாகவும் தோன்ற ஆரம்பித்தது. அவன் ஒரு

ஜட்ஜ்: ஏனப்பா! உன் மாமியாரைக் கோபத்துடன் கண்றாவித் தனமாக மாடி ஜன்னல் வழியே வெளியே தள்ளினாயா?

குற்றவாளி: ஆமாம்!



ஜட்ஜ்: எப்பேர்ப்பட்ட குற்றம்! நீ அப்படிச் செய்திருக்கலாமா?

குற்றவாளி: கண்றாவித்தனமா அப்படி வெளியே தள்ளினது தப்புத்தான். அந்தச் சமயத்தில் கீழே யாராவது நடந்து போய்க் கொண்டிருந்தால் அவர்கள் கதி என்ன ஆகியிருக்கும்?

மாவீரன். வீரத்தையே தெய்வமென வழிபடுபவன். அறிவின் வழி சென்று சிந்திக்க அவனால் இயலும் என்றாலும்— அதற்கான கல்வியும் பயிற்சியும் பெற்றவன்தான் என்றாலும் — அவனிடமுள்ள அபரிமிதமான வீர உணர்ச்சி அதை எப்போதும் பின்னுக்குத் தள்ளியே வைத்திருந்தது. அதனால், அறிவின் வழி செல்ல வேண்டிய சமயங்களில்கூட அவன் உணர்ச்சி வழி செல்லவே முற்படுவான். எனவேதான், அவளுடைய அந்த அறிவார்ந்த பேச்சைக் கேட்டு வியந்து மகிழ்வதற்குப் பதிலாக அதை வணங்கிப் போற்றிக் கொண்டே பின்னடையும் ஒரு விந்தை மனப்பான்மைக்குத் தன்னை உட்படுத்திக் கொண்டு விட்டான். இப்போதும் அத்தகைய உணர்ச்சி தலைதூக்கி விடவே, அவளிடம் சொல்ல வந்த சில பெரிய உண்மைகளைச் சொல்லவும், அவளது கோபத்தைத் தணிவிக்கவும் துணிவின்றி மரம்போல் சமைந்து நின்றான்.

நேரம் நகர்ந்தது. மதுரை நகரில் உள்ள ஆலய மணிகளெல்லாம் ஏனோ ஒரே சமயத்தில் ஒலிக்கத் தொடங்கின. அவற்றுடன் முரசொலியும், கொம்பொலியும் சேர்ந்து முழங்கின.

அந்த ஒலிகளைக் கேட்டுப் பரபரப்படைந்த கோவிந்தவர்மன் அங்கு

மிங்குமாகத் திரும்பிப் பார்த்தான். பிறகு தனக்குத் தானே தைரியத்தை வரவழைத்துக் கொள்கிறவனைப் போல் மெல்லக் கனைத்தவாறு இளங்கோப்பிச்சியை நோக்கித் தயங்கித் தயங்கிச் சென்றான்.

அவள் கொஞ்சமும் கோபம் தணியாதவளாய் முன்போலவே விறைப்புடன் நின்று கொண்டிருந்தாள்.

''இளவரசி, என்னை மன்னித்து விடு! தயைகூர்ந்து என்னை மன்னித்து விடு, இளவரசி!'' என்று தழுதழுத்த குரலில் கூறிக்கொண்டே அவள் பின்னால் போய் நின்ற கோவிந்தவர்மன் அவளது மூங்கில் போன்ற வழு வழுப்பான தோளை மெல்லப் பற்றினான்.

''என்னைத் தொடாதீர்கள்! தூர விலகி நில்லுங்கள்!'' — சீற்றத்துடன் திமிறிச் சுழன்று திரும்பிய இளங்கோப்பிச்சி அவனைத் தீய்த்து விடுவதுபோல் விழித்துப் பார்த்தாள். ''நான் ஏன் உங்களை மன்னிக்க வேண்டும்? நானோ ஒரு துரோகியின் மகள்! மனச்சாட்சியற்ற ஒரு வஞ்சகப் பாவியின் மகள்! அதையெல்லாம் மறந்து விட்டு என்னிடம் வந்து மன்னிப்புக் கேட்கிறீர்களே! வேண்டாம்! உங்களின் அந்த முடிவிலேயே நீங்கள் இனி இருந்து கொள்ளலாம்! நான் சென்று வருகிறேன்!'' என்றாள்.

அனற் கதிர்களை வீசிக் கொண்டு தெறித்தோடும் மின்னலைப்போல் அவள் அங்கிருந்து அரண்மனையை நோக்கி விரைந்தோடி மறைந்தாள்.

கண்ணின் நீரெல்லாம் வடிந்து வற்றிய பின்னும் நெஞ்சத்தில் சுமந்த துயரம் தீர்ந்துக் கரையாமல் மேலும் மேலும் வளர்ந்து உயிர்க் கூட்டை நெருக்கிப் பிழியவே அந்த வேதனையைத் தாளமாட்டாமல் புழுப்போல் நெளிந்து கொண்டிருந்த இளங்கோப்பிச்சி படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

அங்கே ஒரு மூலையில் ஆதோத்ய வீணை ஒன்று தூசி படிந்து கிடப்பது அவள் பார்வையில் பட்டது. தன் மனப் பரப்பில் மூண்டெரியும் துன்பத் தணலை இசையின் பனிப் படலத்தாலாவது அணைக்க முயன்று பார்க்கலாமே என்று எண்ணியவளாய் அவ்வீணையை எடுத்து வந்து மடியில் வளர்த்திக் கொண்டு அதன் தந்திகளை மெல்ல உளர்ந்து ஏதோ ஒரு பண்ணின் நிலையை இதமாகத் தட்டி எழுப்பினாள்.

ஆதோத்ய வீணை அழுதது. அவளுக்குப் பதிலாக அதுவே இப்போது அழ ஆரம்பித்தது. அவளுடைய நெஞ்சத்தின் வாயாக அமைந்து, அவளைவிட இன்னும் அழகாக — அவலத்தின் சகல சௌந்தர்யங்களோடும் — அது அழுது ஓலமிடத் தொடங்கியது.

இசைக்கு இன்பம் சேர்க்கும் சக்தி மட்டுமா உண்டு? எதிர்மறையான இயல்பும் அதனிடம் உண்டே!

அவள் மௌனமாக அழுதாள்; ஆதோத்ய வீணை வாய் விட்டு அழுதது. அவள் தன் மனத்துக்குள் அலறினாள்; அந்த வீணையோ ஒலி சேர்த்து அலறிக் கதறியது.

## அத்தியாயம் பதினாறு

# அவள் கண்ட காட்சி?

'நான் ஏன் அப்படி ஆத்திரப்பட்டு நடந்து கொண்டேன்? அவருடைய பொன்னான மனத்தை என் பேச்சாலும் செயலாலும் புண்படுத்தி விட்டேனே! ஐயோ, அவர் என்ன பாடுபட்டாரோ! எப்படியெல்லாம் நெஞ்சம் நொந்து வெய்துயிர்த்தாரோ! வாய் திறந்து, மனம் திறந்து மன்னிப்புக் கேட்டாரே! அப்போதாவது என் கல் மனம் இளகிக் கரைந்திருக்கக் கூடாதா? பண்பறியாப் பேதைபோல் ஏதேதோ பேசி, என்னை நானே சிறுமைப்படுத்திக் கொண்டு விட்டேனே!'

அவள் வீணையின் தந்திகளை வேகமாக உளர்ந்தாள்.

'இல்லை; என் பேச்சும் செயலும் சரிதான். என்னைப் புரிந்து கொள்ளாமல் நடந்து கொண்ட அவருக்குப் புத்தி புகட்டியே ஆக வேண்டும். இல்லையானால் அவர் மீண்டும் மீண்டும் அதே தவற்றைச் செய்து கொண்டேதான் இருப்பார்.'

வீணையின் நாதம் சோர்ந்து போய்த் தாழ்ந்தது.

'என் புத்தி ஏன் இப்படிப் பேதலித்துப் போகிறது? என்னைப் பற்றியோ என் தந்தையைப் பற்றியோ அவர் தவறான தகவல்கள் கேட்டு அதனால் அப்படி வீம்பும் கோபமுமாக நடந்து கொண்டு விட்டுப் பிறகு உண்மையை அறிந்து வருந்தி யிருக்கலாம்! இல்லையானால் என்னிடம் மன்னிப்புக் கோர வந்திருப்பாரா? இதை எண்ணிப் பாராமல் அவரை மேலும் வருத்தப்பட வைத்து விட்டேனே! என்னை அவர் தனிமையில் சந்திக்க வந்ததற்கு ஏதே

னும் காரணம் இருக்குமோ? அதிமுக்கியமான சேதி எதையாவது சொல்லத்தான் அப்படித் தயங்கி நின்றாரோ? பாண்டிய மன்னரிடம் படையுதவி கோரிய அவருக்கு என்ன பதில் கிடைத்திருக்கும்? அன்று மாலை பாண்டிய நாட்டுப் படைகள் நெல்வேலியை நோக்கிப் பெயர்ந்து சென்றபின் என்னுடைய அத்தையன்பர் அவரிடம் தனிமையில் ஏதோ பேசுவதற்காக அழைத்துச் சென்றாரே, அந்தவிஷயம் என்னவாயிருக்கும்? இந்தஅரண்மனையின் கிழக்குக்கோட்டை வாயிலண்டை எங்கள் சோழியப் படையொன்று இன்னமும் தயார் நிலையில் நின்று கொண்டிருக்கிறதே, அப்படி அதை நிறுத்தி வைத்திருக்கக் காரணம் என்ன? யாரால், எதற்காக இங்கு அந்தப் படை அனுப்பி வைக்கப்பட்டது? உண்மையில் அது சோழியப் படைதானா? அல்லது ஏதேனும் யுக்த தந்திர முறையில் திரட்டிய பாண்டியப் படையா? என்னைக் காண வந்த அவரிடம் நான் நல்ல விதமாக நடந்து கொண்டிருந்தால் இத்தனை கேள்விகளுக்கும் விடை கிடைத்திருக்குமே! அத்துடன் அவர் என்மீது கொண்ட கோபத்துக்கும் காரணம் தெரிந்திருக்குமே! இந்த விவரங்களையெல்லாம் அறிந்து கொள்ள முடியாதபடி எனக்கு நானே திரை போட்டுக் கொண்டு விட்டேனே! என்னுடைய உதாசீன நடத்தையாலும் பேச்சாலும் மனம் உடைந்து மீண்டும் அவர் என்மேல் வெறுப்பையும் கோபத்தையும் வளர்த்துக் கொண்டு போய் விட்டால் என்ன செய்வது?'

ஆதோத்ய விசையின்மேல் தலை சாய்த்துத் துவண்டு கிடந்த இளங்கோப்பிச்சி, அந்த அறைக்குள் யாரோ வரும் காலடி ஓசை கேட்டு நிமிர்ந்தாள்.

''என்ன குழந்தாய்! உன்னை எங்கெல்லாம் நாங்கள் தேடியலைவது ?'' என்று புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டே அத்தாணி மண்டபத்திலிருந்து அவசரமாக இறங்கி வந்தார் பாண்டிமா தேவி.

''சோழ இளவரசியின் வருகையை எதிர்பார்த்துப் பாண்டியப் பேரரசரும், அமைச்சர் குலச்சிறையாரும், பிறரும் வெகு நேரமாகக் காத்திருக்கிறார்கள்; நீயானால் இங்கே இந்த இருட்டறையில் புகுந்து இசை வேள்வி நடத்துகிறாயே !'' என்று சிரித்துச் சொன்ன பாண்டிமாதேவி, அவளை அன்புடன் அணைத்து அழைத்துக் கொண்டு அரண்மனை முன்றிலை நோக்கி நடந்தார்.

அந்த அழகிய விசாலமான முன்றிலின் நடுவே போடப் பெற்றிருந்த பொன்னாசனத்தில் யுத்த சன்னத்துக்களுடன் கம்பீரமாக வீற்றிருந்தார் பாண்டியப் பேரரசரான நெடுமாறர். அவருக்கு இருபுறமும் அமைச்சர் குலச்சிறையார் உட்பட அரசாங்க உயர்தர அதிகாரிகள் பலரும் வரிசையாக நின்றிருந்தனர். அவர்கள் அனைவரும் யாரையோ ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. முன்றிலுக்கு எதிரே போர்க்களப் பயணத்துக்கான கவச அணிகளுடன் செருக்கும் மிடுக்குமாக இரு கரிய நிறப் புரவிகள் நின்றிருந்தன. அவற்றுக்கு அப்பால் — கிழக்குக் கோட்டை வாயிலின் நேரெதிரே — மிகப் பெரிய சோழிய சேனை சமுத்திரம் கயல், நந்தி, புலி ஆகிய மூன்று தேசக் கொடிகளையும் ஏந்தி வீராவேசக் கோஷங்களிட்டு அலைமோதிக்கொண்டுநிற்பதுதெரிந்தது.

இந்தக் காட்சிகளைக் கண்டு ஒன்றும் புரியாமல் திகைப்படைந்து நின்ற இளங்கோப்பிச்சி, பாண்டிமாதேவியின் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு முன்றிலின் முகப்பு வாயிலை நோக்கி நடக்க முற்பட்டவள், அங்கே மற்றுமொரு காட்சியைப் பார்த்து வெலவெலத்து நின்றாள். (தொடரும்)




ஓய்வு ஒழிவில்லாமல் 'கிணிங், கிணிங்' என்று அடித்துக் கொண்டிருந்த டெலிபோன் மணியைக் கேட்டதும் எரிச்சல் எரிச்சலாக வந்தது ரஞ்சனாவுக்கு. படப் பிடிப்பும், ஒத்திகையும், வசனத்தை ஒத்திகை செய்வதே அவளுக்கு நேரம் போதவில்லை. ஒரு நிமிஷ நேரம் விச்ராந்தியாக 'அப்பாடா' என்று இருக்கலாமென்றால் இந்த டெலிபோன் அப்படி இருக்க விடுகிறதா?

இவ்வளவுக்கும் டெலிபோன் டைரக்டரியில் போன் அவள் பெயரில் இல்லை. அவளுடைய மாமாவின் பெயரில்தான் இருக்கிறது. அவர்தான் ரஞ்சனாவின் காரியதரிசி. அவர் பெயரில் ரஞ்சனாவின் போன் இருப்பதை எப்படியோ தெரிந்து கொண்டுவிட்டார்கள் ரசிகர்கள். அவளுக்கு போன் செய்துகொண்டே இருப்பார்கள். அதிலும் ரஞ்சனா வீட்டில் இருக்கும்போதுதான் நிறைய 'கால்'கள் வரும். ஆரம்பத்தில் தன் ரசிகர்களிடம் பேசுவதில் மன நிறைவு கண்டாள் ரஞ்சனா. புகழேணியில் ஏறத் தொடங்கியிருந்த காலம் அது. அப்போது ரசிகர்கள் தன்னைப் பற்றி என்ன பேசுகிறார்கள், தன் நடிப்பை எப்படி ரசித்துச் சிலாகிக்கிறார்கள் என்பதைத் தன் செவிகளாலேயே கேட்க வேண்டும் என்ற ஆசை அவளுக்கு நிறைய இருந்தது. வீட்டில் இருக்கும் போதெல்லாம் டெலிபோன் அருகில்தான் உட்கார்ந்திருப்பாள் ரஞ்சனா. இப்போது காலம் மலையேறிப் போய்விட்டது. ரசிகர்களைக் காணவே அவளுக்குப் பிடிக்கவில்லை.

'விருட்'டென்று ஓடிப்போய் டெலிபோன் 'ரிஸீவரை'க் கையில் எடுத்துக் காதில் வைத்துக்கொண்டாள்.

''யார் பேசுகிறது?'' என்று வெறுப்பை உமிழ்ந்தாள்.

''நடிகை ரஞ்சனா இருக்கிறாளா? அவளிடம் பேசவேண்டும்!'' என்ற குரல் டெலிபோனின் மறு கோடியிலிருந்து கேட்டது.

ஏகவசனத்தில் தன்னை எவரோ பேசுவதைக் கேட்டதும் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது ரஞ்சனாவுக்கு. பல்லைக் கடித்துக் கொண்டு ''ரஞ்சனாதான் பேசுகிறேன்!'' என்றாள்.

''அப்படியா? ரொம்ப சந்தோஷம். நான் உங்கள் ரசிகன். உங்கள் படம் என்றால் எனக்கு உயிர். எத்தனை நாட்கள் அந்தப் படம் ஓடுகிறதோ அத்தனை நாட்களும், அத்தனை காட்சிகளும் பார்ப்பேன்!'' என்றது குரல்.

''நான்சென்ஸ்'' என்று கத்தியபடி 'ரிஸீவ'ரைப் பட்டென்று வைத்துவிட்டாள் ரஞ்சனா. டெலிபோன் மீது 'ரிஸீவ'ரை வைக்கவில்லை. அப்படி வைத்துவிட்டால் அந்தத் தொலைபேசி மீண்டும் தொல்லைபேசியாகி விடுமே! அதனால் டெலிபோன் அருகில் கீழேயே வைத்து விட்டாள் ரஞ்சனா. இனி அவளை எந்த ரசிகரும் போனில் கூப்பிட முடியாது. கூப்பிட்டு வழவழா என்று பேசித் தொல்லை கொடுக்க முடியாது.

கால் நீட்டி வெல்வெட் மெத்தையில் படுத்தாள் ரஞ்சனா. வீடு குழந்தை இல்லாத வீட்டைப் போல் சூனியம் பிடித்துக் காட்சியளித்தது. 'ஜல் ஜல்' என்று சதங்கை ஒலி போல் கேட்டுக் கொண்டிருக்கும் டெலிபோனின் இனிய மணியோசை கேட்கவில்லை. அதைத்தான் தன் அமைதிக்குச் சத்துருவாக எண்ணிவிட்டாளே ரஞ்சனா.

தான் புத்திசாலித்தனமாக டெலிபோன் ரிஸீவரை எடுத்துக் கீழே வைத்துவிட்டதாகவும், அதனால் ரசிகர்களின் தொல்லையிலிருந்து விடுபட்டு விட்டதாகவும் தன்னைத் தானே பாராட்டிக் கொண்டு கண்ணயர்ந்தாள் ரஞ்சனா.

தன்னை மறந்த உறக்கத்தில் கண்ணிமைக்குள் ஒரு கனவு இதழ் விரித்து மலராய் மலர்ந்தது. எத்தனை இன்பமான கனவு. அவளுடைய இலட்சியக் கனவல்லவா அது?

ஒரு பெரிய பட முதலாளி. அவளைத் தேடி வருகிறார். ரஞ்சனா அவரை வாசலில் காக்க வைக்கிறாள். ரொம்ப நேரம் கழித்துப் பேட்டி கொடுக்கிறாள். தம் படத்தில் அவள் நடிக்க வேண்டும் என்று கேட்கிறார் அவர். நிறையப் படங்களில் நடிக்க ஒப்பந்தமாகி இருப்பதால் அவருடைய படத்தில் தான் நடிக்க முடியாது' என்று கூறிப் 'பிகு' செய்து கொள்கிறாள் ரஞ்சனா. காலில் விழாத குறையாகப் பட முதலாளி அவளிடம் கெஞ்சுகிறார். ஒரு லட்ச ரூபாய் 'ரேட்' பேசுகிறாள் ரஞ்சனா. பதில் பேசாமல் லட்சம் ரூபாய்க்கு அவளை 'புக்' பண்ணுகிறார் பட முதலாளி. அட்வான்ஸாக ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு 'செக்' எழுதி 'டர்'ரென்று கிழித்து அவளிடம் கொடுக்கிறார். ரஞ்சனாவால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

'பட்'டென்று கண்களைத் திறந்து பார்த்தாள் ரஞ்சனா. எதிரே பல்லை இளித்துக் கொண்டு பட முதலாளி இல்லை. அவள் கையில் ரூபாய் ஐம்பதினாயிரத்துக்கான 'செக்' இல்லை. கண்டதெல்லாம் கனவு; வெறும் கனவு; பகற் கனவு.

மூன்று மணிக்குப் படுத்த தான் இரண்டு மணி நேரமாகவா பகலிலேயே கனவு காணுமளவுக்கு அயர்ந்து தூங்கிவிட்டோம் என்று ஆச்சரியப்பட்டவளாய் டெலிபோனைப் பார்த்தாள் அவள். எத்தனை நேரம்தான் ரிஸீவரைத் தனியாக வைத்திருப்பது? அதை எடுத்து டெலிபோன் மீது வைத்துவிட்டுத் திரும்பினாள். பின்னாடியே காத்திருந்தது போல் ஒலித்தது டெலிபோன்.

''சனியன்'' என்று முணுமுணுத்தபடியே ரிஸீவரைக் கையில் எடுத்து, ''ரஞ்சனா பேசுகிறேன்'' என்றாள்.

''ஏனம்மா இப்படிச் செய்துவிட்டாய்?''

''நான் என்ன மாமா செய்துவிட்டேன்?'' என்று குழந்தையைப் போல அவரையே திருப்பிக் கேட்டாள் ரஞ்சனா.

''டெலிபோனில் இரண்டு மணி நேரமாக யாருடன் பேசிக் கொண்டிருந்தாயம்மா?''

''யாருடனும் பேசவில்லையே!'' என்றாள் ரஞ்சனா.

''பிறகு 'எங்கேஜ்டாக'வே இருந்ததே?''

''அதுவா?'' என்று கேட்டுச் சிரித்தபடியே, ''இந்த ரசிகர்களின் தொல்லை பொறுக்க முடியவில்லை. விவஸ்தை இல்லாமல் வாயில் வந்தபடி எதை எதையோ கேட்டுத் தொல்லை கொடுக்கிறார்கள். ஒரு நிமிஷம் அவர்களுடைய தொல்லை இல்லாமல் இருப்போமா என்றாகி விட்டது மாமா எனக்கு. அதனால் டெலிபோனிலிருந்து ரிஸீவரைக் கீழே எடுத்து வைத்துவிட்டு எப்படி நிம்மதியாகத் தூங்கினேன் தெரியுமா மாமா?'' என்றாள்.

மறு கோடியில் ஒரு விநாடி காலத்துக்கு ஆள் இருக்கிற அரவமே இல்லை. அடுத்த கணம் மாமா அலறினார்: ''லட்ச ரூபாயும் ஒரு பெரிய நடிகை என்ற வர இருந்த ஸ்தானத்தையும் டெலிபோன் ரிஸீவரைத் தூக்கி வைத்துவிட்டதன் மூலம் கெடுத்துக் கொண்டுவிட்டாயே, ரஞ்சனா!''

''லட்ச ரூபாயும், முதல் தர நடிகையின் ஸ்தானமுமா? அதை எப்படி நான் கெடுத்துக் கொண்டேன் மாமா? அப்படி ஒரு கனவு கூடக் கண்டேனே நான்...!'' என்று பரபரப்புடன் கேட்டாள் ரஞ்சனா.

''கனவல்ல அம்மா! நிஜமே! உன்னைத் தேடி அப்போது ஒரு பெரிய அதிர்ஷ்டம் வந்தது. கோவிந்ததாஸ் ராம்சேட் தம்முடைய படத்தில் கதாநாயகியாகப் போட்டுப் படம் எடுக்க விரும்பி உன்னை 'புக்' பண்ணக் கடந்த இரண்டு மணி நேரமாக. 'எப்போது பார்க்க வரலாம்?' என்று தெரிந்து கொள்ள டெலிபோனில் 'காண்டாக்ட்' பண்ண முயற்சி செய்திருக்கிறார். லட்சம் ரூபாய் தருவதாகக் கூடச் சொன்னார். நீ இரண்டு மணி நேரமாகக் கிடைக்காமற் போகவே, உன்னை 'புக்' செய்வதில் கடவுளுக்கே விருப்பமில்லை என்றெண்ணி உன்னை ஏற்பாடு செய்யும் எண்ணத்தை விட்டுவிட்டார். தொடர்ந்து ராகுகாலமும் வந்து விட்டதால், தெய்வ பக்தியும் நம்பிக்கையும் மிக்க அவர் நீ வேண்டாம் என்று நிர்மானித்து நம்ம சித்ரகலா இல்லே சித்ரகலா, அவள் தான் தோழி வேஷம் போடுவாளே, அவளை 'புக்' செய்துவிட்டாராம். எனக்கு இப்போதுதான் செய்தி கிடைத்தது'' என்றார் அவளுடைய மாமா.

ரஞ்சனா திக்பிரமித்துப் போய் நின்றாள். அவள் கண்கள் 'கிளிசரைன்' விடாமலே கண்ணீரைக் கொட்டிக் கொண்டிருந்தன.

ரசிகர்களின் அன்பையும் ஆதரவையும் தொல்லையாகக் கருதியதற்குத் தெய்வம் அளித்த தண்டனையோ இது? என்று எண்ணியதும் அவள் அப்படியே தடா லென்று விழுந்து விட்டாள். அவள் கையி லிருந்த டெலிபோன் ரிஸீவரும் கீழே விழுந்து உருண்டது.

—கே. வேங்கடராமன்



# உடம்புக்கு என்ன?

வாசலில் கட்டில் பீரோக்கள் எல்லாம் வந்து இறங்குகின்றன. ஆம், என் வீட்டின் ஒரு போர்ஷனை வாடகைக்கு விடத் தீர்மானித்து விட்டேன். இதற்காகவே என் மனைவிக்கும் கடிதமாக எழுதி விட்டேன், பிறந்தகத்திலேயே இன்னும் நாலு மாசம் இருந்து விட்டு வரவும் என்று. இதோ, டாக்ஸிக்குப் பணம் தருகிறாரே, அவர் குடும்பம்தான் இங்கே குடியிருக்கப் போகிறது, நாலு மாதங்களுக்கு; அதாவது, அவருக்கு வேறு ஒரு ஜாகை கிடைக்கும் வரையில். இவ்வளவு கர்ம சிரத்தையாக அவருக்கு என் வீட்டை நான் ஒழித்துக் கொடுத்திருப்பது ஏன் என்று கேட்கிறீர்களா? அவர் யார் தெரியுமா? சரஸ்வதி காலேஜ் பிரின்ஸிபாலாக்கும்!

வீடு கிடைக்காமல் அவர் தவித்துக் கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது. உடனே என் வீட்டை ஒழித்துத் தரச் சம்மதித்துவிட்டேன். வாடகையைப் பற்றி ஒரு வார்த்தை இன்னும் பேசலை நான். எதற்குப் பேசணும்? அவர் தாமாகவே இஷ்டப்பட்டுக் கொடுக்கிறதைக் கொடுக்கட்டும். கூடவே என் தம்பி நாணுவுக்கு ஒரு அட்மிஷன் கொடுத்து விட்டால் போதும். எப்படி என் சாமர்த்தியம்? இதோ மனுஷன் படியேறி வருகிறார்; குசலம் விசாரிப்போம்.

''என்ன, சாமானெல்லாம் கரெக்டா வந்துடுச்சா, பிரின்ஸிபால் ஸார்?''

''ஓய்! இனிமேல் என்னை அந்தப் பெயர் சொல்லி அழைக்காதேயும்!'' என்கிறார் அவர்.

''ஏன்?''-கவலையுடன் கேட்கிறேன் நான்.

''அந்தப் பெயரைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போச்சு எனக்கு. ஒரு வழியா நேத்தியோடே அந்த வேலைக்கு முழுக்குப் போட்டாச்சு......!''

''என்ன?..... என்ன?''

''ஆமாம், ஓய்! ரிடையர் ஆயிட்டேன். அதனால்தானே காலேஜ் குவார்ட்டர்ஸைக் காலி பண்ணும்படி ஆச்சு; வேறே வீடும் தேடி அமைய நேர்ந்தது! ஓய்! ஓய்! என்னங்காணும், உடம் உடம்புக்கு?......''


நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்
• எளிதாக, நம்பகமாக உழைக்கிறது.
• நியாயமான விலை
• பூராவும் உத்திரவாதமுள்ளது
• எடுப்பான தோற்றமுள்ளது
• விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் பராமரிப்பு கிடைக்கிறது.
EVEREST
EVEREST
EVEREST
எவரெஸ்ட் தையல் மெஷின்
தயாரிப்பாளர்கள்: சாரதா மெஷினரி கார்ப்பொரேஷன்

# பொன் விலங்கு

## மணிவண்ணன்

### பத்தொன்பதாவது அத்தியாயம்

மல்லிகைப்பந்தல் கல்லூரியின் சூழ்நிலைகளைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கியிருந்தான் சத்தியமூர்த்தி. மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் எல்லாக் கல்லூரிகளிலும் உள்ள உறவு நிலை இப்படித்தான் இருக்கும் போலும் என்று தோன்றியது அவனுக்கு.

'மாணவர்கள் ஆசிரியர்களுக்குப் பட்டப் பெயர் வைத்துக் கேலி செய்கிறார்கள். ஆசிரியர்கள் தங்களுக்கு மேலே உள்ளவர்களுக்குப் பட்டப் பெயர் வைத்துக் கேலி செய்து திருப்திப்படுகிறார்கள். இதற்கு ஒரு முடிவேயில்லையா?' என்று மனம் நொந்து அவன் இவற்றுக்கெல்லாம் ஒரு விதிவிலக்குப் போலத்தான் ஓர் முழுமையான நிறைந்த இலட்சிய ஆசிரியனாக அந்தக் கல்லூரியில் விளங்க வேண்டுமென்று வைராக்கியம் கொண்டான். அன்று அவனை வகுப்புக்களுக்குப் போகச் சொல்லவில்லை. முதல் நாளாகையால் வகுப்புக்களும் அதிகமாக நடைபெறவில்லை. பேருக்கு இரண்டு மூன்று பீரியடுகளை நடத்திவிட்டு விட்டார்கள். கல்லூரி ஊழியனை அனுப்பித் தபாலாபீஸிலிருந்து கடித உறைகள் வாங்கி வரச் செய்து ஊருக்குக் கடிதங்கள் எழுதினான் சத்தியமூர்த்தி. தந்தைக்கும், குமரப்பனுக்கும், இன்னொரு நண்பனுக்கும் கடிதங்களை எழுதி முடித்த பின் கடைசிக் கடிதத்தை மோகினிக்கு எழுதலாமா என்று தோன்றியது. தபாலை மோகினியின் தாய் வாங்கிவிட்டால் என்ன செய்வது என்ற தயக்கமும் கூடவே உடனெழுந்து முந்திய எண்ணத்தைச் செயலாக விடாமல் தடுத்து விட்டது. கண்ணீர் பெருகும் விழிகளோடு அழுகின்ற இதயமும் ஏதோ ஒரு முறைக்காகச் சிரிக்கின்ற வாயுமாக அவள் தனக்கு விடை கொடுத்த அந்தக் காட்சியை நினைத்தான் அவன். 'நாமிருவரும் பிரியும் போது கண்ணீரும் அமைதியுமே இருந்தன' என்ற கவிதை வரி நினைவு வந்தது. கல்லூரியின் சாயங்காலப் பாட வேளைகளும் முடிவதற்கு அறிகுறியாக மணி அடித்தது. விரிவுரையாளர்களும், பேராசிரியர்களும் ஒவ்வொருவராக எழுந்து புறப்படத் தொடங்கி விட்டார்கள். சிலர் கல்லூரியிலிருந்தபடியே மாலையில் பூபதியின் வீட்டுத் தோட்டத்தில் நடைபெற இருந்த தேநீர் விருந்துக்குப் போகலாம் என்ற நோக்கத்தோடு அங்கேயே தங்கியிருந்தார்கள். சத்தியமூர்த்தி கடிதங்களையும் தபாலில்



போட்டுவிட்டு 'லேக் சர்க்கிளி'ல் அறைக்குப் போய்விட்டுத் திரும்பலாம் என்று புறப்பட்டிருந்தான். பாடலி விரிவுரையாளரும் தற்செயலாக உடன் வந்தார். அதனால் நெருங்கி வந்து பேசவோ, பழகவோ பயப்படுகிறவர் போல் விலகி விலகி முன்னால் நடந்து போனார் அவர். 'கேட்' அருகே கல்லூரி விட்டுக் காரில் போய்க் கொண்டிருந்த பாரதி சத்தியமூர்த்தியைப் பார்த்ததும் காரை நிறுத்திக் கொண்டு பதற்றத்தோடு கீழே இறங்கினாள். அவனும் அதைக் கவனிக்காதது போல் வேகமாக முன்னால் நடந்து போய்ப் பாடலி விரிவுரையாளரோடு சேர்ந்து கொண்டுவிட்டான் சத்தியமூர்த்தி. பொன் தூவினாற் போன்றிருந்த சாயங்கால வெய்யிலில் நூலிழை நூலிழையாய்ப் பன்னீர் தெளிப்பதெனச் சாரல் பெய்யத் தொடங்கியிருந்தது. பாடலி விரிவுரையாளரின் கூச்சத்தை நீங்கச் செய்து அவரோடு பேசிக் கொண்டே நடந்தான் சத்தியமூர்த்தி. அந்தச் சாயங்கால வேளையில் மல்லிகைப்பந்தல் ஊரும் கருநீலங் கன்றிய மலை முடிகளும் சொல்லி மாளாத கொள்ளை அழகுடையதாகத் தோன்றிக் கொண்டிருந்தன. சாரலும் பொன் வெயிலும் அந்த அழகை மேலும் அலங்கரித்தன.

கடிதங்களைத் தபாலில் சேர்த்துவிட்டுச் சத்தியமூர்த்தி பாடலி விரிவுரையாளரோடு 'லேக் சர்க்கி'ளில் இருந்த தன் அறைக்குப் போய்க் கொண்டிருந்தான். சுபாவத்துக்கு அதிகமாகக் கூச்சப்பட்டுக் கொண்டிருந்த பாடலி விரிவுரையாளருடன் தான் பழகிய முறையினாலும் பேசிய விதத்தினாலும் சத்தியமூர்த்தி சிறிது மாறுதலை உண்டாக்கியிருந்தான். அந்த இளைஞரும் தங்கி வசிப்பதற்கு அறை தேடிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது.

"இந்த அறையில் என்னோடு இன்னும் இரண்டு பேரை உடன் வைத்துக் கொள்வதாக இருக்கிறேன். நீங்கள் விரும்பினால் இங்கே இருக்கலாம்" என்று சத்தியமூர்த்தி அவரிடம் தெரிவித்திருந்தான். ஒருவேளை சத்தியமூர்த்தி அதைத் தனக்கு மட்டும் தனி அறையாக வைத்துக் கொள்ள விரும்பலாமோ என்று எண்ணித்தான் கேட்கத் தயங்கியதாகவும் மற்ற இருவரை உடன் தங்க வைத்துக் கொள்கிற பட்சத்தில் முதல் ஆளாக உடனே தன்னைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் பாடலி விரிவுரையாளர் கேட்டார். சத்தியமூர்த்தியும் அதற்கு ஒப்புக் கொண்டான். மாலை ஐந்து மணி வரை அறையிலேயே உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்து விட்



டுப் பின்பு இருவரும் சேர்ந்தே பூபதி அவர்களின் வீட்டுத் தோட்டத்தில் நடைபெற இருந்த விருந்துக்குப் புறப்பட்டார்கள்.

''மாகாணத்திலேயே தலைசிறந்த கல்லூரி என்று சொல்கிறார்கள். ஆனால் இந்தக் கல்லூரியும் வம்புகள் நிறைந்ததாயிருக்கும் போல் தோன்றுகிறது சார்...'' என்று பயந்து கொண்டே சுற்றும் முற்றும் மிரண்டு போய்ப் பார்த்தவாறு கூறினார் பாடலி விரிவுரையாளர்.

''வம்புகள் இல்லாத இடம் உலகத்திலேயே கிடையாது ஐயா! எதிர்கொண்டு நீந்தத் தெரிந்தவன்தான் வாழலாம். படித்துப் பட்டம் பெற்றுக் கல்லூரியிலிருந்து வெளியேறிய உங்களைப் போன்ற இளைஞர்களில் பலர் பிறரிடம் பழகுவதற்கே கூச்சமும் பயமும் உள்ளவர்களாக இருக்கிறீர்கள். நியாயமான துணிவையும், நேர்மையான நம்பிக்கைகளையும் கொடுக்க முடியாத படிப்பும் ஒரு படிப்பா என்று சில சமயங்களில் படிப்பின் மேலேயே வெறுப்பாக இருக்கிறது எனக்கு. இன்றைய சமூகத்தில் படித்தவர்கள்தான் கோழைகளாக இருக்கிறார்கள். படித்தவர்கள்தாம் பொய் சொல்லுகிறார்கள். படித்தவர்கள்தாம் பிறரை ஏமாற்றுகிறார்கள். சமயங்களில் தாங்களே ஏமாறவும் செய்கிறார்கள். உண்மையையே ஒரு சமயமாக வழிபடுவதற்குக் கற்றுக் கொடுக்காத படிப்பினால் நாட்டுக்கும் பயனில்லை; நமக்கும் பயனில்லை'' என்று சத்தியமூர்த்தி வேகமாகப் பேசுவதைக் கேட்பதற்கே தயங்கிப் பயந்தார் பாடலி விரிவுரையாளர். நியாயத்தையும், உண்மையையும் இவ்வளவு வேகமாக வற்புறுத்திப் பேசுகிற முதல் மனிதனை இப்போதுதான் வாழ்க்கையில் மிக அருகே சந்திக்கிறார் அவர்.

''நீங்கள் ரொம்பவும் 'ப்ரோக்ரஸிவ்' (முற்போக்காக) ஆக இருக்கிறீர்கள். சில சமயங்களில் உங்கள் பேச்சைக் கேட்பதற்கே பயமாகவும் தயக்கமாகவும் இருக்கிறது'' என்று அவர் பதில் கூறிய விதத்திலிருந்தே அவருடைய பயந்த சுபாவத்தைச் சத்தியமூர்த்தி புரிந்து கொண்டான். புதுமையாகவும், முற்போக்காகவும் நினைப்பதற்கும் பேசுவதற்கும் பயப்படுகிறவர்களே நம்மைச் சுற்றி இவ்வளவு பேர் இருக்கும்போது அப்படி வாழவும் செயலாற்றவும் துணிகிறவர்கள் எப்போது எப்படி வரப் போகிறார்கள் என்றெண்ணி ஆற்றாமையோடு பெருமூச்சு விட்டான் சத்தியமூர்த்தி.

''நண்பரே! நம்முடைய நாட்டைப்போல் எல்லாவிதத்திலும் இரண்டுங்கெட்ட சூழ்நிலையில் உள்ள ஒரு நாட்டுக்குப் பெரிய வறுமை இப்போது என்ன தெரியுமா? முற்போக்காகப் பேசுவதற்கும், செயலாற்றுவதற்கும் மனிதர்கள் கிடைக்காத குறையைவிட முற்போக்காக நினைப்பதற்கே மனிதர்கள் கிடைக்காத குறைதான் பெரிய வறுமை! செயலாற்றுவதற்குச் சோம்பல்படுகிற மனிதர்களை விட நினைப்பதற்கே சோம்பல் படுகிற மனிதர்கள் நம்மிடையே அதிகமாக இருக்கிறார்கள். மனத்தினாலும் சிந்தனையினாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறோம் என்பதற்கு இது ஓர் அடையாளமாகும்.''

உணர்ச்சிகரமாகச் சத்தியமூர்த்தி கூறிய இந்த வாக்கியங்களுக்குப் பாடலி விரிவுரையாளர் ஒரு பதிலும் கூறவில்லை. மௌனமாகப் பக்கத்தில் நடந்து வந்து கொண்டிருந்தார் அவர். அந்தச் சமயத்தில் சத்தியமூர்த்தியின் முகத்தை நிமிர்ந்து பார்ப்பதற்கே பயமாக இருந்தது அவருக்கு. உண்மை இந்த உதடுகளிலிருந்துதான் பிறந்து வருகிறது என்பது போல் அத்தனை அழகாகத் தன் சிவந்த உதடுகளைத் திறந்து சத்தியமூர்த்தி கொதிக்கக் கொதிக்க உணர்ச்சி வசப்பட்டுப் பேசியதைக் கேட்கப் பயந்தது தவிர அவன் முகத்தைப் பார்க்கவும் பயந்தார் அப்பாவியான அந்தத் தாவர இயல் விரிவுரையாளர். பேசிக் கொண்டே அவர்கள் இருவரும் பூபதியின் வீட்டுத் தோட்டத்தை அடைந்தார்கள். தோட்டத்துப் புல்வெளியின் இடையே விருந்த செடிகொடிகளிலும் பெயர் புரியாத குரோட்டன்ஸ்களிலும் இயற்கையாகவே பல்வேறு நிறங்களில் படத்துத் தொங்கும் ஒளிப் பழங்களைப் போல் வண்ண வண்ணப் 'பல்பு'கள் எரிந்து கொண்டிருந்தன. 'காம்பவுண்ட்' கேட் அருகே தன் வரவை எதிர்பார்த்து ஆவலோடும் மலர்ந்த முகத்தோடும் பாரதி காத்துக்கொண்டிருப்பதைச் சத்தியமூர்த்தி கவனித்தான். தான் வருவதைப் பார்க்க வேண்டுமென்றே தனக்காக மட்டும் காத்துக் கொண்டிருந்தவள் போல் தான் உள்ளே வந்ததும் அந்தப் பெண் தோட்டத்து முகப்பிலிருந்து அப்பால் போய் விட்டதையும் அவன் பார்த்தான். தோட்டத்துப் புல் வெளியில் தூய வெள்ளை விரிப்புக்களோடு விருந்து மேசைகளும், நாற்காலிகளும் வரிசை வரிசையாக நீண்டு கிடந்தன. கல்லூரி முதல்வர் வருகிறவர்களை வரவேற்றுக் கொண்டு நின்றார். விரிவுரை

யாளர்களையும், கல்லூரி அலுவலர்களையும் தவிர, மல்லிகைப்பந்தல் நகரப் பிரமுகர்கள் சிலரும் அந்த விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். மேசை விரிப்புக்களின் மேல் வெளேரென்று மின்னும் பீங்கான் கிண்ணங்களும், தட்டுக்களும், நடுநடுவே அலங்காரமாக மலர்க் குடுவைகளும், ஒரு பெரிய - செல்வந்தர் வீட்டு விருந்துக்கே உரிய களையோடும், கம்பீரத்தோடும் இலங்கிக் கொண்டிருந்தன.

''தமிழ் டிபார்ட்மெண்ட்காரர்கள் எல்லாம் இதோ இங்கே உட்கார வேண்டும்'' என்று காசிலிங்கனாரும், மிஸ். வருளாம்பிகையும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த பகுதியைச் சுட்டிக் காண்பித்தார் கல்லூரி முதல்வர். சத்தியமூர்த்தியும் அங்கே போய் உட்கார்ந்தான். சுற்றிச் சுற்றி வந்தவண்ணம் எல்லோருடனும் சிரித்துச் சிரித்து உரையாடிக் கொண்டிருந்த பூபதி நடுவே சத்தியமூர்த்தி உட்கார்ந்திருந்த பக்கமாகவும் ஒரு முறை வந்தார். சத்தியமூர்த்தி எழுந்து நின்று அவருக்கு வணக்கம் செலுத்தினான். அவரும் அன்போடு விசாரித்தார். பின்பு காசிலிங்கனார் பக்கமாகத் திரும்பி, ''இவர் உங்கள் டிபார்ட்மெண்டுக்குப் புது விரிவுரையாளராக வந்திருக்கிறார். சத்தியமூர்த்தி முற்போக்கும், ஆர்வமும் நிறைந்த இளைஞர். நன்றாகக் கவனித்துக் கொள்ளுங்கள்....'' என்று சத்தியமூர்த்தியைக் காண்பித்துச் சொல்லி விட்டு மேலே நடந்தார்.

பூபதியின் மகள் பாரதி விருந்துக்கு வந்திருந்த நகரத்துப் பிரமுகர்களின் வீட்டுப் பெண்மணிகள் கூடியிருந்த கூட்டத்துக்கிடையே சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாலும், அவளுடைய மை நீட்டிய கருவிழிகள் அடிக்கடி சத்தியமூர்த்தி வீற்றிருந்த பக்கமே திரும்பிக் கொண்டிருந்தன. தன்னைச் சுற்றியிருக்கிறவர்களுக்காகத் தன் வாயும் இதழ்களும் சிரித்துக் கொண்டிருந்த அதே வேளையில் சத்தியமூர்த்திக்காகச் சிரிக்கும் அந்தரங்கமான நளின நகையைக் கண்களால் செய்து கொண்டிருந்தாள் அவள். ஒதுக்குப்புறமான இந்த மலை நாட்டு நகரத்துக்குக்கூட இத்தனை விதமான 'ஹேர் ஸ்டைல்களும்' (கொண்டை அலங்காரங்கள்) வந்து பரவியிருக்கின்றன என்பதை எடுத்துச் சொல்வது போல அத்தனை விதமான தலையலங்காரங்களுக்கும் எடுத்துக்காட்டான பெண்மணிகள் அந்த விருந்துக்கு வந்திருந்தார்கள். பத்துப் பன்னிரண்டு பேர் ஒரே சமயத்தில், சேர்ந்து ஜலதரங்கம் வாசிப்பது போல் சிரிப்பொலிகள் அந்தப் பெண்மணிகளின் கூட்டத்திலிருந்து எழுந்து பரவிக்கொண்டிருந்தன. சத்தியமூர்த்தி மனிதர்களையும், அவர்களுடைய மனப்பான்மைகளையும் படித்து முடிக்கும் சுபாவமான குறுகுறுப்போடும், ஆர்வத்தோடும் அந்த விருந்துக்கு வந்திருந்தவர்களைப் படித்துக்கொண்டிருந்தான். சிலர் மனம் நிறைய அழுதுகொண்டே கூட்டத்தையும் தன்னையும் ஏமாற்றிக் கொள்ளும் பொருட்டு வாய் நிறையச் சிரித்தார்கள். இன்னும் சிலர் ஒருவரையொருவர் சந்தித்து நலம் விசாரித்துக் கொள்வதையே துக்கம் விசாரிப்பது போல் தவிர்க்க முடியாமல் செய்து கொண்டிருந்தார்கள். சுகமோ துக்கமோ, உணர்ச்சிகளில் ஆழ்ந்து, நிற்கத் தெரியாத மனிதர்கள் எட்டுக்கால் பூச்சி ஊர்வது போல் பொது இடத்தில் பட்டும் படாமலும் பழகுகிற 'அழகைக்' கவனித்து இதயம் புழுங்கிக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி.




கல்லூரி நிர்வாகத்தினருக்கும் ஆசிரியர்களுக்குமிடையே எப்போதும் சுமுகமான உறவு நிலவுவதற்கும் குடும்பப் பாங்கான சூழ்நிலை உண்டாவதற்கும் ஒவ்வோர் ஆண்டின் தொடக்கத்திலும் இப்படி ஒரு தேநீர் விருந்து நடைபெறுவதாகக் கூறிக் கல்லூரி அதிபரின் தாராள மனப்பான்மையைப் புகழ்ந்து எல்லாரையும் வரவேற்று ஆங்கிலத்தில் பேசி விருந்தைத் தொடங்கி வைத்தார் முதல்வர். முதல்வர் அவ்வாறு கல்லூரி நிர்வாகியைப் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்த போது, 'முதலை எவ்வளவு நாகரிகமாகக் காக்காய் பிடிக்கிறது பாரும் ஐயா' என்று சத்தியமூர்த்திக்குப் பக்கத்திலிருந்த ஒரு விரிவுரையாளரிடம் இன்னொரு விரிவுரையாளர் முணுமுணுத்ததை அவனும் கேட்டான். விருந்து தொடங்கியது. சிற்றுண்டிக்குப் பின் எல்லார் முன்பும் மேசை மேல் வைக்கப்பட்டிருந்த 'கப் — சாஸரில்' பரிமாறுகிறவன் ஆவி பறக்கும் தேநீரை

# ஹெடன்ஸா



## மூலநோய்

## துரிதமாயும்
## தீங்கின்றியும்
## குணமடைய

உறுதியளிக்கிறது.

ஹெடன்ஸாவில்

உணர்வழிக்கும் மருந்து

கிடையாது. கறையுண்டாக்காது.

DZ 1285 A TM




## விக்கோ
## கிரீம் - டி
## லிமோனிஸ்

ஒரு அருமையான கூந்தல் தைலம்

கூந்தல் உதிருவதைத் தடுத்து,
செழுமையான
வளர்ச்சிக்கு அடிகோலுகிறது

மூளைக்குக் குளிர்ச்சி தருகிறது

கோடையில் பயன்படுத்துவதற்கேற்றது




விக்கோ லாபரடரீஸ், பம்பாய்-14

ஸ்டாக்கிஸ்டுகள் :

சென்னை: ஆர். எஸ். கவுடர் & கோ.,
59, பந்தர் தெரு — சென்னை-1

கோயமுத்தூர்: R. தேசாய் கவுண்டர் & கோ.,
அவினாசி ரோடு — கோயமுத்தூர்

பெங்களூர்: கே. எஸ். கவுடர் & கோ.,
கபோதார் சத்திரம் தெரு, பெங்களூர்

ஊற்றிக் கொண்டு போனபோது சத்திய மூர்த்தியை மட்டும் கவனிக்கத் தவறி விட்டான். ஆனால் பாரதி அவனையே கவனித்துக் கொண்டிருக்கிறாள் என்பதை அவன் புரிந்துகொள்ளும்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது. தான் உட்கார்ந்திருந்த பெண்கள் பகுதியிலிருந்து விறு விறுவென்று எழுந்து வந்த பாரதி பரிமாறுகிறவன் கையிலிருந்த தேநீர்க் கெட்டிலை வாங்கிச் சத்தியமூர்த்தியின் அருகே வந்து அவனுடைய தேநீர்க் கோப்பையை நிறைத்த பின்பே தன் மனம் நிறைந்தவளாகத் திரும்பிச் சென்றாள். விருந்து நடத்துகிறவருடைய மகள் என்ற முறையில் அவள் அப்படிச் செய்ததை எந்த விதத்திலும் தவறாக எடுத்துக் கொள்ள இடமில்லையாயினும் தனக்காக அவள் அப்படிச் செய்ய நேர்ந்து அதனால் எல்லாருடைய கவனமும் சில விநாடிகள் தன் பக்கமாகத் திரும்ப நேர்ந்ததை எண்ணி நாணினான் சத்தியமூர்த்தி. ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைத் தனியே பிரித்துத் தேர்ந்தெடுத்துச் செலுத்தப்படுகிற அன்பு அந்தக் கூட்டத்தின் நடுவே அவனுக்கே தண்டனை போல் தோன்றும். சத்தியமூர்த்திக்கும் அப்போது அப்படித்தான் தோன்றியது. பரிமாறுகிறவனுடைய கவனத்தில் தான் தவறிவிட்ட அடுத்த விநாடியே பக்கத்திலிருந்தவர்கள் கூடக் கவனித்துக் கண்டுபிடிக்கும் முன்பாக அந்தப் பெண் எழுந்து வந்த வேகம், அவன் அதைப் பெரிய இழப்பாக எண்ணித் தவித்துப் போய் ஓடி வருவதாகப் புலப்படுத்தியது. ஆனால் கல்லூரி நிர்வாகியின் ஒற்றைக்கொரு செல்வப் பெண்ணாகிய அவளே அப்படி எழுந்து வந்து பரபரப்போடு உபசரித்த காரணத்தினால் அந்த உபசரிப்புக்கு ஆளான சத்தியமூர்த்தியின் பக்கமாக மற்றவர்களின் பார்வை பொறாமை கால்கொள்ளும் குறிப்போடு சில விநாடிகள் திரும்பி நிலைக்கும்படி செய்துவிட்டாள் அவள். விருந்து முடிந்ததும் பூபதி ஆங்கிலத்தில் பேசினார். புதிய ஆசிரியர்களுக்கு நல்வரவு கூறி வரவேற்றும், பழைய ஆசிரியர்களைப் பாராட்டி நன்றி சொல்லியும், கல்லூரி வருங்காலத்தில் எதிர்பார்க்கிற இலட்சிய சாதனைகளை விளக்கியும், அழகியதொரு சொற்பொழிவாற்றினார் அவர். அதற்குப் பின் துணை முதல்வர் (வைஸ் - பிரின்ஸிபால்) புதிய ஆசிரியர்களை அறிமுகம் செய்து வைத்துப் பேசினார். அவரும் ஆங்கிலத்திலேயே பேசினார். 'அத்தனை பேர்களும் தமிழறிந்தவர்களாகவே இருந்துகொண்டு ஏன் ஒருவருக்கொருவர் ஆங்கிலத்தில் பேசிக் கொள்கிறார்கள்?' என்றெண்ணி வியந்தான் சத்தியமூர்த்தி. அந்தரங்கத்தில் தாய் மொழியை அவமரியாதை செய்யும் அந்த நிகழ்ச்சிக்காக வருந்தவும் செய்தான். அந்த நிலையில் அவனே முற்றிலும் எதிர்பாராத விதமாகப் பூபதி அவன் பக்கமாகக் கையைக் காண்பித்து, ''இந்த ஆண்டில் புதிதாக வந்திருக்கும் ஆசிரியர்களின் சார்பாக என்னுடைய இளம் நண்பர் சத்தியமூர்த்தி சில வார்த்தைகள் பேசுவார்'' என்று அவனை வம்பில் இழுத்து விட்டார். சில விநாடிகள் தயங்கிய பின் சத்தியமூர்த்தி பேச எழுந்து சென்றான். பேசுவதற்குச் செல்லுமுன் தற்செயலாகப் பாரதியின் பக்கமாகச் சென்றது அவன் பார்வை. குழந்தைத்தனமான மகிழ்ச்சியோடும், ஆர்வத்தோடும் அவள் தன்னுடைய பேச்சை எதிர்பார்த்து மலர்ந்திருப்பதையும் அப்போது அவன் கண்டான். 'பெரியோர்களே! நண்பர்களே! சகோதரிகளே!' என்று தமிழில் அவன் தன்னுடைய பேச்சைத் தொடங்கியதும் கல்லூரி முதல்வர் அவசரமாக எழுந்து வந்து, ஆங்கிலத்தில் பேசுமாறு அவன் காதருகே முணுமுணுத்தார். 'ஆங்கிலத்தில் பேசுவதுதான் கௌரவம்' என்று வேறு வற்புறுத்தினார். அவருடைய முணுமுணுப்புக்கு மறுமொழி கூறிய சத்தியமூர்த்தி அவருடைய செவிகளுக்கு மட்டுமே கேட்கிறாற் போன்ற மெதுவான குரலில் அடக்கிக் கூறாமல் கூட்டத்திலிருந்த எல்லோருமே கேட்கும்படி இரைந்து கூறினான். ''சார்... ஐ ஹானர் தி இங்கிலீஷ் ... பட் ஐ வர்ஷிப் தி டமில்'' (நான் ஆங்கிலத்தை மதிக்கிறேன். ஆனால் தமிழை வணங்குகிறேன்) என்று அவரைக் குத்திக் காட்டும் பொருட்டு ஆங்கிலத்திலேயே அவருக்குப் பதில் கூறி விட்டு, ''நம்முடைய கல்லூரி முதல்வர் அவர்களை அவமதிக்கக் கூடாதாகையால் அவருடைய கேள்விக்கு ஆங்கிலத்திலேயே மறுமொழி கூறிவிட்டேன். இனி இங்கே கூடியிருக்கிற உங்களையும் நம்முடைய தமிழ் மொழியையும் அவமதிக்கக் கூடாதென்பதற்காகத் தமிழில் பேசுகிறேன். தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருக்கிற உங்களுடைய கூட்டத்துக்கு நடுவே அதே மொழியைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கிற நான் பேசும்போது தமிழில் பேசுகிறது மன்னிக்க முடியாத குற்றமானால் போனால்

போகிறதென்று நீங்கள் என்னை மன்னித்து வையுங்கள். இந்த நூற்றாண்டில் ஆங்கிலம் மனிதனுடைய பொது மொழி. தமிழ் தமிழன் மட்டும் பேசுகிற மொழி. இந்தி இந்தியைப் பேசுகிறவனுடைய மொழி. ஆனால் ஆங்கிலம் எல்லோருக்கும் மொழியாகத் தக்க விதத்தில் புது யுகத்துக்கு ஏற்ற மனிதனின் உலக சமுதாயப் பொது மொழியாக இருக்கிறது. அதன் இடத்தை வேறொன்று நிரப்பவே முடியாது. ஆனால் அதற்காக நமக்குள் நாம் கூடிப் பேசிக் கொள்ளும்போது தாய்மொழியைப் புறக்கணித்து அந்தப் புறக்கணிப்பைச் செய்வதற்காகவே பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டியதில்லை. உலகத்தோடு பழகுவது ஒரு மனிதனுக்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் வீட்டோடு பழகுவதும். உலகத்தின் சமுதாய மொழியாக வளர்ந்து வீறு பெற்றுவிட்ட ஆங்கிலத்தை எப்படி மதிக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும். இந்த நாட்டின் பிரதேச மொழிகள் வளருவதற்கு ஆங்கிலம் ஒருபோதும் தடையாக இராதென்பதையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதே சமயத்தில் அவரவர்களுடைய தாய்மொழியை மதிக்கவும் தெரிய வேண்டும்'' என்று மொழிப் பிரச்னையைப் பற்றித் தைரியமாக விளக்கம் சொல்லிவிட்டு அந்தக் கல்லூரியின் சிறப்பியல்புகளாகத் தான் கேள்விப்பட்டிருந்தவற்றைச் சொல்லி ''அப்படிப்பட்ட கல்லூரியில் நானும் பணிபுரிய வந்திருப்பதற்காகப் பெருமைப்படுகிறேன்'' என்பதாகப் பேசி முடித்தான் சத்தியமூர்த்தி. அவனுடைய கணீரென்ற குரல் ஒலித்து நின்றபோதுதான் அந்தக் கூட்டம் அதுவரை எவ்வளவு அமைதியாயிருந்து கேட்டதென்பது புரிந்தது. பேசி முடித்து விட்டுத் தன் இடத்துக்குத் திரும்பியபோது, 'என்னுடைய பேச்சால் முதன் முதலாக ஆங்கிலத்தில் பேசிய கல்லூரி முதல்வரும், பூபதியும் மனம் புண்பட்டிருக்கலாமோ?' என்ற சிறிய சந்தேகம் அவனுள் கிளர்ந்தது. 'அவ்வாறு மனம் புண்பட்டிருந்தாலும் பரவாயில்லை. பிறர் மனம் புண்படுமே என்பதற்காக உண்மையை மறைத்துப் போலியாகச் சிரித்து விட்டு மேலே போய் விடுகிற பழக்கத்துக்கு இனியாவது முடிவு கட்ட வேண்டும். நான் செய்தது சரிதான்' என்று அடுத்த கணம் அவன் மனமே அவனைப் பாராட்டவும் செய்தது. விருந்துக் கூட்டம் முடிந்ததும், பூபதியோ கல்லூரி முதல்வரோ தன்னைச் சந்தித்துக் கடுமையாகக் கோபித்துக் கொள்வார்கள் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவன் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாகப் பூபதி அவனருகில் வந்து அவனைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டினார். ''நீங்கள் சொல்வதை நான் அப்படியே ஒப்புக் கொள்கிறேன், மிஸ்டர் சத்தியமூர்த்தி! பழக்கத்துக்கு அடிமையாகிவிட்ட காரணத்தினால் தமிழ் நன்றாகத் தெரிந்தவர்களுக்கிடையேயும் என்னைப் போன்றவர்கள் ஆங்கிலத்தில் பேச வேண்டியிருக்கிறது. இனியாவது அதை நாங்கள் மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். சில சமயங்களில் ஆங்கிலமே தெரியாதவர்களுக்கு முன்னால் கூட ஆங்கிலத்தில்தான் பேச வருகிறது. நமக்குத் தெரியும் என்று காட்டிப் பிறரை மருட்டுவதற்காக ஒரு மொழியைப் பேசலாகாது. மொழிப் பழக்கமும் ஒரு நாகரிகம். பிறருக்கு நம் மனத்தைப் புரிய வைப்பதே அதன் நோக்கமாயிருக்க வேண்டும். ஆங்கிலத்தையும் நீங்கள் குறைத்துச் சொல்லவில்லை. அதை 'மனிதனின் மொழி' என்று அழகாகக் கூறினீர்கள். நீங்கள் கூறியது போல் அது உலகத்தின் சமுதாயப் பொது மொழி. அதனால் நிச்சயமாக இனிமேல் எந்தப் பிரதேச மொழியும் பாதிக்கப்பட்டு வலிமை இழக்காது. ஆனால் ஓர் உதாரணத்திற்குச் சொல்லுகிறேன். வளர்ச்சியும் பக்குவமும் இல்லாத வேறு ஏதாவது ஒரு மொழி ஆங்கிலத்தின் இடத்தைக் கைப்பற்ற முயலுமானால் அது பல்வேறு மொழி இனங்களும் பிரிவுகளும் உள்ள இந்த நாட்டை உருக்குலைத்துப் பாழாக்கி விடும். பல்வேறு மொழி இனங்கள் உள்ள இந்த நாட்டில் பழக்க வழக்கங்களுக்கும் அப்பாற்பட்ட ஒற்றுமையைக் காப்பாற்றி வருவது ஆங்கிலம் ஒன்றுதான் என்பதை நீங்களும் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். இந்த நாட்டின் பழமையான பிரதேச மொழிகள் எல்லாம் பிழைத்து உயிர் வாழ வேண்டுமானால் இனிமேலும் இங்கே ஆங்கிலத்தைக் காப்பாற்றினாலொழிய வேறு வழி இல்லை'' என்றார் பூபதி. கல்லூரி முதல்வரின் முகத்தில் மட்டும் கடுமையும் வெறுப்பும் குடிகொண்டிருப்பதைச் சத்தியமூர்த்தி கவனித்தான். பலருக்கு முன்னால் எழுந்து நின்று பேச வாய்த்த முதல் சந்தர்ப்பத்திலேயே எல்லாருடைய சிந்தனையிலும் தான் ஒரு பிரச்னையாகி விட்டதை அவனே உணர்ந்தான். 'உங்கள் பேச்சு மிகவும் நன்றாக இருந்தது' என்று அத்தனை

பெருக்கும் நடுவே தேடி வந்து அவனைப் புகழ்ந்துவிட்டுப் போனாள் பூபதியின் மகள் பாரதி. குறுகிய நோக்கமுள்ள சில பேராசிரியர்கள் அவனை வெறுப்புமிழும் கண்களால் பார்த்துவிட்டுப் போனார்கள். விருந்துக்கு வந்திருந்த பிரமுகர்களில் பலர் ''அந்தப் பையன் யார் சார்?'' என்று பூபதியிடம் அக்கறையோடு தூண்டித் தூண்டி விசாரிக்கும்படி அமைந்திருந்தது அவன் பேச்சு. அந்த அரை மணி நேரப் பேச்சில் எல்லாருடைய கவனத்துக்கும் ஆளாகியிருந்தான் அவன். விருந்து முடிந்து அறைக்குத் திரும்பும்போது பாடலி விரிவுரையாளர் சத்தியமூர்த்தியோடு உடன் வந்தார். மறுநாள் முதற்கொண்டு சத்தியமூர்த்தியுடன் தாமும் அந்த அறைக்கு வந்து தங்கப் போவதாகக் கூறிவிட்டுச் சென்றிருந்தார் அவர். அடுத்த நாள் அதிகாலையிலேயே எழுந்து நீராடி விட்டுக் கல்லூரிக்குப் புறப்படத் தயாராக இருந்தான் சத்தியமூர்த்தி. காலை ஒன்பது மணி சுமாருக்குத் தம்முடைய பெட்டி படுக்கை முதலிய பொருள்களோடு முதல் நாள் கூறியிருந்தபடி தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசன் சத்தியமூர்த்தியோடு அந்த அறையில் வசிக்க வந்து சேர்ந்து கொண்டார். மூன்றாவது ஆளாக வேறு யாரையும் உடன் சேர்த்துக் கொள்ளாமல் தாங்கள் இரண்டு பேர் மட்டுமே அந்த அறையில் இருந்துகொண்டால் என்ன என்பதைப் பற்றி இருவரும் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியிருந்தார்கள். இருவரும் தலைக்கு எட்டு ரூபாய் அதிகம் கொடுக்க நேர்ந்தாலும் இடம் தாராளமாயிருக்குமே என்று எண்ணினார்கள் அவர்கள்.

இரண்டாவது நாளாகிய அன்று கல்லூரியில் அவன் ஒரு வகுப்புக்குச் செல்ல நேர்ந்தது. 'டைம் டேபிள்' (பாட வேளை) 'ஸிலபஸ்' (பாடத் திட்டம்) ஒன்றும் வகுத்து முடிக்கவில்லையாதலும் கல்லூரி முதல்வரின் கையொப்பமிட்ட 'சர்க்குலர்' (சுற்றறிக்கை) ஒன்று அவனுக்கும், வேறு சில ஆசிரியர்களுக்கும் பாட வேளை குறிக்கப்பட்டு அனுப்பப் பெற்றிருந்தது. புதிய ஆசிரியர்களில் சத்தியமூர்த்தி ஒருவனுடைய பெயர்தான் அன்று இருந்தது. அவன் அந்த வகுப்புக்குச் சென்றான். பி.ஏ. முதலாண்டு மாணவர்கள் அறுபது எழுபது பேர் ஒரு ஹாலில் அடைந்து கிடந்தார்கள். வகுப்பின் வலதுபக்கமாக முதல் மூன்று பெஞ்சுகளில் மட்டும் மாணவிகள் உட்கார்ந்திருந்தனர்; மற்ற எல்லாப் பெஞ்சுகளிலும் மாணவர்கள் இருந்தார்கள். பல்வேறு பாடப் பிரிவுகளையும், 'குரூப்'களையும் சேர்ந்த எல்லா மாணவர்களும் அங்கிருந்ததனால் ஒரு மணி நேரப் பொழுதுக்கு என்ன பாடம் நடத்தி அவர்கள் இதயமும் செவிகளும் நிறையச் செய்ய முடியுமென்று சத்தியமூர்த்தி சிந்தித்தான். மாணவர்களும் புத்தகம் ஏதும் கொண்டு வந்திருந்ததாகத் தெரியவில்லை. முதல் முதலாக ஒரு வகுப்புக்குள் நுழைந்து சும்மா உட்கார்ந்திருப்பதையும் அவன் விரும்பவில்லை. முதல் வரிசையில் பெண்கள் பகுதியில் உட்கார்ந்திருந்த பூபதியின் மகள் பாரதி தன்னிடமிருந்த ஆங்கிலக் கவிதைத் தொகுதி ஒன்றைத் தானாகவே அவனிடம் கொண்டு வந்து கொடுத்து 'இதில் ஏதாவது ஒரு பாடலை விளக்குங்கள் சார்' என்றாள். அவனுடைய மன நிலையைப் புரிந்து கொண்டு தானாகவே தயாராக எடுத்து வைத்திருந்தது போல அந்தப் புத்தகத்தைக் கொண்டு வந்து கொடுத்திருந்தாள் அவள். 'தமிழ் விரிவுரையாளராவது ஆங்கிலக் கவிதைக்கு அழகாக விளக்கம் சொல்வதாவது?' என்று மாணவர்கள் மருண்டார்களோ என்னவோ? சத்தியமூர்த்தி அந்தப் புத்தகத்தில் கைக்குத் தோன்றிய பக்கமொன்றைப் பிரித்தான். சத்தியமூர்த்திக்கு மிகவும் விருப்பமான கவிதை ஒன்று அந்தப் பக்கத்தில் வந்து வாய்த்தது. 'ஷீ வாக்ஸ் இன் பியூட்டி' என்று தொடங்கும் அழகிய கவிதை அது. பாரதியாரின் 'அழகுத் தெய்வம்' என்ற கவிதையை அதனோடு ஒப்பிட்டு மாணவர்களுக்கு விளக்கத் தொடங்கினான் சத்தியமூர்த்தி. பைரனின் அந்தக் கவிதையை உணர்ச்சி வசப்பட்டு விளக்கிக்கொண்டிருந்தபோது அவன் நினைப்பில் மோகினியின் நீர் பெருகும் விழிகள் தோன்றின. அவனுடைய சத்திய மயமான தூய அன்பு நினைவு வந்தது அவனுக்கு. நட்சத்திரங்கள் நிறைந்த நிர்மலமான இரவு நேரத்து நெடு நீலவானத்தில் தனியாக மிதப்பதைப் போன்ற மோகினியின் தெளிவான அன்பை எண்ணினான் அவன். 'ஷீ வாக்ஸ் இன் பியூட்டி லைக் தி நைட்— ஆப் க்ளௌட்லெஸ் கிளைம்ஸ் அண்ட் ஸ்டாரி ஸ்கைஸ்' என்று அந்த வரிகளைக் கணீரென்று தொடங்கியதுதான் அவனுக்கு நினைவிருந்தது. அதன்பின் அவன் அந்தக் கவிதையில் தானே இரண்டறக் கலந்துவிட்டான். மோகினியோடு பழகிய அனுபவங்கள் அந்தச் சொற்பொழிவை இணையற்றதாகச் செய்தன. (தொடரும்)

உங்கள்
அலுவல்களை
அஜீரணம்
பாதிக்கிறதா?

# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது

கட்டிப்போட்டதுபோல், ஒரே இடத்தில் அமர்ந்தவாறே உங்கள் அலுவல்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் உங்கள் வேலை அப்படியானது. இக்காரணத்தினால் உங்களைப் போன்றவர்கள் அடிக்கடி அஜீரணத்தினால் அவஸ்தைப்பட நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படத் தேவையில்லை. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது; வயிறு புளிக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.




**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது**

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
65/A, காளியப்ப நாயக் தெரு, மதராஸ்-3

JWTJCJH-1928

# அஜந்தாவில்

மங்கியதோர் நிலவினிலே
கனவில் இது கண்டேன்
வயது பதினாறு இருக்கும்
இளவயது மங்கை
பொங்கி வரும் பெருநிலவு
போன்ற ஒளி முகமும்
புன்னகையின் புது நிலவும்
போற்ற வரும் தோற்றம்
துங்கமணி மின் போலும்
வடிவத்தாள் வந்து
தூங்காதே எழுந்து என்னைப்
பார் என்று சொன்னாள்
அங்கு அதனில் கண்விழித்தேன்
அடடாவோ! அடடா!
அழகென்னும் தெய்வந்தான்
அது என்றே அறிந்தேன்

என்று தன் அழகுத் தெய்வ தரிசனத்தைக் கூறுகிறார் பாரதியார். அழகுத் தெய்வம் அவருக்குப் பதினாறு வயது நிரம்பிய இள வயது மங்கையாகக் காட்சி கொடுத்திருக்கிறது. இதைப் படித்த எனக்கு ஒரு சந்தேகம். உண்மையிலேயே அழகுத் தெய்வம் பெண்மை உருவினது தானா? பறவையினத்தில் சேவலும், மயிலும், விலங்



இனத்தில் சிங்கமும், காளையுந்தானே அழகுடையவைகளாக இருக்கின்றன. ஏன், இந்த மனித இனத்தில் மட்டும் பெண் அழகுடையவளாகக் கருதப்படுவானேன் என்றெல்லாம் எண்ணுவேன். ஆனால் உண்மையில் பெண்ணே அழகு வாய்ந்தவள் என்பதைத் தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சிற்ப வடிவங்களைப் பார்த்தபோது தெரிந்து கொண்டேன். இன்னும் கொஞ்சநஞ்சம் இருந்த சந்தேகமும் அஜந்தாவில் உள்ள சித்திரங்களில் தீட்டிய பெண்களைப் பார்த்த பின் முற்றிலும் தீர்ந்து விட்டது. எவ்வித கடைக்கண் நோக்கிலும் எவ்விதமான அங்க வளைவிலும், கூந்தலை எவ்விதம் கட்டிக்கொள்வதால் ஆண்களின் நெஞ்சம் துடிதுடிக்கும் என்பதை அறியும் கலையில் அஜந்தாப் பெண்கள் மிகத் தேர்ச்சி பெற்றவர்கள். அவர்களது அம்பறாத்தூணியிலே மனிதனது உள்ளத்தைப் பிளக்கும் கூரிய அம்புகள் அடுக்கடுக்காக இருக்கும். உலகத்து இனிமையெல்லாம் ஒன்றாக உருவெடுத்து நடமாடுவது போல் அவர்கள் நிற்பார்கள்.

அஜந்தா பம்பாய்க்குக் கிழக்கே இருநூற்று ஐம்பது மைல் தூரத்தில் இருக்கிறது. ரயிலில் செல்பவர்கள் பம்பாயிலிருந்து மன்மாட் சென்று பின்னர் ரயில் மாறி அவுரங்காபாத் சென்று சேர வேணும். அஜந்தாவையும் எல்லோராவையும் பார்ப்பதற்கு வசதியான தங்குமிடம் அவுரங்காபாத்தான். ஜால்கன் என்ற இடத்தில் இறங்கினால் முப்பத்தைந்து மைல் தூரத்தில் அஜந்தா செல்லலாம் என்பர். அது நல்ல வசதியான பாதையல்ல. அஜந்தா, அவுரங்காபாத்துக்கு வடக்கே அறுபத்தோரு மைல் தூரத்தில் இருக்கிறது. அவுரங்காபாத்திலிருந்து டாக்ஸி கார்கள் கிடைக்கும். பஸ் வசதியும் உண்டு. அவுரங்காபாத்திலிருந்து அறுபது மைல் சென்றதுமே அஜந்தா என்னும் கிராமம் வரும். அது ஒரு சிறிய கிராமம். ஒரு சிறிய குன்றின் மேல் அஜந்தா கிராமம் இருக்கிறது. அங்கிருந்து கார் ஒரு பள்ளத்தாக்கில் இறங்கும். வழியெல்லாம் வளைந்து வளைந்து செல்லும். அப்படி ஒரு மைல் சென்றால் அஜந்தா மலை அடிவாரத்துக்கு வந்து சேருவோம். பாதையில் வனத்திர ஜுவாலை என்னும் மரங்கள் இருக்கும். இலையும் பூவும் சிவந்து அக்காடே தீப்பற்றி எரிவதுபோலத் தோன்றும். அஜந்தா கிராமத்திலோ அல்லது அடிவாரத்திலோ தங்குவதற்கு வசதியான கட்டிடங்கள் இல்லை. இப்போதுதான் மலை அடிவாரத்தில் ஒரு சுற்று மாளிகை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். மலை அடிவாரத்தில் இறங்கிக் கிட்டத்தட்ட அரை பர்லாங்கு மலைமீது ஏறிச் செல்ல வேண்டும்: நல்ல பாதை அமைத்து வைத்திருக்கிறார்கள். அதனால் ஏறுவது சிரமமாக இருக்காது. வழியெல்லாம் பாரிஜாத மலர்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கும். நம் நாட்டில் மலரும் பவள மல்லிகையையே பாரிஜாதம் என்கின்றனர், அங்குள்ளவர்கள். மலைகளும் மரங்களும் மணிக் கற்பாறையும் நிறைந்திருந்தது அந்தப் பஞ்சவடி என்று பாடுகிறான் கவிச் சக்கரவர்த்தி கம்பன். அந்தப் பஞ்சவடியில் இன்று மரங்கள் இருந்தாலும் மலைகளையும் காணோம்; மணிக்கற் பாறைகளையும் காணோம். ஆனால் அஜந்தாவிலே மணிக் கற்

பாறைகள் நிறைய உண்டு: அதிலும் பச்சை நிறமுடைய கற்கள் அதிகம் இருக்கும். இப்படி மலை ஏறும்போதே கிட்டத்தட்ட இரு நூறு அடிகளுக்குக் கீழே வாகூரா நதி ஓடிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். மலைமீது ஓடிவந்த நதி பெரிய அருவியாக விழுந்து ஓடுகிறது. இந்த இடத்தில், ஏழு இடங்களில் தத்தித் தத்தி விழுவதால் இந்த அருவியை சதகுண்டம் என்கின்றனர். இப்படி ஓடும் வாகூரா நதி இங்கு ஓர் அர்த்த சந்திர வளைவாக ஓடுகிறது. இந்த நதிக் கரையிலுள்ள மலையைக் குடைந்துதான் குடைவரை சிற்ப வடிவங்களைச் செதுக்கி யிருக்கிறார்கள்! சித்திரங்களை எழுதியிருக்கிறார்கள். இந்தக் குடைவரைகளில் சில இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே அமைந்தது என்கிறார்கள். பின்னர் இவை புதர் மண்டிக் கிடந்திருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்த மலைக்கு வந்த ஓர் ஆங்கிலேயர்தான் இக் குடை-

வட இந்தியாவில் குப்த சாம்ராஜ்யம் உருவாகி யிருந்தபோது விந்தியத்துக்குத் தெற்கே வகதகர் ஆட்சி நிலைத்திருக்கிறது. வகதகர் அரசன் ஹரிசேனனின் மந்திரி வராகதேவன் சில குடைவரைகள் அமைத்திருக்கிறார். வகதகர்களின் கீழ் இருந்த அசமகன் என்ற சிற்றரசனும் சில குடைவரைகள் அமைத்தான் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. இவர்கள் காலத்தில்தான் புத்தரது சிலை வடிவங்கள் செதுக்கப்பட்டு மூல விக்கிரகமாகச் சைத்தியங்களில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இக் குடைவரைகளை அமைக்க முதலில் குந்தாலி என்னும் இரும்புக் கோடரியை உபயோகித்திருக்க வேண்டும். பின்னரே உளியும் சுத்தியும் கொண்டு கலைஞர்கள் அமைத்த சிற்ப வடிவங்களை வடித்து உருவாக்கியிருக்க வேண்டும். குடைவரை அமைப்புக்களை ஆராய்பவர்களுக்கு அஜந்தா குடைவரைகள் ஓர் அற்புதமான நிலைக்களனாக அமையும்.

# போதிசத்துவர்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

வரைகள் இருப்பதைக் கண்டுபிடித்திருக்கிறார். பின்னர் புதர்களை நீக்கி, அடைத்துக் கிடந்த மண்ணையும் வெட்டி எடுத்திருக்கிறார்கள். அப்படிக் கண்டுபிடிக்கப்பட்ட குடைவரைகள் இருபத்தொன்பதுதான். சமீபத்தில் இன்னும் ஒரு சிறு குடைவரை இருப்பதையுமே கண்டுபிடித்திருக்கிறார் ஒரு புதை பொருள் ஆராய்ச்சியாளர். அதையும் சேர்த்தே இன்று இருப்பது முப்பது குடைவரை என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

இவைகளில் 9, 10, 19, 26, 29-ம் நம்பர் குடைவரைகள் எல்லாம் சைத்தியங்கள். மற்றவை எல்லாம் சங்கராமங்கள். இவைகளையே விகாரங்கள் என்றும் அழைக்கின்றனர். ஒன்று சொல்ல மறந்துவிட்டேனே. அஜந்தா குடைவரைகள் பௌத்த சமயத்தைச் சார்ந்தவை. விகாரங்களில் புத்த பகவானை வடித்து மக்கள் வணங்க வகை செய்திருக்கிறார்கள். சைத்தியங்கள் பௌத்த பிக்ஷுக்கள் வந்து தங்க ஏற்பட்ட மடங்கள் போன்றவை. பௌத்த மதத்திலும் இரண்டு பிரிவுகளிருந்திருக்கின்றன, ஹீனயான பௌத்தம், மகாயான பௌத்தம் என்று. ஆதியில் புத்தரைச் சிலையாக அமைத்து வணங்கி வரவில்லை. பின்னரே புத்தரைச் சிலை வடிவில் அமைத்து வணங்க ஆரம்பித்திருக்கிறார்கள். ஆதலால் முதலில் வெட்டிச் செதுக்கிய குடைவரைகளில் புத்தர் சிலை வடிவில் இருக்க மாட்டார். 8, 9, 10, 12, 13, 30 குகைகளே முதலில் அமைக்கப்பட்டவை என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர். இவைகளிலும் காலத்தால் முந்தியது பத்தாம் நம்பர் குடைவரையே. இது கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே அமைக்கப்பட்டிருக்க வேண்டும். மற்றவை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னும் அமைக்கப்பட்டவை.



எப்படி எல்லோராவில் இந்து சமயம், சமணம், பௌத்தம் மூன்றும் இணைந்து இருக்கின்றனவோ, அதே போல, அஜந்தா குடைவரைகளில் இந்தியக் கட்டடக் கலை, சிற்பக் கலை, சித்திரக் கலை மூன்றுமே இணைந்து நிற்கின்றன. முதலில் அங்குள்ள காவல்காரரை அணுகி ஐந்து ரூபாய் கட்டணம் கட்டினால் முக்கியமான குடைவரைகளில் மின்சார விளக்குகள் போட்டுக் காட்டுவார்.



"இதோ போகிறாரே இவர்கிட்டேயிருந்து பண நாற்றம் நம்மகிட்டேயும் கொஞ்சம் தொத்திக் கொள்ளலாம், இல்லையா?"

"போடா மண்டு! அப்புறம் உன்னைச் சும்மா விட்டுவிடுவாரா அவர்? அவரால் உனக்குக் கிடைத்த பணத்துக்கு வட்டி வசூல் பண்ண வந்து விடுவார் உன் குடிசைக்கு!"

அந்த விளக்குகள் இல்லாமல் சித்திரங்களையோ சிற்பங்களையோ காண இயலாது.

சரி, இனி முதல் குடைவரையில் நுழையலாம். அது ஒரு பெரிய விஹாரம். இக்குடைவரையில் முன்புறம் 64 அடி நீளமும் 9 அடி அகலமும் உள்ள ஒரு பெரிய வராந்தா இருக்கிறது. இந்த வராந்தாவை நான்கு தூண்கள் தாங்கி நிற்பதுபோல் குடைந்து எடுத்திருக்கிறார்கள். இந்த வராந்தாவில் இருந்து உள் குடைவரைக்குச் செல்வதற்கு மூன்று பெரிய வாயில்கள் இருக்கின்றன. வாயில்களில் மலர் வளையங்களும், நாக வடிவங்களும் செதுக்கி யிருக்கிறார்கள். உள்ளே நுழைந்ததும் 64 அடி சதுரத்தில் ஒரு பெரிய ஹால். அதைத் தாங்குவதற்கு இருபது தூண்கள். தூண்கள் ஒவ்வொன்றிலுமே அழகான சிற்ப வடிவங்கள். இங்குள்ள விதானங்களில் மலர் போன்ற சித்திரங்கள். சுவர்களில் புத்த ஜாதகக் கதைகளின் காட்சிகளைச் சித்திரங்களாகத் தீட்டியிருக்கின்றனர். ஆனால் இங்கு நம் கண்களை முதல் முதல் கவர்வது இந்த ஹாலுக்கும் அப்பால் அமைந்த கருவறை போன்ற ஒரு உள் அறையிலே உள்ள புத்த விக்கிரகம்தான். கிட்டத்தட்ட பன்னிரண்டு அடி உயரத்தில் புத்தர் உபதேசிக்கும் கோலத்தில் இருக்கிறார். அவர் இருக்கும் நிலையைத் தர்ம சக்கர பிரவர்த்தன முத்திரை என்கிறார்கள். இச் சிற்ப வடிவத்தில் உள்ள சிறப்பான அம்சம் என்னவென்றால், அச்சிலை வடிவில் உள்ள புத்தர் முகத்தில் மூன்று பாவங்கள். காவலனை வேண்டிக்கொண்டால், அவன் தன் கையில் உள்ள விளக்கைத் தூக்கிப் பிடித்து மூன்று கோலங்களையும் காட்டுவான். நேரே நின்றால் அவர் நம்மைப் பார்த்துப் புன்னகை புரிவார். வலப்பக்கம் ஒதுங்கினால் அப்படியே தியானத்தில் ஒதுங்கி விடுவார். இடப்புறம் ஒதுங்கினால் முகத்திலே ஒரு சாந்தியை நிலவ விடுவார். இப்படி உள்ளத்தில் உள்ள உணர்ச்சிகளை உருவாக்கிக் காட்டும் அற்புதச் சிற்பமாக முதல் குடைவரையிலே புத்த பகவான் நமக்குக் காட்சி தருகிறார். அஜந்தாவில் சித்திரங்கள்தான் உண்டு என்றல்லவா எண்ணிக் கொண்டிருந்தோம். சிற்பத்திலும் அஜந்தா சிறந்து விளங்குகிறது என்பதற்கு இந்தப் புத்தரது வடிவமே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இந்தப் புத்தரது இரு மருங்கிலும் சாமரம் ஏந்தியவர் இருவர். ஒரு பக்கத்தில் வஜ்ரபாணி. இன்னும் இந்தப் புத்தரைச் சுற்றி அவருடைய ஐந்து சிஷ்யர்கள். அவர்களையே பஞ்சவர்கிய பிக்ஷுக்கள் என்பர். இன்னும் எண்ணற்ற மலர்களும், கொடிகளும், மகர தோரணங்கள், நாகர் வடிவங்களும். இவற்றைப் பார்த்து அதிசயித்துக்கொண்டே நிற்கலாம்.

மத்திய ஹாலில் உள்ள சித்திரங்களில் சிறப்பானது போதி சத்துவருடைய சித்திரம்தான். கம்பீரமான வடிவம் என்றாலும் கருணை ததும்பும் முக விலாசம். கண்களை மூடியும் மூடாமல் இருக்கும் நிலை. கையில் ஒரு மலரை ஏந்தி நிற்பவர் தலையை ஒரு பெரிய கிரீடம் அலங்கரிக்கும். இந்த அழகிய போதி சத்துவரைப் போல இன்னும் சில போதி சத்துவர் சித்திரங்கள் அங்கு உண்டு என்றாலும் நிறையாத அழியாத வர்ணத்தில் இருப்பவர் அந்தப் பெரிய போதி சத்துவரே. இன்னும் இங்கேயே சிபிச் சக்கரவர்த்தியின் வரலாறு. பாரசீகத்துத் தூதர்கள் சாளுக்கிய மன்னன் புலிகேசியைச் சந்தித்தல். இத்துடன் பல ஜாதகக் கதைகள் சித்திர வடிவில் இருக்கும். இன்னும் புத்தரது ஒன்று விட்ட சகோதரனை நந்தன் பௌத்த மதத்தைத் தழுவிய வரலாறும் சித்திர வடிவிலே அங்கே உருப்பெற்றிருக்கும். நந்தன், நந்தனது மனைவி சுந்தரி முதலானோர் சித்திர உருவிலே சிறந்த சாதனைகள். மிதிலை மன்னனான மகாஜனகனது வரலாறும் இங்கு உயிர் ஓவியமாகத் தீட்டப் பெற்றிருக்கிறது.

அடுத்த குடைவரைக்குச் செல்லலாம். இது அளவில் முதல் குடைவரையை விடச் சிறியதுதான் என்றாலும், அழகில் அதற்குக் குறைந்தது அல்ல. இதுவும் ஒரு விஹாரமே. இங்கும் ஒரு வராந்தா உண்டு. அதைத் தாங்கும் தூண்கள் உண்டு. சிறந்த வேலைப்பாடுகளுடன் கூடிய வாயில் ஒன்றும் உண்டு. இங்கும் ஒரு புத்தர் உள் கோயிலில் இருக்கிறார். அவர் பக்கத்தில் ஒரு பத்மபாணி. இங்குள்ள சித்திரங்கள் பல வரலாறுகளைச் சித்திரிக்கும். விதானத்தில் உள்ள ஒரு சித்திரத்தில் புத்தரது தாயான மாயா தேவியின் கனவுக் காட்சி இருக்கிறது.

இங்குள்ள சித்திரம் ஒரு சரித்திர வரலாற்றையே உருவாக்கி யிருக்கிறது. ஒரு சாம்ராஜ்ய சக்கரவர்த்தியின் காலடியில் ஒரு பெண் விழுந்து வணங்கும் காட்சி ஒன்றைச் சித்திரமாகத் தீட்டி யிருக்கிறார்கள். அமரர் கல்கி அவர்களின் 'சிவகாமியின் சபதம்' நவீனத்தில் இது தமிழ் நாட்டு நடன சிங்காரி சிவகாமி புலிகேசியின் காலில் விழுவதாகப் புலிகேசி கற்பனை பண்ணி எழுதியதாகக் குறித்திருக்கிறார். இப்படி ஒரு சித்திரம் தீட்டியதன் காரணமாக கலா ரசிகனை நீலகேசியாம் நாகநந்தி, தன் சகோதரன் புலிகேசியின் பேரில் வஞ்சம் கொண்டு வாதாபியின் அழிவிற்குக் வழி கோலினான் என்பர். இச் சித்திரத்தைப் பார்த்ததும் சிவகாமி சபதம் என்னும் நவீனத்துக் காட்சிகள் பலவும் நம் கண்முன்னே வரும்.

# ஹெடன்ஸா



# மூலநோய்

## துரிதமாயும்

## தீங்கின்றியும்

## குணமடைய

உறுதியளிக்கிறது.

ஹெடன்ஸாவில்

உணர்வழிக்கும் மருந்து

கிடையாது. கறையுண்டாக்காது.

DZ 1285 A TM




## விக்கோ

# கிரீம் - டீ லிமோனிஸ்

ஒரு அருமையான கூந்தல் தைலம்

கூந்தல் உதிருவதைத் தடுத்து,
செழுமையான
வளர்ச்சிக்கு அடிகோலுகிறது

மூளைக்குக் குளிர்ச்சி தருகிறது

கோடையில் பயன்படுத்துவதற்கேற்றது




விக்கோ லாபரடரீஸ், பம்பாய்-14

ஸ்டாக்கிஸ்டுகள்:

சென்னை: ஆர். எஸ். கவுடர் & கோ.,
59, பந்தர் தெரு — சென்னை-1

கோயமுத்தூர்: M. தேசாய் கவுண்டர் & கோ.,
அவிநாசி ரோடு — கோயமுத்தூர்

பெங்களூர்: கே. எஸ். கவுடர் & கோ.,
கபேதார் சத்திரம் தெரு, பெங்களூர்

# A CRADLE OF COMFORT

அசைந்து ஆடிக்கொண்டே ஆசுவாசம் பெறுங்கள். ஓய்ந்து போயிருக்கும் அவயவங்களுக்கு அதனுடைய அமைதியான அசைவு இதமாக இருக்கும். உள்வளைவு கொண்ட அதன் முதுகுப்புறம், உங்களை இன்பமாக இளைப்பாற அழைக்கிறது. அதன் மகிழ்வூட்டும் சொகுசை நீங்கள் அனுபவிக்கும்பொழுது, அதன் துணி உங்கள் உடல் வளைவுகளையெல்லாம் அணைத்துக் கொள்ளுகிறது. இந்த இன்பமான வசதியுடன், எஃகினால் கச்சிதமாகச் செய்யப்பட்டிருக்கும் இந்தச் சாய்ந்தாடும் ஈஸி சேர்கள் இடத்தை அடைத்துக் கொள்வதில்லை. அதோடு முதலில் வாங்கும் பொழுதும் பிறகு அதைப் பாதுகாப்பதிலும், செப்பனிடுவதிலும் செலவு குறைகிறது.



**ரூ. 18.00**
விற்பனை வரி,
உள்ளூர் வரிகள் தனி

அதுதான் மடக்கும்




எஃகு குழாய் பர்னிச்சரின் விசேஷ அழகு.



**தரத்தில் சிறந்த அடுக்கடுக்காக**

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் இருக்க, சீதோஷ்ணம் பாதிக்காத சிறந்த எனாமல் வர்ணம் வாட்டியெடுக்கும் முறையில் தீட்டப்பட்டது.
- எடுப்பான நிறங்களில் உறுதியான எளிதில் கிழியாத முரட்டுத் துணி.
- மடக்கும் பூட்டுகள் விசேஷமாகத் தயாரானவை
- ஈரத் துணியைக் கொண்டு பளிச்சென்று துடைத்து விடலாம்.

தயாரிப்போர்:
**க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.**
பி-35 இந்தியா எக்ஸ்சேஞ்ச் ப்ளேஸ், கல்கத்தா-1
விநியோகஸ்தர்கள்

# மே தினம் அளித்த கவலைகள்

## இலங்கைக் கடிதம்

கொழும்பு, மே 2—

இலங்கையில் ஸ்ரீமதி பண்டாரநாயகா அரசாங்கத்துக்கு இன்று மிக மிக நெருக்கடியானதொரு நிலைமை உருவாகியிருக்கிறது. கட்சிக் கோட்பாடுகளை மீறிப் பொதுக் கூட்டங்களில் தாறுமாறாகப் பேசிய காரணத்துக்காக உதவி நிதி மந்திரியான திரு அசோகா கருணாரத்னு என்பவரை உதவி மந்திரி பதவியிலிருந்தும் அரசாங்கக் கட்சியிலிருந்தும் கடந்த வாரம் நீக்கினார்கள். அவர் கடந்த வாரம் எதிர்க் கட்சியில் சேர்ந்துள்ளபடியினால் பார்லிமெண்டு சபையில் இப்பொழுது அரசாங்கக் கட்சி பலமும் எதிர்க் கட்சிகளின் கூட்டுப் பலமும் சரி சமமாகியிருக்கின்றன. அரசாங்கத்துக்கு மொத்தம் 73 ஸ்தானங்களும் எதிர்க் கட்சிகளுக்குக் கூட்டாக 73 ஸ்தானங்களும் இப்போது இருக்கின்றன. ஆயினும் ஆறு நியமன அங்கத்தினர்கள், எதிர்க் கட்சிகளில் சேராத நான்கு சிறுபான்மை வகுப்பு அங்கத்தினர்களாலேயே பத்து வாக்கு மெஜாரிட்டி அரசாங்கத்துக்கு இன்னமும்இருக்கவே செய்கிறது. இந்திய வம்சாவளியினரான தோட்டத் தொழிலாளரின் பிரதிநிதியான திரு எஸ். தொண்டமான் நியமன அங்கத்தினர்களில் ஒருவராவார். இந்திய வம்சாவளியினரைக் கடுமையாகப் பாதிக்கும் பிரச்னைகளைத் தவிர மற்ற விஷயங்களில் அவர் பொதுவாக அரசாங்கத்தை ஆதரித்தே ஓட்டுப் போடுவது வழக்கம்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் மெஜாரிட்டி யில்லாமல் நியமனப் பிரதிநிதிகளின் மெஜாரிட்டிகளின் பலத்தைக் கொண்டு ஆட்சி நடத்தப் பண்டாரநாயகா அரசாங்கத்துக்கு உரிமை கிடையாதென்றும் உடனே பார்லிமெண்டைக் கலைத்துப் பொதுத் தேர்தல் நடத்த வேண்டுமென்றும் முன்னாள் பிரதம மந்திரி திரு தகநாயகா போன்றவர்கள் கோரத் தலைப்பட்டிருக்கிறார்கள். இதற்கிடையில் அரசாங்கம் தற்போதைய பார்லிமெண்ட் கூட்டத் தொடரைத் திடீரென்று முடித்து வைத்து, ஜூலை 25-ம் தேதி பார்லிமெண்டு சபையை மீண்டும் கூட்டுவதென்று நிர்மானித்திருக்கிறது. இலங்கைப் பார்லிமெண்டின் சரித்திரத்தில் இவ்வளவு காலத்துக்கு பார்லிமெண்டு சபை இல்லாமல் இருந்தது கிடையாது. உடனடியாகப் பொதுத் தேர்தல் நடத்த அரசாங்கத்துக்குத் துணிவு இல்லாததால் பார்லிமெண்டை ஒத்திவைத்து எதிர்க் கட்சிகளிலிருந்து சிலரை வலை போட்டுப் பிடித்துத் தனது மெஜாரிட்டியை அதிகரித்துக் கொள்வது அரசாங்கத்தின் இலட்சியமாக இருக்குமென்ற ஐயம் எழுந்துள்ளது.



இலங்கையில் கம்யூனிஸ்ட் கட்சி, இலங்கை சம சமாஜக் கட்சி, மக்கள் ஐக்கிய முன்னணி என்று மூன்று இடதுசாரிக் கட்சிகள் உண்டு. இப்பொழுது இலங்கையின் சமீப கால சரித்திரத்தில் முதல் முறையாக இந்தக் கட்சிகள் ஓர் ஐக்கிய முன்னணியில் சேர்ந்து மே தினத்தை ஒரே மேடையிலிருந்து கொண்டாடின. இதை ஆளும் கட்சி எதிர்பார்க்கவில்லை. இந்தக் கவலை பிரதம மந்திரியின் மே தினக் கூட்டத்தில் தெளிவாகப் பிரதிபலித்தது. இவைகளை யெல்லாம் பார்க்கும்பொழுது இலங்கை அரசியலில் நாளை என்ன நடக்குமென்பதைச் சொல்ல முடியாத அத்தனை நிச்சயமற்ற நிலை உருவாகியிருப்பது புலனாகிறது.

— ரஜனி

அமெரிக்காவின் (யு. எஸ். ஏ.) அரசியல் நிர்ணயச் சட்டம் உருவாக்கப்பட்டபோது, ஆட்சி மொழி விஷயம் பற்றிய சர்ச்சை எழுந்தது. வெவ்வேறு மொழிகள் பேசும் பதின்மூன்று 'காலனி'கள் இருந்தமையால் ஜெபர்ஸன் (பின்னால் அமெரிக்க ஜனாதிபதியாக விளங்கியவர்) கூறினார்: ''ஆட்சிமொழி மசோதாவை இயற்றுவது, தனி மனிதன் சுதந்திரமே கிடையாது என்று கூறுவதாகும்.''

ஆக, ஆட்சிமொழி என ஒன்றினைக் குறிப்பிடுவதே மக்களின் அடிப்படை உரிமைகளைப் புறக்கணிப்பதாகக் கருதப்பட்டது. இன்றும் கூட அமெரிக்க அரசியல் நிர்ணயச் சட்டத்தில் ஆட்சி மொழி பற்றிய அத்தியாயம் எதுவும் கிடையாது.

— எஸ். ரிச்சி ஆரோக்கியசாமி (இந்து பத்திரிகையில் எழுதிய ஒரு கடிதத்திலிருந்து)



ஜெபர்ஸன்



எழுத்தும் தொழிலும்

# பஸ்மாசுரன் கதை!

எம்.வி.வெங்கட்ராம்

**நகை செய்வது மட்டுமின்றிக் கலை நுணுக்கம் மிக்க வேறு பல தொழில்களுக்கும் தங்கம் தேவைப் படுகிறது. ஜரிகை வியாபாரத்தில் ஈடுபட்டவரும், பிரபல எழுத்தாளருமான ஸ்ரீ எம். வி. வெங்கட்ராம் தங்கக் கட்டுப்பாட்டினால் தாக்கப்பட்டுள்ள எண்ணற்ற மக்களின் விசனமிக்க நிலையைச் சாங்கோ பாங்கமாக விளக்குகிறார்.**

ஜரிகையில் என்ன பொருள்கள் உள்ளன என்பது வாசகர்களில் பலருக்குத் தெரிந்திருக்கக் காரணம் இல்லை. பட்டு நூல், அதற்கு மேல் சுற்றிய சன்னமான வெள்ளி இழை, அந்த வெள்ளிக்குத் தங்க முலாம் பூச உதவும் சில ரசாயனப் பொருள்கள்—இவ்வளவும் சேர்ந்து ஜரிகை ஆகிறது.

ஜரிகைக்கு ஏகபோக உற்பத்தி ஸ்தலம் சூரத் நகரம். சூரத் தொகுதியிலிருந்து பார்லிமெண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ்காரர் யார், தெரியுமா? பயப்படாமல் கேளுங்கள்: மொரார்ஜி தேசாய்!

தங்கம் சம்பந்தப்பட்ட ஒரு தொழிலில் ஈடுபட்ட நான் மொரார்ஜிப் பெருமானைத் தியானிக்காமல் கட்டுரையை ஆரம்பிக்கலாமா?

இன்றைய பாரத சர்க்கார் என்ற பெரிய கோயிலில் மூலவர் மொரார்ஜி, உற்சவர் நேருஜி என்று எனக்குத் தோன்றுகிறது. உற்சவரை விட மூலவருக்குத்தான் யந்திர பலமும், மந்திர மகிமையும் அதிகம் என்று உங்களுக்குத் தெரியும்.

மொரார்ஜியின் தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டத்தால் நேரடியாக அடிபுண்ட தொழில்களில் ஜரிகைத் தொழிலும் ஒன்று. ஜரிகை உற்பத்திக்குப் போதிய தங்கம் தருவதற்கு ஆட்சியாளர்கள் உடன்படாததால், கோடிக் கணக்கில் இத் தொழிலில் முதலீடு செய்துள்ள முதலாளிகள் வேறு தொழில்களைத் தேடுகின்றனர். இத்தொழிலில் ஈடுபட்டுள்ள ஆயிரக் கணக்கான தொழிலாளர் குடும்பங்கள் தவிக்கின்றன. சூரத் ஜரிகையை வாங்கி ஜவுளி உற்பத்தியாளரிடம் விற்பனை செய்யும் வியாபாரிகள் நாடு முழுதும் உள்ளனர். அவர்கள் இத்தொழில் இனிப் பிழைக்காது என்று அஞ்சுகின்றனர். புராண இதிகாச காலங்களிலிருந்து இந்த நாள் வரை இந் நாட்டுக்குப் புகழ் தேடித் தரும் ஓர் அழகுத் தொழில் தங்கச் சட்டத்தால் அழியும் நிலையை எட்டியுள்ளது. ஜரிகை இல்லாத வேஷ்டியை நீங்கள் நினைத்துப் பார்க்கலாம். ஜரிகை இல்லாத பட்டுச் சேலையை நினைக்க முடியுமோ? ஜரிகை கிடைக்காததால் நெசவாளர்களின் நிலை பழையபடி வேதாளம் முருங்கைமரம் ஏறிய கதை ஆகியுள்ளது!

தங்கச் சட்டத்தால் நாட்டுக்கு ஏற்பட்டுள்ள சூக்குமமான நன்மைகள் மொரார்ஜியின் ஞானக் கண்களுக்குத் தென்படுகின்றன. நம் ஊனக் கண்களுக்கோ மக்களின் சமூக வாழ்க்கை அதிர்ச்சி அடைந்திருப்பதாகத் தெரிகிறது. நகை செய்யும் தொழிலாளர், நகைக் கடைக்காரர், ஜரிகை உற்பத்தியாளர், ஜரிகைத் தொழிலாளர், ஜவுளி உற்பத்தியாளர், நெசவாளர், வியாபாரம் செய்வோர், இன்னும் பல தொழில்களில் ஈடுபட்டுள்ளோர் இந்தச் சட்டத்தால் பிழைப்பிழந்து விட்டனர்.



என்னிடம் நான்கு பவுனுக்கு நகை இருக்கிறதே!

நாலு பவுன் நகையை வைத்துக் கொண்டு 'நான் பணக்காரன்' என்று தலை நிமிர்ந்து நடந்த ஏழையின் முதுகு ஒடிந்து விட்டது. 'ஆயிரத்துக்கு என்னிடம் நகை இருக்கிறது. பெண் கல்யாணத்தை ஜமாய்த்து

விடுவேன்' என்பன போன்ற மத்திய வகுப்பாரின் கனவுகளில் மண் விழுந்து விட்டது. பதுக்கும் அளவுக்குத் தங்கம் வைத்துள்ள செல்வந்தர்களை இந்தச் சட்டம் என்ன செய்துவிடும்? சட்டத்தால் நசுக்குண்டவர்கள் தொழிலாளிகள், ஏழைகள், மத்தியதர வகுப்பினர் தாமே! கோடிக் கணக்கான எளிய மக்கள் இத்தனை இன்னல்களையும் பொறுத்துக் கொண்டு அமைதியாக இருக்கின்றனரே. காந்தி போதித்த அகிம்சையின் விளைவோ இது?

தங்கச் சட்டத்துக்கு அற்புதக் காரணங்கள் காட்டுகிறார் மொரார்ஜி. தங்கக் கள்ளக் கடத்தலை இச் சட்டம் தடுக்குமாம். கள்ளனைக் கண்டுபிடிக்க முடியாத போலீஸ்காரர், அஜாக்கிரதையாக இருந்துகொண்டு வீட்டுக்காரர்களைக் கட்டி உதைத்தால் எப்படி இருக்கும்? சில ஆயிரம் அல்லது சில லட்சம் கள்ளக் கடத்தல்காரர்களைக் கண்டுபிடிக்க முடியாமல் நாட்டு மக்களை அதிகம் சிக்கத் துணிகிறார் நிதி அமைச்சர்! சட்டம் வந்த பின் கள்ளக் கடத்தல் குறைந்துள்ளது என்று பார்லிமெண்டில் சொல்லுகிறார். கடத்தல்காரர்கள் அவரிடம் கணக்குக் காட்டி இருப்பார்களோ? கடத்தல்காரர்களைப் பிடித்துத் தண்டிக்கக் கையாலாகாதவர்கள், தங்கச் சட்டத்தை ஏமாற்றித் தங்கத்தைப் பதுக்கி வைத்திருக்கிறார்களே, அவர்களை எப்படிக் கண்டுபிடிக்கப் போகிறார்களோ?



என்னிடம் ஐயாயிரத்துக்கு நகை இருக்கிறதே!

பாரத மக்களுக்கு உள்ள அதிகப்படியான தங்க மோகத்தைக் குறைக்கவே இச் சட்டம் என்று அறம் பேசுகிறார் தேசாய்ப் பெருமான். ஆகா, இந்நாட்டில் தோன்றிய மகான்களும், மகா புருஷர்களும் போதித்ததைச் சட்டத்தால் செயல்படுத்த இவர் முனைந்துள்ளார். பெண்ணாசை கூடாது என்று நம் பெரியோர்கள் உபதேசித்தார்கள். அதற்கு ஏதாவது காவல் சட்டம் கொண்டு வருவாரோ? செய்தாலும் செய்வார் நம் மதி மந்திரி! மண்ணாசையும் கூடாதுதான்; ஆகாசத்தில் குடியேறுங்கள் என்று உத்தரவிடுவாரோ என்னவோ!

சீன ஆக்கிரமிப்பால் இச் சட்டம் விளைந்ததாய்க் கூறுகிறார்கள். நாட்டில் பதுங்கிய தங்கம், பதுங்காத தங்கம் அவ்வளவும் சர்க்கார் கைக்கு வந்தாலும் அது பத்து நாள் போருக்குக் காணாது என்று பொருளாதார வல்லுநர்கள் கணக்கிட்டுக் கூறுகிறார்கள். ஆனால் தேசாய் பிரபு 'என் அரசியல் வாழ்வு பாழானாலும் சட்டத்தைக் கைவிட மாட்டேன்' என்று ஆணுரைத்து, மக்களை மாக்களாய்க் கருதிப் பேசுகிறார்.

மனைவியரின் தாலி ஒளி மங்கினாலும், செய்யும் தொழில் பறி போனாலும் உண்ணும் சோற்றில் மண் விழுந்தாலும் மக்கள் அமைதியாக, மிகவும் அமைதியாக இருப்பதற்குக் காரணம் யாதோ?

இதுதான் நம் தலையெழுத்துப் போலும் என்று எந்த அக்கிரமத்தையும் ஒப்புக்கொண்டு சிவனே என்று காலத்தை ஓட்டும் நிலை என்று மாறுமோ? மக்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போராடும் திராணியை என்று திரும்பப் பெறப் போகிறார்களோ? ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

சுமார் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் ஜரிகை வியாபாரத்தைச் சொந்தத்தில் தொடங்கினேன். பம்பாய் ராஜ்யத்தில் உள்ள சூரத் நகரம் ஜரிகை உற்பத்தியை இன்று வரை ஏகபோகமாக அனுபவித்து வருகிறது. அங்கிருந்து ஜரிகை வரவழைத்து, பட்டு நூல் ஜவுளி உற்பத்தியாளர்களிடம் விற்பதுதான் என் தொழில்.

ஆரம்பத்தில் எனக்குப் பேராசையாக ஒன்றும் கிடையாது. அப்போது எனக்குச் சின்னக் குடும்பம்; யாரிடமும் சேவகம் செய்யாமல் மாதம் நூறு, இருநூறு சம்பாதித்தால் போதும் என்ற அடக்கமான ஆசையுடன் தொழிலை ஆரம்பித்தேன். முதலில் சூரத்தில் இருக்கும் ஒரு ஜரிகைக் கம்பெனிக்குச் சரக்கு வேண்டிக் கடிதம் எழுதினேன்; என்னை அவர்கள் நேரில் அறியமாட்டார்களாதலால் சரக்கைப் பாங்கு மூலம் அனுப்பும்படி எழுதினேன்; ஆனால் அந்தக் கம்பெனியாரோ, நான் கேட்டதற்கு இருமடங்கு சரக்கை எனக்கு நேராக 'அனுப்பி' வைத்தனர்; என்னையும் என் தொழில் திறமையும் பற்றி அவர்களுக்குத் தெரியும் என்றும், சரக்கை விற்று மெதுவாகப் பணம் அனுப்பலாமென்றும், தேவைப்படும் சரக்குக்கு ஆர்டர் எழுதும்படியும் அவர்கள் கடிதம் எழுதினார்கள். நான் 'ஆர்டர்' எழுதாவிட்டாலும் அவர்களிடமிருந்து சரக்குகள் வந்தன.



ஆகாயத்தில் குடியிருங்கள்




ஆறு மாதங்கள் கழித்துச் சூரத்துக்குச் சென்றேன். எனக்குச் சரக்கு அனுப்பிய கம்பெனியார் வீட்டில் தங்கினேன். காலைக் குளியலையும், ஆகாரத்தையும் முடித்துக் கொண்டு, எனக்குப் பரிச்சயமான மற்றொரு கம்பெனியாரை, - சிவாஜி கம்பெனி என்று வைத்துக் கொள்ளுவோமே, பார்க்கச் சென்றேன்.

சூரத்தில் உள்ள மிகப் பெரிய ஜரிகைக் கம்பெனிகளில் சிவாஜி கம்பெனியும் ஒன்று. அவர்களுடைய ஏஜண்டு ஒருவர் ஏற்கனவே கும்பகோணத்தில் இருந்தார்; இரண்டாவது ஏஜண்டு நியமிக்கிற வழக்கம் இந்தக் கம்பெனியாருக்கு இல்லை; ஆகையால் எனக்குச் சரக்கு அனுப்பும்படி அவர்களை நான் கேட்கவே இல்லை; நட்பு முறையில் தான் அவர்களைச் சந்திக்கப் போனேன்.

அவர்கள் கொடுத்த தேநீரைப் பருகியதும் சிவாஜி கம்பெனி மானேஜர் கேட்ட முதல் கேள்வி: ''எங்கள் சரக்கை நீ விற்பனை செய்கிறாயா?''

இந்தக் கேள்வியை எதிர்பாராத நான் மகிழ்ச்சியால் அதிர்ந்து விட்டேன்; அந்தக் கம்பெனியின் ஏஜன்ஸிக்காகத் தவம் கிடக்கும் எத்தனையோ ஜரிகை வியாபாரிகள் இருக்க, அவர்களாகவே வலிய வருவது என்றால்—

''முன்பே உங்களுக்கு ஓர் ஏஜண்ட் இருக்கிறாரே!'' என்றேன்.

''இருந்தால் என்ன? இரண்டாவது ஏஜண்ட் நியமிப்பது எங்கள் இஷ்டம்; எங்கள் பணத்தைக் கொண்டு நாங்கள் தயாரிக்கிற சரக்கை யார் மூலமாகவும் நாங்கள் விற்போம் எழுந்திரு; பாக்டரிக்குப் போய் வேண்டிய சரக்கைத் தயார்செய்து கொள்!'' என்று அன்புக் கட்டளை இட்டார் மானேஜர்.

ஒரு வாரத்துக்குப் பிறகு நான் ஊர் திரும்பும்போது, சுமார் முப்பதாயிரம் ரூபாய்ச் சரக்கு எனக்குப் பின்னால் ரயில்வே பார்சலில் வந்து கொண்டிருந்தது.

சொந்த முதலீடு எவ்வளவு வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் கடன் வாங்கும் வாய்ப்புக்கள் தொழில் அபிவிருத்திக்கு அவசியம் என்பதை வியாபாரிகள் அறிவார்கள்.

தொழில் தொடங்கிய போது இருந்த அடக்கமான ஆசையை நான் மறந்து விட்டேன்; முதல் ஆண்டிலேயே என் வரவுசெலவு பல லட்சங்களைக் கடந்தது. இதற்கு, என் அறிவும் திறனும் காரணம் என்று கூற முடியுமா?

''எங்கள் சரக்கை விற்றுத் தந்து எங்களைக் கௌரவிக்க வேண்டும்'' என்று வந்தார் இன்னொருவர்; சந்திரவதன் என்று அவரை அழைப்போம்; சொன்னதுடன் நில்லாமல் சரக்கும் அனுப்பத் தொடங்கினார்.

ஒரு முறை அவர் கும்பகோணம் வந்தார். அந்தச் சமயம் பார்த்து, சிவாஜி கம்பெனியிடமிருந்து ஏராளமாகச் சரக்கு வந்தது. அதைக் கண்ட சந்திரவதனுக்குப் பொறுக்கவில்லை. ''இனி சிவாஜி கம்பெனி சரக்கை விற்கக் கூடாது. வந்த சரக்கை வாபஸ் செய்யும்வரை நான் சாப்பிடமாட்டேன்'' என்று உண்ணாவிரதம் ஆரம்பித்து விட்டார்.

எனக்கோ தர்ம சங்கடமாக இருந்தது. சிவாஜி கம்பெனியார் வருத்தப்படுவார்களே என்கிற வேதனை. ஆனால் சிவாஜி கம்பெனி சரக்கை விற்பனை செய்தால் இரண்டு சத விகிதம்தான் லாபம் கிடைக்கும்; ஏராளமாகக் கடன் வாங்கி, கடன் கொடுக்க வேண்டும். சந்திரவதனின் சரக்கில் நூற்றுக்குப் பத்துப் பதினைந்து விகிதம் லாபம் கிடைக்கும். இந்தச் சரக்கு பெரும்பாலும் ரொக்கத்துக்கு விற்பனை ஆகும். தொழில் ரீதியாகப் பார்த்தாலும், சந்திரவதனுடன் தொழில் செய்வதே லாபகரமானது. தவிர, அவர் கொண்டாடிய சகோதர பாசம் வேறு! ஆகவே, சிவாஜி கம்பெனியாரின் சரக்கைத் திருப்பி அனுப்பி, அவர்களுடைய ஜரிகையை என்னால் விற்க இயலவில்லை என்று கடிதம் எழுதினேன்.

தம்பி சந்திரவதன் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டு சூரத்துக்குப் போனதும் ஜரிகை மழையாகக் கொட்டுவதாய்த் தம் குழந்தைகள் மீது ஆணையிட்டு விட்டுத் திரும்பினார். அங்கே போனதும் அவருக்கு ஒரு மதுரை அன்பரின் நேசம் கிடைத்தது; மதுரைக்காரர் பெரும் பணக்காரர். ஆகவே, சந்திரவதனின் பாசம் அந்தப் பக்கம் சாய்ந்தது; எனக்குச் சரக்கு அனுப்புவதைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வந்து, வருட முடிவுக்குள் சரக்கு அனுப்புவதையே நிறுத்தி விட்டார்! அது மட்டும் அல்ல, தப்புக் கணக்குக் காட்டி என்னை இருபதாயிரம் ரூபாய் வரை மோசம் செய்திருப்பதையும் அப்போதுதான் கண்டு பிடித்தேன்!

அப்புறம் என்ன? சிவாஜி கம்பெனியிடம் சரக்குக் கேட்க வழி இல்லை; தம்பி சந்திரவதன் சரக்கு அனுப்பவில்லை. புதிய ஏஜன்ஸி தேடி அலைய வேண்டிய தேவை ஏற்பட்டது.

பகை நடுவிலே அன்பும், புகை நடுவிலே தீயும், பெருந் துன்பங்களுக்கிடையே இன்பமும் இருப்பது போல, எனக்கு அறிமுகமான ஜரிகைத் தொழிலில் எத்தனையோ ஏமாற்றுகளும் மோசடிகளும் இருப்பினும் நேர்மையான வாழ்க்கைக்கும் வழியுண்டு. இல்லாவிட்டால் எண்ணற்ற மக்கள் இத் தொழிலில் ஈடுபட்டிருப்பார்களா? சிவபெருமானைப் போன்று பொன் மயம் படைத்த சூரத் தொகுதிவாழ் மக்கள் ஸ்ரீ மொரார்ஜி தேசாய், தங்கள் வோட்டுக்களைப் பெற்றுத் தங்கள் தலையிலேயே இப்படிக் கையைப் பார் என்று கனவிலும் கருதியிருக்க மாட்டார்கள்! ஆணவம் மிகுந்து ஆண்டவனது தலையிலேயே கை வைக்க முயன்ற பஸ்மாசுரனின் கதை ஸ்ரீ மொரார்ஜிக்கு மறந்திருந்தால் நினைவூட்ட வேண்டியதுதான்!

# ஒவ்வொரு குடும்பமும் வாங்கக்கூடிய
# உயர் ரக டால்கம் பவுடர்!




# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்

## குளுமையானது, நறுமணமிக்கது, புத்துணர்ச்சி யூட்டுவது

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் குடும்பத்தினர் அனைவரும் எல்லாப் பருவ காலங்களிலும் உபயோகிக்க ஏற்ற உன்னத டால்கம் பவுடர். இதமளிக்கும் துல்லிய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வறுத்தெடுக்கும் கோடையிலும் உங்களை நாள் முழுவதும் சுகமாக இருக்க உதவும். புழுக்கமான காலத்திலும் இனிய நறுமணமுள்ள பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் பூராவும் சுகந்தமான புத்துணர்ச்சியுடன் வைக்கும்!

உங்கள் குடும்பத்தினருக்காக ஒரு டின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் இன்றே வாங்குங்கள்—இப்பொழுது 3 சைஸ்களில் கிடைக்கிறது!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. யில் இணைக்கப்பட்டது)

# அக்னியும் அவள்!

ஸ்ரீ வேணுகோபாலன்



"தோத்திரம், சாமி!"

பார்த்தசாமி நிமிர்ந்து பார்த்தார். கண்ணாடி சன்னல் வழியே வெளிச்சம் தேவ கிருபை போல் இறங்கித் தரையை முத்தமிட்டிருந்தது.

திரையை நீக்கி மாலே உள்ளே வந்தாள். கள்ளிக் கட்டுக்களைத் 'தொப்'பென்று மூலையில் எறிந்தாள். மேஜை மீதிருந்த வெண்கலச் சிலுவையில் சென்று சிலுவை சமிக்ஞை செய்து கொண்டாள். பிறகு, நிமிர்ந்து சாமியாரைப் பார்த்தாள்.

அவள் கண்கள் ஆச்சரியத்தில் மலர்ந்தன.

"உடம்பு சரியில்லையா, சாமி?"

"ம்!"

"மருந்து சாப்பிட்டீங்களா?"

"ம்."

சாமியார் கையை நீட்டிப் பழைய டப்பா ஒன்றை எடுத்தார். மூடியைத் திறந்து அதனுள்ளிருந்து பிஸ்கட் ஒன்றை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

"நான் வரேன், சாமி!" என்று கூறிக் கிளம்பினாள்.

நாழிகை ஏறிக் கொண்டிருந்தது. சாமியார் படுக்கையிலிருந்து மெல்ல இறங்கினார். ஒரு கணம் 'லொல்' என்று இருமல் அவரைக் குடைந்தெடுத்தது. ஒரு கையால் கட்டிலைப் பிடித்துக் கொண்டு, மறு கையால் மார்பை அமுக்கிக் கொண்டார். பிறகு "ம்...ம்..." என்று ஹுங்காரமிட்டு மெள்ள நடந்தார்.

திரையைத் தள்ளி வெளியே எட்டிப் பார்த்தார். பனி இன்னும் முழுவதுமாகக் கலையவில்லை. தூரத்தில், வெகு மெல்ல, அடிவாரத்தில், பிஸ்கட்டைக் கடித்துக் கொண்டு மாலே தனியாகப் போவது தெரிந்தது.

பக்கத்தில் தேவாலயம் சோர்ந்து படுத்திருந்தது. மரத் தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு கதவுகளை உள்ளே தள்ளினார். கதவுகள் 'கீச் கீச்' என்றும் 'ஓ'வென்றும் பயந்த குரல்களாய்க் கத்தின.

தூணருகில் தொங்கிக் கிடந்த கயிற்றைச் சாமியார் இழுத்து விட்டார். 'டணார், டணார்' என்று மணி ஒலிக்கத் தொடங்கியது.

நத்தம் கிராமத்தின் மக்களுக்கு இந்த ஒலி பரம்பரையாகக் கேட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால், இப்போது அந்த ஓசையின் திண்மை சாமியாரின் சக்தி தளர்வது போலவே குறைந்து வருவதையும் அவர்கள் கண்டு கொண்டிருக்கிறார்கள்.

''பிதாவே! உங்கள் நாமம் அர்ச்சிக்கப் படுவதாக! விசுவசிக்காத மனிதர்களிடையே என்னை இன்னும் எவ்வளவு நாட்கள் வைத்திருக்கப் போகிறீர்? உமது திருக் குமாரனது நம்பிக்கை எப்போது இந்தப் பாமர மக்களிடையே பரவப் போகிறது?'' சாமியார் மண்டியிட்டுப் பிரார்த்திக்கிறார்.

பிறகு எழ முயல்கிறார். முட்டுக்கள் இரண்டும் நோவெடுக்கின்றன. ''அப்பா, அப்பா!'' என்று பற்களை இறுகக் கடித்துக்கொண்டு மெள்ள எழுந்து விடுகிறார்.

''கர்த்தரே! அன்றாட நியதிகளைச் செய்யக் கூட இந்த உடல் வலுவற்றுப் போய்விட்டதே!'' என்கிறார்.

சிறிது காலம் முன்னால் வரையில் சாமியார் காலத்தை வகுத்து வைத்து, கடமை பிறழாது வேலைகளைச் செய்து வந்தார். காலை ஐந்து மணிக்கே எழுந்து குளித்துவிடுவார். ஆறு மணிக்குத் தேவாலய மணியைப் புரட்டி விடுவார். வழிபாடு முடிந்து பிறகு வெகு நேரம் சுவிசேஷம் வாசிப்பதில் ஈடுபடுவார்.

ஒன்பது மணிக்கெல்லாம் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஊரை நோக்கிப் புறப்படுவார். முதுகில் ஒரு மூட்டையையும், கையில் ஒரு கோலையும் எடுத்துக் கொள்வார். போகிற வழியில் வண்டிப் பாட்டையில் ஏதாவது கற்கள் பெயர்ந்திருந்தால் அவைகளைத் தட்டிச் சமன் செய்வார். மேட்டுச் சாலையில் ஏதாவது வண்டி ஏறுவதற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தால் வண்டியின் பின்புறத்தை தெம்பிக் கொடுத்து, மாடுகளுக்கு ஒத்தாசை புரிவார்.

ஊரில் சாமியாரைக் கண்டால் யாவருக்கும் ஒரு பயபக்தி உண்டு.

நேராகக் கிராமப் பள்ளிக்குப் போவார். பிள்ளைகளுக்கெல்லாம் பப்பர்மிண்டுகளை வழங்குவார்.

''ஏண்டா, இசக்கி! சிரங்கு எப்படி இருக்கு?'' என்று ஒரு பையனை இழுத்துக் கைகளைப் பார்ப்பார். பிறகு வெந்நீர் கொண்டு வரச் சொல்லி அதில் அமிலத்தைக் கலந்து, அவன் கைகளைக் கழுவி, வெண் மருந்துப் பொடியைத் தூவிவிட்டுப் போவார்.

''ஏண்டா, சங்கிலி! வேட்டி ஏன் இப்படி கிழிஞ்சிருக்கு? எங்கேபோய் விளையாடுனாய்?'' என்பார். பிறகு அவனைக் கிட்டே இருத்தி, தம் மூட்டையிலிருந்து ஊசி நூல் எடுத்துத் தைக்க ஆரம்பித்து விடுவார். அப்படித் தைக்கும்போது 'ஈசாப்பின் கதை'களை வெகு அருமையாக எடுத்துச் சொல்வார்.

சமயங்களில் தாம் பிறந்து வளர்ந்த ஸ்பானிஷ் நாட்டின் நாடோடிக் கதைகளைச் சொல்லுவார். அப்போதெல்லாம் அவர் கண்களில் ஓர் அசாதாரண ஒளி தோன்றி விடும். மனம் நெகிழ்ந்து உள்ளே விம்மல் தோன்றி விடும்.

அன்று அந்திப் போதில் தேவாலய வெளிப்புறத்தில் உள்ள ஒரு கல்லின்மீது சாமியார் அமர்ந்திருந்தார். மாலை ஒரு மண் சட்டியில் ஆட்டுப் பாலுடன் அவர் அருகில் நின்று கொண்டிருந்தாள். இது அவளது தினசரி வழக்கம்.

''மாலே!'' என்றார் சாமியார், அவளிடமிருந்து பாலை வாங்கிக்கொண்டு. ''தேவனது கிருபை அளவிறந்தது. இல்லாத இடத்தில் இருக்கும்படி செய்வார். கிடைக்காத பொருளைக் கிடைக்கும்படி செய்வார்.''

மாலை அவர் சொன்னதைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அவளைச் சுற்றி அவளது ஆடுகள் கத்திக்கொண்டு நின்றன.

சாமியார் கண்களை இடுக்கிக்கொண்டு அவளைப் பார்த்தார். அந்தி நேரத்தின் சிவந்த ஒளி அவள் மீதும், அவளது ஆடுகள் மீதும் படிந்திருந்தன. மாலைக்கு எட்டு வயது தான் இருக்கும். எண்ணெய் காணாமல் அவள் தலை செம்பட்டை படர்ந்திருந்தது. அழுக்கேறிய ஒரு துண்டை இடுப்பில் சுற்றிக் கொண்டு அவள் நின்றுகொண்டிருந்தாள்.

''மாலே! உனக்கு அம்மா இருக்காங்களா?''

''ஓ. இருக்காங்களே!''

''வீட்டுக்குப் போனால் உன்னை 'மாலே' என்று அன்பாகக் கூப்பிடுவாங்களா?''

''ஊஹூம்; அப்படிக் கூப்பிட மாட்டாங்க.''

''உனக்குச் சோறு ஊட்டி விடுவாங்களா?''

''ஊஹூம், நானேதான் சாப்பிடுவேன்!''

சாமியார் சிரித்துக் கொண்டார்.

''ஏன் தலை வாராமல் இருக்கிறாய்? உங்க அம்மாவைக் கொண்டு வாரிப் பூவைக்கச் சொல்லக் கூடாது?''

''அதெல்லாம் எங்கம்மா செய்ய மாட்டாங்க. எங்கப்பாதான் செய்வாங்க!''

சாமியார் யோசனையில் விழுந்து விட்டார்.

''வரேன், சாமி!'' என்று கூறிவிட்டு மாலை ஆடுகளை விரட்டத் தொடங்கினாள்.

இருளாகிக் கொண்டிருந்தது. சாமியாருக்கு எழுந்திருக்க மனமில்லை. அப்படியே அந்தக் கல்மீது அமர்ந்திருந்தார்.

திடீரென்று பரம்பின் அடிவாரத்திலிருந்து, ''அம்மே! அம்மே!'' என்று ஆடுகள் இடும் ஓலம் கேட்க ஆரம்பித்தது.

சாமியாருக்குப் புல்லரித்தது. எழுந்து நின்றார். 'அம்மா' என்ற ஒரு சொல் உலகத்தின் எல்லா மொழிகளிலும் எவ்வளவு இனிமையாய் ஒலிக்கிறது. பேச்சற்ற ஜீவன்கள்கூட இந்த ஒரு சொல்லை எவ்வளவு தெளிவாகச் சப்திக்கின்றன?

சாமியார் ஆலயத்துள் நுழைந்தார்.

மணிக் கயிற்றை ஒரு தரம் இழுத்து விட்டார். ஆலய மணி ''அம்மா, அம்மா'' என்று இரு தரம் இறைந்துவிட்டு ஓய்ந்தது.

''பிதாவே!'' சாமியார் மண்டியிட்டார். கண்களில் நீர் பனித்து விட்டது. பிரார்த்தனையை முடிப்பதற்குச் சற்று நாழிகையாகி விட்டது. முடிந்தவுடன் மெள்ள எழுந்தார். 'தாயும் மகனும்' உள்ள இருவுருவப் படம் கண்ணில் விழுந்தது.

''அம்மா!''

சாமியார் மீண்டும் மண்டியிட்டு அமர்ந்து விட்டார். சிற்றலைகள் மீது கால ஒளி நடுங்கு

பினிக்ஸ்
ஆடைகள்
நவ நாகரீகக்
குறிப்புகளில்
முதலிடம்
பெறுகின்றன
வாயில்கள்
பாப்லின்கள்
சூட்டிங்குகள்




BPY-4

வது போல் அவர் நெஞ்சத்தில் நினைவுகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

"டெல்லஸ்!"

சாமியார் திடுக்கிட்டார். தன்னை இந்த பெயர் சொல்லி யார் அழைக்கிறார்கள்?

"டெல்லஸ்! டெல்லஸ்!"

அழைக்கும் குரல் அம்மாவினுடையது தான்! அவர் கண்கள் பொங்கிவிட்டன. நினைவுகள் சரசரவெனத் தடம் பிடித்து ஓடத் தொடங்கி விட்டன.

மனக் கண் முன் காட்சி விரிந்துவிட்டது. இஸபெல் — அவர் அன்னை — பிராக் தைத்துக் கொண்டிருக்கிறாள். வெளியே தந்தை சலவைக் கற்களைச் செதுக்கிக் கொண்டிருக்கிறார்.

சமயங்களில் இஸபெல்லின் கண்களில் நீர் வருகிறது. டெல்லஸ் எழுந்து வருகிறான். "ஏன் அழுகிறாய் அம்மா?" என்று கேட்கிறான். இஸபெல் அவனை அணைத்துக் கொள்கிறாள். டெல்லஸ் அப்போது பத்து வயது நிரம்பிய சிறுவன்.

இஸபெல்லின் இடுங்கிய கண்களை அவன் பார்க்கிறான். அதன் ஓரங்களில் வெளிச்சம் துடித்துக் கொண்டிருக்கும் கண்ணீரின் ஈரத்தைக் காண்கிறான்.

வாசலில் தந்தை முனகிக்கொண்டே வேலை செய்கிறார். அது அவர் வழக்கம்; பொழுது போக்கும் கூட.

"ஏன் அம்மா அழுகிறாய்?"

"உன் தந்தை சாப்பிடுவதற்கு 'ஜாம்' இல்லையாம். திட்டுகிறார்."

"ஏன், 'ஜாம்' வாங்கவில்லை?"

"பணம் வேண்டாமா?"

இஸபெல் அவனது நெற்றியைத் தடவி மெல்ல நீவி விடுகிறாள். திராட்சைத் தோட்டங்களில் கத்தரிக்கோல் பிடித்து வேலை செய்து அவள் கையெல்லாம் கரண் விழுந்திருக்கிறது. அவள் நீவி விடும் இடமெல்லாம் சொர சொரவென்றிருக்கிறது.

இதற்குள் தந்தை நகர்ந்து நகர்ந்து வரும் சத்தம் கேட்கிறது. அவர் முகத்தில் கோபம் கொதிக்கிறது. "இஸபெல்!" அவர் கதவின் அருகில் சாய்ந்து கொண்டே கத்துகிறார். அவரால் நடந்து வர முடியாது. கால்களை வாதம் கொண்டு போய்விட்டது.

"உங்கள் பேச்சை நான் கேட்கத் தயாராயில்லை. குழந்தைகளுக்கு ரொட்டி வாங்குவதற்குத்தான் மீதிப் பணம் இருக்கிறது. உங்களுக்கு வேண்டியதை வாங்கிவிட்டால் குழந்தைகள் பட்டினிதான்!"

"இஸபெல், மூடமே! இங்கே வா!" - என்று மீண்டும் தந்தை கத்துகிறார். இஸபெல் எழுந்து, பிறகு மெல்லப் போய், தந்தை காட்டிய இடத்தை நோக்குகிறாள்.

டெல்லஸும் எழுந்து இஸபெல்லைப் பின் பற்றுகிறான். அங்கே தாழ்வாரத்தில் நிறைய நினைவுச் சின்னக் கற்கள் தென்படுகின்றன. சமாதிகளுக்கு வேண்டிய நினைவுச் சின்னங்களில் வார்த்தைகளைப் பொறிப்பது தந்தையின் தொழிலாக இருந்து வருகிறது.

தந்தை காட்டிய இடத்தை இருவரும் நோக்குகிறார்கள். அங்கே, ஒரு சமாதிக் கல்லின் மீது தந்தையின் பெயரே பொறித்து வைக்கப்பட்டிருக்கிறது.

"மூடமே! அது என் சமாதிக் கல்! இந்த வருடத்தின் எண்ணை அதில் நான் பொறிக்கப் போகிறேன். நான் போன பிறகு அழு! அழு! என் விருப்பத்தை நிறைவேற்றாது போனாலும் அழு!"—தந்தை சபிக்கிறார்.

இரவு முழுவதும் அன்னை உறங்கவேயில்லை. கண்ணீரால் பாயை நனைத்துவிடுகிறாள். இடையிடையே "டெல்லஸ், டெல்லஸ்!" என்று அவனை இழுத்து அணைத்துக் கொள்கிறாள்.

நாட்கள் ஓடுகின்றன. டெல்லஸ் இப்போது திராட்சைக் கம்பெனியில் வேலைக்கு அமர்ந்திருக்கிறான். அவனது படிப்பு நின்று விட்டது. குடும்பத்துக்கு வருமானம் போதவில்லை. எட்டு மணி நேரமும் மதுப் புட்டிகளுக்குக் கார்க்குகளைப் பொருத்த வேண்டியது அவன் வேலை. அதி காலையிலேயே வேலைக்குப்போக வேண்டியிருக்கிறது. [கார்க்குகளைப் பொருத்திப் பொருத்தி அவன் கைகள் காய்த்து விடுகின்றன. அவ்வப் போது எதிரே உள்ள திறந்த ஜன்னல் வழியே அவன் மனம் குதித்து ஓடுகிறது. மாலை நேரத்து மந்த ஒளியில், பையன்கள் துள்ளிப் பிடித்து ரிக் பந்தை எறிந்து விளையாடுவது அவனுக்கு எவ்வளவு இன்பத்தைக் கொடுக்கிறது? அவர்கள் விளையாடுவதை அவன் மெய் மறந்து பார்க்கும்போது, மேஸ்திரியின் பிரம்பு அவன் முதுகில் சுரீரென்று விழுகிறது. கண்களில் நீர் விழுந்து, விழிகள் தேய்ந்த கண்ணாடிகள் போல் மாறிவிடு

கின்றன. டெல்லஸ் தம்பிகளைச் சுற்றி வரப் பார்க்கிறான். அவனைப் போல் இருபது பிள்ளைகள் கார்க்குகளைப் பொருத்திக் கொண்டே அவனைப் பார்க்கிறார்கள். எல்லோரும் ஏழைமையின் வடிகட்டிய துக்கத்தை அருந்திவிட்டு, கை விரல்களைப் போல், மனமும் காய்ந்துப் போனவர்கள். இன்றைக்கு ஒருவன் படும் அடி, நாளை மற்றொருவனுடையது. இது அவர்களுடைய வாழ்க்கையில் ஒரு சாதாரண நிகழ்ச்சியாகப் போய் விட்டது.

''டெல்லஸ்!'' இஸபெல் ஒரு நாள் இரவு அவன் முதுகைத் தன் விரல்களால் தடவிக் கொண்டே கேட்கிறாள். ''உன் முதுகு ஏன் இப்படிக் காய்ந்துப் போயிருக்கிறது?''

''கம்பெனியில் என்னை அடித்தார்கள். நான் புட்டியை உடைத்துவிட்டேன்!''

இரவில் இஸபெல் வெகு நேரம் அழுகிறாள். அவள் அவனுக்காக அழுவது, அவனது மனத்தில் இன்னும் துக்கத்தை அனுபவிக்க ஓர் சகிப்பைத் தருவது போலிருக்கிறது.

எவ்வளவு அடிகள்? எவ்வளவு உதைகள்? ஆனால் ஒரே ஒரு புகலிடம் இஸபெல்தான். தாயைப் பார்த்ததும் வலி மிதமாகி மறைந்து, இன்பம் சுரந்து விடுகிறது.

பருவங்கள் மாறிவிடுகின்றன. டெல்லஸ் இளைஞனாகி நிற்கிறான். முகம் உலர்ந்த திராட்சை போல் ஒட்டிக் கிடக்கின்றன. கண்கள் வெறுமையைக் கண்டு வெளிறி, வாழ்வில் உணவு, உழைப்பு என்ற சிறு வெளிக்கப்பால் பார்க்கும் சக்தியற்றுக் கிடக்கின்றன.

தந்தை இப்போது சக்தியற்றுப் போய் விட்டார். உணவைக்கூட இஸபெல்தான் ஊட்ட வேண்டியிருக்கிறது.

ஒரு நாள் இரவு! டெல்லஸ் தன் வீட்டுக் கதவைப் பலமாக இடித்துக் கொண்டிருக்கிறான். ''யார்? யார்?'' என்று இஸபெல்லின் குரல் கேட்கிறது. கதவைத் திறந்ததும், டெல்லஸ் சுழற் காற்றைப் போல் உள்ளே பாய்ந்து நுழைந்து, தொப்பியை ஆணியில் மாட்டிவிட்டு, ''அம்மா!'' என்கிறான்.

இஸபெல் திடுக்கிட்டு நிற்கிறாள்.

''நான் ஒன்று சொல்லுவேன். கேட்டு நீ பயப்பட மாட்டாயே?''

''பயம் என்னை ஒன்றும் செய்யாது!''

''நான் இந்தியாவுக்குப் போகிறேன். கிறிஸ்துவ மத போதகர் குழுவில் நான் சேர்ந்துவிடப் போகிறேன். இனி நம் குடும்பத்துக்கு வேண்டிய பணத்தை மிஷனால் குடும்பத்தார் அனுப்பி வருவார்கள். அவர்கள் விருப்பப்படிதான் நான் இந்தியா போகிறேன்.''

இஸபெல்லின் கண்கள் நிறைந்துவிடுகின்றன. ''போதகர் வேலை என்பது ஒரு தொழிலா, டெல்லஸ்?''

''தொழில் இல்லை அம்மா! புனிதமான கடமை! அந்தப் புனித சேவை புரிவதனால் நீயும், நம் குடும்பமும் அதனால் பயன் பெற்றால் அதுவும் நல்லதுதானே!''

அன்று முழுவதும் டெல்லஸ் நிலை கொள்ளாது குதித்துக் கொண்டிருக்கிறான்.

புறப்பட வேண்டிய தினம். பழைய தோல் பை ஒன்றுதான் அவனது உடைமை. புறப்படுகிறான். இஸபெல் கண்ணீர் தோய்ந்த முகத்தோடு நிற்கிறாள். அவன் படகில் ஏறிக்கொள்கிறான். இஸபெல்லின் உரு அப்படியே நிற்கிறது. அவள் கறுப்பு அங்கியைத் தரித்திருக்கிறாள். கழுத்தைச் சுற்றி ஒரு கம்பளித் துணி ஒன்றைக் கட்டியிருக்கிறாள். கால்களிலே கிழிந்த ஸ்டாக்கின்ஸும், ஒரு பழைய ஜோடி பூட்ஸும். அவள் அப்படியே நிற்கிறாள்.

இன்னும் சாமியாரது கண்கள் முன்னால் அந்த உருவம் நின்றுகொண்டிருக்கிறது. அவரது தொண்டை துக்கத்தில் அடைத்துக் கொள்கிறது. ''அம்மா! அம்மா!'' என்று மெல்லப் புலம்புகிறார். ''டெல்லஸ்!'' என்று இனிய குரல் ஸ்பானிஷ் தேசத்திலிருந்து ஆயிரம் மைல்கள் தாண்டி வந்து அவர் காதில் விழுவது போலிருக்கிறது. சாமியார் படுக்கையில் புரள்கிறார்.

இடையில் எண்ணங்களும் எழுகின்றன. ''இவ்வளவு நாட்கள் கழிந்த பிறகு ஏன் தாயைப் பற்றிய நினைவுகள் தோன்ற வேண்டும்? கர்த்தரின் பணியை எடுத்துக் கொண்ட பிறகு, உலகத்தையே குடும்பமாகக் கொள்ளவேண்டியவர், தம் சிறு குடும்பத்தை மாத்திரம் நினைக்கலாமா?''

பொழுது புலர்ந்தது. சாமியார் தேவாலயக் கதவைத் திறந்தார். தேவமாதாவின் படத்தைத் தரிசிக்கும் நோக்கம் கொண்டு நேரே தூணருகே சென்றார். அங்கே அவர் தலை நிமிர்ந்து மேலே பார்த்தபோது அவர் திடுக்கிட்டு விட்டார். தூணில் மாட்டியிருந்த படம் தரையில் விழுந்து கண்ணாடி நொறுங்கியிருந்தது. இரவில் பலத்த காற்றும் மழையும் வீசியிருக்க வேண்டும்.

பரபரப்புடன் தரையில் மண்டியிட்டமர்ந்து படத்தைக் கையில் எடுத்தார். மீண்டும் அவர் திடுக்கிட வேண்டி வந்தது. கூரையிலிருந்து ஒழுகித் தரையில் வடிந்திருந்த தண்ணீர், படத்தில் முகம் முழுவதையும் கரைத்து மறைத்துவிட்டது. ஸ்பானிஷ் தேசத்தில் ஐம்பது வருடங்களுக்கு முன், கைதேர்ந்த ஓவியர் ஒருவர் எழுதிய வர்ணப் படம் அது.

''அம்மா!''

சாமியார் கண்ணீருடன் கீழே சாய்ந்து விட்டார். தள்ளாடிப் போய் உட்கார்ந்ததில் உள்ளங் கையில் சில கண்ணாடிச் சில்லுகள் குத்த இரத்தம் பொத்து வந்தது.

''தாயே! இந்தச் சிறுவன் என்ன தவறு செய்தேன்? எனக்கு ஆதாரமாக இருக்க உன் முகமும் மறைந்து விட்டதே!''

சாமியார் கண்களில் குபுகுபுவென நீர் உடைத்து வந்தது. தள்ளாடிப் போய் எழுந்தார். ''தாயே! தாயே!'' என்று முனகிக் கொண்டார். மீண்டும் தம் அறைக்கு ஏகி, படுக்கையில் சோர்ந்து படுத்துவிட்டார்.

பொழுது போய்க் கொண்டிருந்தது. மாலை நேரம் அணுகிக் கொண்டிருந்தது. சாமியாரின் கண்கள் விழித்துக் கொண்டன. காலையில் தோன்றிய துக்கம் இன்னும் நெஞ்சத்தில் கனத்துக் கொண்டிருந்தது. சட்டென்று அவர் மனத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. 'மாலையில் வீட்டுக்குச் சென்று அவனது தாயாரைப் பார்த்தால் என்ன?'

எல்லோரும் விரும்பும் டானிக்

# S.K.P. சியவன டோன்

ஆரோக்யத்திற்கும், வலிமைக்கும்






## ஸ்ரீகிருஷ்ண பார்மஸி

(ஸ்தாபிதம் 1913)

கிளை: 145, பிராடீஸ் ரோடு,
மைலாப்பூர், சென்னை-4.

EP-SKP-5




**எச்சிற்றேமல்,**

**படை, சொட்டுப்புண்கள், கரப்பான்,**

பி-டெக்ஸ், பம்பாய்-3

எழுதுவதில்
கவர்ச்சியும்
இன்பமும்
பெறுவதற்கு

**Iris INKS**

ஐரிஸ் இங்குகள்
5 மங்காத
நிறங்களில்

PERMANENT ROYAL BLUE Iris

RECHLABS Iris INK MADE IN INDIA

ரிஸர்ச் கெமிகல் லாபரட்டரீஸ்
லாட்டீஸ் பிரிட்ஜ் ரோடு, சென்னை-20
550, எட்டாவது மெயின் ரோடு,
மல்லேஸ்வரம், பெங்களூர்-12

எண்ணம் உடனே செயல்படத் தொடங்கியது. அவர் அடிவாரத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தார். நடையில் ஒரு வேகம் வந்துவிட்டது.

'மாலேயின் தாயாரைச் சந்திக்க வேண்டும். தன் மகள் மீது அதிக கவனம் செலுத்தும்படி அவளைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.' சாமியாரின் மனத்தில் எண்ணங்கள் ஓடின. 'எல்லாவற்றையும் விடத் தாய் ஒருத்தியைத் தரிசித்த மன ஆறுதலேத் தானும் பெற வேண்டும்.'

ஊரை அண்டும் போது அவர் உடல் தள்ளாடி விட்டது. நெல்லி மரத்தடியில் நின்று தம் வியர்வையைத் துடைத்து எடுத்தார்.

"தோத்திரம் சாமி!" மாலே துள்ளி வருவதைப் பார்த்ததும் அவர் கண்கள் மகிழ்ச்சியில் இடுங்கிக் கொண்டன.

"மாலே! உன் அம்மாவை நான் பார்க்க வேண்டுமே! அழைத்துப் போகிறாயா?"

"ஓ! வாங்க!"

மாலே முன்னால் நடக்கத் தலைப்பட்டாள். பின்னால் சாமியார் நடந்தார். தென்னந் தோப்பினூடே மாலே புகுந்து சென்றாள். சுற்றி வர நந்தியாவட்டைப் பூக்கள் குலுங்கியிருக்கும் ஒரு தோட்டத்துள் நுழைந்தாள். அங்கே ஒரு வெள்ளைக் கட்டடத்தின் முன் நின்றாள்.

சாமியார் அவளருகே வந்து நின்றார்.

வெள்ளைப் புருவத்தின் கீழ் அவர் கண்கள் இரண்டும் இரு கங்குகள் போல் அழலிட்டுக் கொண்டிருந்தன. அவர் அருகில் வந்து நின்ற கண நேரத்துள், மாலே அந்தக் கட்டடப் படியேறிக் கதவைத் திறந்தாள். சாமியார் கண்களை உயர்த்தி உள்ளே பார்த்துத் திடுக்கிட்டுவிட்டார்.

"இதுவா உன் அம்மா?"

காட்டிலுள்ளே கையில் சூலத்துடன் உட்கார்ந்த பாவனையில் இருக்கும் காளியின் சிலையைக் கண்டதும் சாமியாரது மனம் சுருங்கி விட்டது. உடன் அருவருப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

"இதுவா, உன் அம்மா?"

"ஆமாம்!"

சாமியார் குலுங்கச் சிரித்தார். பிறகு வாய் திறந்து "ஹோ" வென்று இடிகள் உதிர்வது போல் சிரித்தார்.

சிறிது தூரம் போனபிறகு சட்டென்று நின்று திரும்பிப் பார்த்தார். மாலே அந்தக் கோவில் வாயிலிலே நின்று கொண்டு அவரையே முறைத்துப் பார்ப்பது தெரிந்தது. ஒரு கணம் அவர் மனத்துள் சிறிது இரக்கம் படர்ந்தது. 'மாலே ஒரு தாயில்லாச் சிறுமியா?'

மறு நாள் பொழுது புலர்ந்திருக்கும். சாமியார் தம் தொழுகையை முடித்துக் கொண்டிருக்கும் போது, வெளியே "சாமி!" என்று குரல் கேட்டது. வெளியே வந்தார்.

தந்தி சேவகன் நின்று கொண்டிருந்தான். அவனை வழியனுப்பி விட்டுத் தந்தியை நீட்டினான்.



## குழந்தைப் புதுமை

முத்தொளிரும் சுடர்நெற்றி மேலெல்லாம்
  முனைத்தெழுந்த குழல்சரியப்
பட்டொளிரும் சிற்றிதழில் கன்னத்தில்
  பார்வை சிரித்திருந்து பளபளக்கும்

சித்தம் போனதிசை சிறுவியப்பாய்ச்
  சிரிக்கும் கண்கள் அதிசயமாய்ப்
புத்தம் புதிய பொம்மையினைப்
  புறக்கணித்தே மறந்தது போல்.

எத்தைப் பார்த்து மலர்கின்றுள்
  எங்கே பார்த்து நினைக்கின்றுள்
சித்தம் பார்த்து நினைவுறுத்தே
  நினைக்கப் பழசாய்ப் போனதனுல்.

குத்துக் கல்போ லருகிருந்தும்
  குலவும் பொம்மை கவரவில்லை
சித்தம் கண்டது புதுமையென்றால்
  சிறுமி கண்ட புதிதெதுவோ?

(வேறு)

முத்துநிறப் பிஞ்சுகைப் பஞ்சுவிரல்
  குஞ்சுமொழிக் கிந்தக் குவலயத்தே
அத்தனை பொருளும் அதிசயமே
  அத்தனை ஒலியும் பெருவியப்பே

எத்தனை எத்தனை படித்தாலும்
  எத்தனை எத்தனை வளர்ந்தாலும்
சித்த நிறைவிற் சிறுகுழந்தை மனம்போலச்
  சேரும் பருவம் பிறிதுண்டோ?

— பண்வண்ணன்

சாமியார் அவசரத்துடன் அதைப் பிரித்தார். தந்தி ஸ்பெயினிலிருந்து வந்த கேபிள் தந்தி!

"ரூபி கிராமம் முழுதும் வெள்ளம் சூழ்ந்து விட்டது. வெள்ளம் அடித்துக்கொண்டு போன குடும்பங்களில் தங்களது குடும்பமும் ஒன்று! சடலங்கள் தேடப்பட்டுப் புதைக்கப் பட்டன. எங்கள் அனுதாபங்கள் — ரூபி கொன்ஸிலியர்கள்."

உடல் நடுக்கத்தோடு அவர் ஆலயத்துள் நுழைந்தார். கண்களில் நீர் பொங்கி எழுந்து வந்தது. புனித சிலுவை இறுகப் பற்றிக் கொண்டார். "தேவா!" என்று குரல் அவர் வாயிலிருந்து உதித்து வானைப் பிளந்து ஒலித்தது. அப்படியே விழுந்த துவளி போல் அவர் பீடத்தில் துவண்டார்.

அன்றிலிருந்து சாமியாரது பழக்க வழக்கங்களில் மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. போது

> இந்தியாவின் ஜீவசக்தி அதன் மத உணர்ச்சியிலே இருக்கிறது. தங்களுடைய முன்னோர்கள் வழிவழியாகப் பெற்று வந்த பிதுரார்ஜிதத்தை இந்தியர்கள் மறக்காத வரையில் உலகத்திலுள்ள எந்தச் சக்தியாலும் அவர்களை அழிக்க முடியாது. **—ஸ்வாமி விவேகானந்தர்**

விடுத்து வெகு நாழிகை ஆகியும் அவர் எழுந்திருப்பதில்லை. வழிபாடுகளின் நேரங்களை அவர் மறந்து விட்டார். திடீரென்று ஒரு நாள் காலையில் நான்கு மணிக்கே மணியின் நாக்கைப் புரட்டிவிடுவார். அல்லது காலை ஒன்பது மணி வரை மணியை அடிக்காது இருந்து விடுவார்.

சாமியாருக்குப் பிரமை பிடித்திருக்கிறது என்று ஜனங்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் காலை மணி ஏழு இருக்கும். ஓர் ஆள் வெளியில் நின்று வெகு நேரம் கத்தினான். சாமியார் பதில் பேச வில்லை. பிறகு அவன் உள்ளே நுழைந்து வந்து அவரைப் பார்த்தான். சாமியாருக்கு அவனை எங்கேயோ, எப்போதோ பார்த்த மாதிரி தோன்றியது. ''தோத்திரங்க!'' என்று சொல்லி மேஜைமீது ஒரு பார்ஸலை நன்கொடையாக வைத்து விட்டு வணங்கிப் போய் விட்டான்.

சாமியார் மெள்ள எழுந்தார். பார்ஸலைப் பிரித்தார். உள்ளே கேக்குகளும், பிஸ்கட்டுகளும் தென்பட்டன. அவற்றை ஜாடிக்குள் போட்டு வைத்தார். அவர் கண்கள் திடீரென்று அந்தப் பார்ஸலைச் சுற்றிய பேப்பர் மீது விழுந்தன.

அது ஏதோ ஒரு ஸ்பானிஷ் பத்திரிகையின் ஒரு தாள். அதன் மடிப்புக்களைச் சிரக்கி உற்று நோக்கினார். தமது தாய்மொழியை வெகு வருடங்கள் கழித்துப் பார்த்ததும் ஒரு புத்துணர்வு அவருள்ளே பொங்கி நுரைத்தது. ''என் தாய்மொழி!''

அப்பா! என் மனம் எப்படி இனிக்கிறது?

அந்தத் தாளை அவர் மார்போடு அணைத்துக் கொண்டார். பின் கண்களில் ஒத்திக்கொண்டு உள்ளும் புறமும் குதித்து நடந்தார்.

மீண்டும் ஒருகணம் அதை உற்று நோக்கினார். அந்தத் தாளில் ஒரு திராக்ஷைத் தோட்டத்தின் படம் தென்பட்டு விட்டது. உடன் அவர் கண்கள் முன் [illegible] கிராமமும், ஆறும், பனி மலைகளும், திராக்ஷைத் தோட்டங்களும் ஓக் மரச் சாலைகளும் விரிந்து படரத் தொடங்கின.

''என் தேசம்!'' தாளை மீண்டும் மார்புறத் தழுவிக் கொண்டார். தாளின் மறுபக்கத்தைத் திருப்பினார். இது என்ன படம்? ஏதோ விளம்பரம்! அதில் ஒரு ஸ்பானிஷ் குடியானவப் பெண் நிற்பது போல் படம் தென்பட்டது!

''என் தாய்!''

அவர் கண்களில் ஆனந்த நீர், உருக்கிய வெள்ளியாய்ப் பளபளத்துத் ததும்பி விழ ஆரம்பித்தது. இந்த இனிய நினைவிலேயே உறக்கம் பற்றிக் கொண்டது.

கண்களை விழித்தபோது, மாலை நேரம் ஆகி விட்டதை உணர்ந்தார். இவ்வளவு நேரமா உறங்கி விட்டோம்?

மீண்டும் அவருக்கு இன்ப நினைவுகள் கொழிக்க ஆரம்பித்தன. மேஜை மீது கண்களை ஓட்டினார். உடன் திடுக்கிட்டார். மேஜையின் மீது அந்தப் பேப்பரைக் காண வில்லை. உள்ளே திரும்பினார். கீழே தரையைப் பார்த்தார்.

தரை சுத்தமாகப் பெருக்கப்பட்டிருந்தது. உடன் அவருக்கு மாலாவின் நினைவு வந்து விட்டது. ஒரு வேளை அவள்தான் எடுத்துப் போயிருப்பாளோ ?

சாமியாருக்கு அழுகை குமுறி வந்தது. உடன் உடலிலும் ஒரு வேகம் புகுந்து விட்டது. எழுந்து வெளியே வந்தார். கிராமத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தார். மாலையை அவளது வீட்டில் காணவில்லை. எங்கு போயிருப்பாள்? சாமியார் யோசித்தார். உடன் விறுவிறென அவர் காளி கோவிலுக்கு வந்து விட்டார்.

''மாலா!''

மாலா காளியின் சிலை முன்னால் நின்று கொண்டிருந்தாள். கற்பூரம் ஏற்றிக் கும்பிடத் தலைப்பட்டிருந்தாள்.

''மாலா, அந்தப் பேப்பர் எங்கே?'' அவர் கத்திக் கொண்டே அவளருகில் வந்து விட்டார். உடன் அவர் பார்வை கற்பூரத்தோடு எரியும் காகிதத்தின் மீது விழுந்தது.

''ஐயையோ!''

அவருடைய அந்தப் பேப்பரும் கற்பூரத்தோடு எரிந்து கொண்டிருந்தது. பாதி கருகி விட்டது. சாமியார் அதை வேகத்தோடு பற்றி எடுத்தார். கைகளில் தீ நாக்குப் பட்டதை உடன் உதறினார். அவருக்கு அழுகையும் ஆத்திரமும் குமுறி எழுந்தன.

''மாலா! என்ன காரியம் செய்தாய்? அந்தக் காகிதத்தை ஏன் எரித்தாய்?''

''வெறும் குப்பைக் காகிதந்தானே அது!''

''குப்பைக் காகிதமா? அது என் தாய்! அது என் அம்மா!'' சாமியார் கத்தினார்.

மாலா சிறிது நேரம் திகைப்புடன் நின்றாள். பிறகு கேலிச் சிரிப்புடன், ''ஐயையோ! குப்பைக் காகிதத்தைப் பார்த்து 'அம்மா' என்கிறீரு! காகிதம் உங்க அம்மாவா ?'' என்று விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தாள்.

ஒரு கணத்துள் அந்தச் சிரிப்பு அவரை மூழ்கடித்தது. அந்தச் சிலையே சிரிப்பது போல் தோன்றியது. ''வெறும் குப்பைக் காகிதம் உன் தாயாகத் தோன்றினால், என் மண் சிலை அவள் தாயாகத் தோன்றக் கூடாது?''

சிலையே சிரிப்பது போல் இருந்தது.

சாமியார் பிரமைபிடித்தாற் போல் திரும்பினார். வெளியே வேகமாக வந்தார். வானத்தையும் பூமியையும் பார்த்தார். ஒரு சிறு யோசனை! அந்த உருவம் அவர் தாயா?

அல்லது உலகத்துக்கெல்லாம் தாயா?

ஏதோ தெற்றெனப் புலனாவது போல் தோன்றியது.

உலகமெல்லாம் அனாதியாய் ஒரு சக்தி, எல்லாருக்கும் அன்னையாக விளங்கி, எங்கும் வியாபித்து, மாலா கும்பிட்ட சிலையிலும் வியாபித்து, சாமியார் கும்பிட்ட தேவாலயத்துள்ளும் வியாபித்து, உருவுக்கெல்லாம் விரவி, உருவமற்றதாயும் நிற்கிறது என்று தோன்றியது. அது அவர் மனத்தில் தோன்றிய அநுபவத்தால். உள்ளத்தில் என்றுமில்லாத தெளிவு பிறந்திருப்பது போல் தோன்றியது!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# ஏழு வைட்டமின்கள் சேர்ந்தது, அமுல் பாலுணவு - அவை செய்வது என்னென்ன?

**வைட்டமின் ஏ**

தோலை மிருதுவாகவைத்
துக்கொள்கிறது. கண்களை
ப்ரகாசமாக்குகிறது; வளர்
ச்சிக்கு உதவுகிறது.



**வைட்டமின் பி1**

நரம்புகளை உறுதிப்
படுத்துகிறது; மார்பில்
உள்ள தசைநார்களைப்
பலப்படுத்துகிறது.



**வைட்டமின் பி2**

வாயின் ஆரோக்கியத்
திற்கு இது அவசியம்.



**வைட்டமின் பி6**

தசை நார்கள்
இளைப்பாற்றிக்கொள்ள
உதவுகிறது.



**வைட்டமின் சி**

நோய் பரவாமலும்,
சொறி பிடிக்காமலும்
தடுத்து நிறுத்துகிறது.



**வைட்டமின் டி**

எலும்புகளைப் பலப்படுத்
துகிறது; பற்களை நல்ல
முறையில் வைத்திருக்
கிறது. பக்க ரோகங்களை
யும் தடுக்கிறது.



**நியசினமைடு**

ஜீரணத்தை எளிதாக்கு
கிறது. நரம்புகளை உறு
திப்படுத்துகிறது; தோலை
ஆரோக்கியமுடன்
வைத்திருக்கிறது.



அமுல் பாலுணவில் 7 வைட்டமின்கள் சேர்ந்திருப்பதோடு சம அளவில் புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ் சத்துக்களும் கலந்துள்ளன. அமுல் சிறப்புவாய்ந்த உணவின் மதிப்பைப் பெற்றிருப்பதால் இக்காலத் தாய்மார்கள் இதையே தேர்ந்தெடுக்கிறார்கள். உங்கள் குழந்தைக்கு இது மிகச் சிறந்தது.

**அமுல்** பாலுணவில் உங்கள் குழந்தைக்குத் தேவையான
7 வைட்டமின்கள் உள்ளன.






ASP/ASF-31 TAM

